தொல்காப்பியச் சொல்லதிகாரத்தின் பொருள் விளக்கத்தை மற்றொரு பரிமாணத்தில் அணுக விரும்புவோர்க்கு இந்நூல் சிறந்த பொக்கிஷம். பலரும் சொல்லாக்கியனாரின் கருத்தில் முரண் படலாம். மாற்றங்களும் வளர்ச்சிகளும் என்றும் மாறாதது. மாற்றங்களுடன் பனுவல்களை வாசிக்கத் தொடங்கினால்தான் வாசிப்பும் அறிவும் அர்த்தப் படும். பழமையில் கால் ஊன்றிப் புதுமையில் திளைத்துத் தமிழ் உலகில் பயணிப்பவர்களுக்கு இப்பிரதி அவரவருள் ஊடாக நின்று பயணிக்கும். நானும் பயணித்துக் கொண்டிருக்கின்றேன். நீங்களும் உங்கள் பயணத்தைத் தொடங்குங்களேன்...

*-முனைவர் கி. சங்கர நாராயணன்*

விலை ரூ.250

**சொல்லாக்கியம் வெளியீடு**

தொல்காப்பியம்: சொல் அதிகாரப் பொருளும் விளக்கமும்

சொல்லாக்கியன்

# தொல்காப்பியம்

## சொல் அதிகாரப் பொருளும் விளக்கமும்



**சொல்லாக்கியன்**

# தொல்காப்பியம்

## சொல் அதிகாரப் பொருளும் விளக்கமும்

சொல்லாக்கியன்

சொல்லாக்கியம் வெளியீடு

1/1 மண்ணடி அம்மன் கோயில் தெரு,
சங்கர் அடுக்ககம், ‘சி’ தொகுதி,
ஆதம்பாக்கம், சென்னை – 600088

நூலின் பெயர் : தொல்காப்பியம்
– சொல் அதிகாரப் பொருளும் விளக்கமும்.

ஆசிரியர் : சொல்லாக்கியன்
முதல் பதிப்பு : டிசம்பர் 2017

உரிமை : ஆசிரியர்க்கு

வெளியீடு : சொல்லாக்கியம் வெளியீடு
1/1 மண்ணடி அம்மன் கோயில் தெரு,
சங்கர் அடுக்ககம், “சி” தொகுதி,
ஆதம்பாக்கம், சென்னை – 600088.
பேசி : 91–9940369834 / 001 780 838 3993
email: dheena.subramanian@gmail.com

பக்கங்கள் : 252
விலை : ரூ. 250

## ஆலோசனை

து.வே. முனை. பொற்கோ,
முனை. சங்கர நாராயணன்,
முனை. ஜெயராமன்,
முனை. ப.வேல்முருகன்,
முனை. ப. குமார்,
முனை. செந்தில் குமார்,
முனை. அ.காமாட்சி,
திரு. த. பார்த்திபன்

# கருத்துரை

**முனைவர் கி. சங்கர நாராயணன்**
*உதவிப் பேராசிரியர்*
*சென்னை பல்கலைக்கழகம்*

*சொற்களை உருவாக்கும் நெறிமுறைகளை வகுத்தளித்த சொல் லாக்கியனார், தொல்காப்பியனாரின் சொல்லதிகாரத்தை கையிலெ டுத்தது காலத்தின் தேவையாகும். எழுதப்படுவது எழுத்து. சொல்லப்படுவது சொல் என்பார்கள். வரிவடிவம் காலத்திற்குக் காலம் மாறுபடும். ஒலி வடிவம் என்றும் மாறாதது. தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்குப் பொருள் விளக்கம் தருவது மட்டும் இந்நூல் மையமல்ல. அது இந்நூலின் விளிம்புநிலையில் தான் உள்ளது. ஏனென்றால் பொருள் விளக்கம் தந்த நூல்களின் எண்ணிக்கை இன்றுவரையில் புற்றீசல்கள் போல பெருகிக்கொண்டே செல் கின்றன. இந்நூல் தொல்காப்பியச் சொல்லதிகாரப் பொருள் விளக்கத்தை மற்றுமொரு தளத்தில் அணுகி, அதன் வழியில் பயணிக்கும் நூலாகும். வெறும் பொருள் விளக்கத்தை மட்டும் படித்து வந்த பலருக்கும் இந்நூல் சற்றும் வித்தியாசமானதுதான். ஆனால் அந்த வித்தியாசம் தான் இந்த நூலை மற்ற பொருள் விளக்க நூல்களிலிருந்து தனித்துவமாக அடையாளம் காணச் செய்கின்றது. இந்நூலில் நான் கண்ட தனித்துவமான சில செய்திகள் பின்வருமாறு,*

*பெண்பாலிருந்து ஆண்பால் சொற்களை உருவாக்குகின்ற விதி களை மாற்றி, ஆண்மை பெண்மையாகத் திரிந்ததால் உருவாக்கப் பட்ட சிறப்புப் பெயரே பேடி என்கிறார் (நூ.12).*

*முதலும் உறுப்பும் தாமாகப் பொருளை வேறுபடுத்தாது. பேசும்போது, சொற்களும் உருபுகளும் எங்கு, எப்படி பயன் படுத்தப்படுகின்றன என்பதைப் பொருத்தே பொருள் மாறுபடும் (நூ.85).*

வயங்கினோர் என்ற சொல்லுக்கு உள்ளும் புறமும் பொருண்மையின் இயல்பை உணர்ந்தோர் என்றும், முதிர்வு என்பதற்கு, மனத்தின் ஓட்டத்தை எதிர்த்துப் பயணித்தால், மனத்தின் இயக்கமும் மூலமும் இடமும் வெளியும் புலப்படும், உணரப்படும். மனத்தின் ஓட்டம், உடலின் இயக்கத்தாலும், புலன்களின் உள்ளீடுகளாலும் தொடர்கின்றது. உடலும் புலன்களும் அசையாமையில் நிலைக்கும்போது, மனக்காலத்தில், அகவெளியில் பின்னோக்கிய பயணத்தில் மனம் நிலைப்படும், உதிரும் என்று பொருள் விளக்கம் தருவது சொல்லாக்கியனாரின் சொல்வளத்தை எடுத்துக்காட்டுகின்றது.

தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் சேர்ந்து வரும் போது, அதன் பக்கத்தில் வினைச்சொல், திணை மாறி வருவதை தடுப்பதில்லை.

***யானும் எருதும் வருகின்றோம்***
***நாங்களும் பசுக்களும் வருகின்றோம்***

இங்கே,எருதுகளும் பசுக்களும் அஃறிணையாயினும், அவற்றிற்குரிய வினைச்சொல்லுக்குப் பதில், உயர்திணைக்குரிய வினைச்சொற்கள் வந்து, உயர்திணைக்கு முக்கியத்துவம் அளிக்கப் படுகிறது என்கிறார்.

கண் என்னும் ஏழாம் வேற்றுமை உருபு பொதுப்பொருளிலும் சிறப்புப் பொருளிலும் வருவதைச் சுட்டும் சான்றுகள் மிகவும் சிறப்பானது.

***புத்தகம் எங்குள்ளது?***
***வீட்டின்கண் உள்ளது***

***வீட்டில் எங்குள்ளது?***
***வீட்டின் அகத்துள்ளது***
***அகத்தே எங்குள்ளது?***
***படிப்பு அறைக்குள் உள்ளது.***

***அறைக்குள் எங்குள்ளது?***
***பெட்டியின்முன் உள்ளது?***

***பெட்டி எங்குள்ளது?***
***நாற்காலிமேல் உள்ளது.***

***நாற்காலி எங்குள்ளது?***
***கட்டிலின்வலம் உள்ளது.***

என்பதை விளக்கிக் குறிப்பான வேற்றுமைச் சொல்லை அடுத்தும் பொதுவான வேற்றுமைச் சொல் வரும் எனவும் சுட்டுகின்றார்.

பலரை எண்ணும் தனிப்பால் சொற்கள் வராது என்கிறது தொல்காப்பியம். பலரை எண்ணும்போது இருவர், மூவர் என இருபாலரையும் பொதுவாய்க் குறிக்கும் பலர்பால் சொல் வரும் என்பதும்,

உருபுகள் இல்லாமல் சொற்கள் பொருளை வேறுபடுத்தும் என்பதும், (கந்தன்நந்தன் வந்தான், கந்தன்மயில் இது)

வினையெச்சமானது ஆண்பால், பெண்பால், பொதுப்பால் ஆகியவற்றைக் குறிக்கும் விகுதியின் சேர்க்கையால் வினைப் பெயராகின்றது (நூ.153). எனவே சொல்லை அதன் அடிப்படை அலகுகளாய்ப் பிரித்து, அதன் பொருளையும் தன்மையையும் அறிய முடியும் என்பதும் இவரது மறுவாசிப்பு தளத்தில் நம்மையும் இணைத்துப் பயணிக்கச் செய்யும் சுவடுகளாகும்.

உரிச்சொற்கள் திரிந்து வந்த காரணத்தால், பொருண்மை வெளிப்படையாய் தெரியாது. அவற்றின் மூலத்தை ஆழ்ந்து ஆராய்ந்தால் தெரியும் என்கிறார்.

சொற்கள் வரிசையாய் சேர்ந்து வந்து ஒரு புதிய கூட்டுப் பொருண்மையையும் அளிக்கும் என்பதை நிரல்நிரையில் விளக்குதல், முன்னிலைச் சொற்களை அடுத்துவரும் வினைச்சொற்கள் நிகழ்காலத்தில் இருந்தால், சொல் குறைந்து வராது என்பதும், உரிச்சொற்களை இசை, குறிப்பு, பண்பு என்ற வகையின் அடிப் படையில் நோக்கிப் பிரித்து விளக்கும் நுட்பமும் இந்நூலின் சிறப்பினை விளக்கும் வலிமையான காரணிகளாகும்.

வேற்றுமையியலே, தமிழ் மொழியின் இயங்குசக்தியாக உள்ளது. பெயரும் வினையும்கூட வேற்றுமையால்தான் இயக்கம் கொள்கின்றது. அளவையியலும், சட்ட நூலின் கட்டமைப்பும் ஒழுங்கமைப்பும் தொல்காப்பியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது என்ற ஆசிரியரின் பிரதி அணுகுமுறைகள் சற்றும் எதிர்பாராதது வித்தியாசமானது.

தொல்காப்பியச் சொல்லதிகாரத்தின் பொருள் விளக்கத்தை மற்றொரு பரிமாணத்தில் அணுக விரும்புவோர்க்கு இந்நூல் சிறந்த பொக்கிஷம். பலரும் சொல்லாக்கியனாரின் கருத்தில் முரண்படலாம். மாற்றங்களும் வளர்ச்சிகளும் என்றும் மாறாதது. மாற்றங்களுடன் பனுவல்களை வாசிக்கத் தொடங்கினால்தான்

*வாசிப்பும் அறிவும் அர்த்தப்படும். பழமையில் கால் ஊன்றிப் புதுமையில் திளைத்துத் தமிழ் உலகில் பயணிப்பவர்களுக்கு இப்பிரதி அவரவருள் ஊடாக நின்று பயணிக்கும். நானும் பயணித்துக் கொண்டிருக்கின்றேன். நீங்களும் உங்கள் பயணத்தைத் தொடங்குங்களேன்...*

*வாழ்த்துகளுடன்*

***சங்கர நாராயணன்.கி***

*சென்னை,*
*04.07.2017*

# ஆசிரியன் உரை

தொல்காப்பியத்தின் இரண்டாம் பகுதியான சொல் அதிகாரம் பொருள் விளக்கத்தை, தமிழ்கூறு நல்லுலகத்தின் முன் படைப்பதில் மகிழ்கிறேன்.

இந்நூலை எழுதத் தூண்டிய தர்மபுரி திரு. த. பார்த்திபன் அவர்களுக்கு, முதல் நன்றி.

இளம்பூரணர் மற்றும் நச்சினார்க்கினியர் உரைகள், திக்குத் தெரியாத காட்டின் வழிகாட்டிகள்.

பாவலரேறு பாலசுந்தரனார் எழுதிய உரை, பல சமயங்களில் நூற்பாக்களின் சிக்கல்களை தெளிவுப்படுத்துகின்றன. (நூற்பா 482)

உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் வெளியிட்ட தொல்காப்பிய உரைவளம் பரந்த, ஆழ்ந்த நோக்கை உருவாக்கியது. அறிமுகப் படுத்திய முனைவர். ப. வேல்முருகன், மத்தியப் பல்கலைக்கழகம், திருவாரூர் அவர்களுக்கு சிறப்பான நன்றி.

சுப்பிரமணிய சாஸ்திரி மற்றும் வேங்கடராசுலு ரெட்டியார் அவர்களின் விமரிசன உரைகள், சில நூற்பாக்களுக்கு, புதியக் கோணங்களைத் தந்தன.

சென்னைப் பல்கலைக்கழக தமிழ்ப் பேரகராதி, எப்பொழுதும் என் துணை நின்றது.

ஆலோசனை வழங்கிய மேற்கூறிய தமிழ் அறிஞர் பெருமக்களை நன்றியுடன் நினைவு கூர்கின்றேன். குறிப்பாக, முனை. பொற்கோ அவர்கள், அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு ஓய்வுக்காக வந்தப் போதும், அவரைத் தமிழால் தொல்லை செய்தேன். அவருடைய பொறுமையும் கருணையும் அளவில்லாதது. முனை. ஜெயராமன் அவர்களும் சளைக்காமல் என்னுடைய கேள்விகளுக்கும் முன் வைப்புகளுக்கும் பதிலிறுத்தார். அவர்களுக்கு சிறப்பு நன்றி.

முனை. பி.எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி அவர்களின் பெயரனான மதுரை முனை. பிரணதார்த்தி ஹரன், என்னுடைய எழுத்தையும் கருத்தையும் ஊக்கப்படுத்தினார். அவர்க்கும் நன்றி.

இயன்றவரை, சொல்லதிகாரப் பொருள் விளக்கம், எளிமையான தெளிவான நடையில் தரப்பட்டுள்ளது. மாணவர்கள், இனி, தொல்காப்பியத்தை தாங்களே நேரடியாக எதிர்கொள்ள முடியும் என நம்புகிறேன். பேராசிரியர்களுடனான ஆக்கப் பூர்வமான கலந்துரையாடலுக்கும், தமிழ் இலக்கணத்தை, இலக்கியத்தைச் செழுமைப்படுத்துவதற்கும், இந்நூல், அடித்தளமானால், பெரிதும் மகிழ்வேன்.

வேற்றுமையியலே, தமிழ் மொழியின் இயங்குசக்தியாக உள் ளது. பெயரும், வினையும்கூட வேற்றுமையால்தான் இயக்கம் கொள்கின்றது.

உரியியலும், எச்சவியலும், இங்கு, புதிய பொருண்மைகளைப் பெறுகின்றன.

அளவையியலும், சட்ட நூலின் கட்டமைப்பு ஒழுங்கமைப்பும் தொல்காப்பியத்தில் பயன்படுத்தி இருப்பது, வியக்கத்தக்கதாகும்.

பல பணிகளுக்கிடையில், கருத்துரை வழங்கிய முனை.சங்கர நாராயணனுக்கு நன்றி.

பிரதியின் சந்திப்பிழைகளைத் திருத்தித் தந்த மௌரீஷியஸ் நாட்டு உதவிப் பேராசிரியை முனை. உமா அழகிரி அவர்களுக்கு நன்றி.

அட்டைப்படத்தை வடிவமைக்க உதவிய என் மகள், நவீனா விற்கு நன்றி.

என்னுடைய எழுத்துக்கு அயராது ஊக்கம் அளிக்கும் என் மனைவி இலட்சுமி சங்கரன் அவர்களுக்கு, என்றென்றும் நன்றி!

**சொல்லாக்கியன்**

# உள்ளடக்கம்

# 1. கிளவியாக்கம்

*கிளவி = கிள + வி. கிள = கிள் + அ. பிரிந்த. (கிள், கிள்ளு, கிளை, கிளி, கிளு, கிள்ளை எனும் சொற்களைச் சிந்திக்கவும்) வி = காற்று. கிளவி = பிரிந்த காற்றொலி. சொல். ஒலி.*

*ஆக்கம் = ஆக் + அம். ஆக் = ஆத்தல் பொருண்மை. அம் = தன்மை. ஆக்கம் = பொருள் ஆக்கும் தன்மை.*

*கிளவியாக்கம் = சொல் பொருள் ஆகும் தன்மை. சொற்பொருள். ஒலியாக்கம்.*

**திணையிரண்டு**

***1.*** ***உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே***
***அஃறிணை யென்மனார் அவரல பிறவே***
***ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே.***

*திணை = த் + இணை. தேகம் சேர்ந்தது / சேர்ந்தவை. தேகம் ஒத்தது / ஒத்தவை. வகை.*

*உயர்திணை = உயர்ந்த / நிமிர்ந்த ஒத்த தேகத்தினர். மனித இனக்குழுக்கள். மனிதர்.*

*அஃறிணை = அல் + திணை. அல்லாதது திணை. ஒத்த தேகம், வடிவம் அற்றவை. பல்வேறு வடிவம் கொண்டவை. மனிதர் அல்லாத மற்றவை.*

*என்மனார் = என்னும் மனம் / கருத்து உடையவர்.*

*சுட்டு = குறி. குறிப்பது.*

*பொருள்:* மக்களைக் குறிக்கும் சொற்கள், 'உயர்திணை' எனவும், மக்கள் அல்லாமல் பிற (உயிர்கள், உயிரற்றப் பொருட்கள்) எல்லாவற்றையும் குறிக்கும் சொற்கள், 'அஃறிணை' எனவும், ஆக இரண்டு வகையில், சொற்கள் இயைந்து ஒலிக்கும் என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்கள்.

**எடுத்துக்காட்டு:**

அவன், அவள், அவர் – உயர்திணை.

அது, அவை – அஃறிணை.

**உயர்திணைப் பால் மூன்று**

**2.** **ஆடூஉ வறிசொல் மகடூஉ வறிசொல்**
**பல்லோரறியுஞ் சொல்லொடு சிவணி**
**அம்முப் பாற்சொல் லுயர்திணை யவ்வே.**

ஆடூஉ = ஆடூ + உ. ஆடூ = ஆட் + ஊ. ஒட்டித் தொடர்வது நீள்புறத்தே. ஆணின் உடல் உறுப்பு புறத்தே ஒட்டித்தொடர்வது. ஆண்குறி. ஆண். ஆடு + அவர் = ஆடவர்.

மகடூஉ = மகடூ + உ. மகடூ = ம் + அகட் + ஊ. கொண்டு மூடியது விரிவது நீள்புறத்தே. பெண்ணின் உடல் உறுப்பு புறத்தே விரிவது. பெண்குறி. பெண்.

பல்லோர் = பல் + ஓர். பல தனியர்கள். பலர்.

சிவணி = சேர்ந்து.

பால் = வகை

அவ்வே = அவையே.

*பொருள்:* 'ஆண்' என அறிகின்றச் சொல், 'பெண்' என அறி கின்றச் சொல், 'பலர்' என அறிகின்றச் சொல்லுடன் சேர்த்து, அந்த மூன்று வகைச் சொற்களே உயர்திணை என்பவை.

**எடுத்துக்காட்டு:**

அவன், அவள், அவர் = உயர்திணை.

**அஃறிணைப் பால் இரண்டு**

**3.** **ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்று**
**ஆயிரு பாற்சொ லஃறிணை யவ்வே.**

*பொருள்:* 'ஒன்று' என அறிகின்றச் சொல், 'பல' என அறிகின்றச் சொல், ஆகிய இரண்டு வகைச் சொற்களே 'அஃறிணை' என்பவை.

### பேடியும் தெய்வமும் உயர்திணையுள் அடங்குதல்

**4.** ***பெண்மை சுட்டிய வுயர்திணை மருங்கின்***
***ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்***
***தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்***
***இவ்வென வறியுமந் தந்தமக் கிலவே***
***உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்.***

*பொருள்:* பெண்மையைக் குறிக்கின்ற, ('இ' எனும்) உயர்திணை இறுதியை உடைய, ஆண்மை பெண்மையாகத் திரிந்ததன் நிலையானப் பெயர்ச் சொல்லான 'பேடி' யும், தெய்வத்தைக் குறிக்கும் நிலையானப் பெயர்ச் சொல்லான, 'மாரி' யும், இதுவென அறிவதற்குரிய வேறு இறுதி (பேடன் அல்லது மாரன்) இல்லாததால், உயர்திணைச் சொற்தொடரில், குறிக்கும் நபருக்கு ஏற்றாற்போல், பால் மாறி வரும்.

***விளக்கம்:*** பெண்மை ஆண்மையாக திரிந்தாலும், 'பேடி' என்றே அழைக்கப்படும்.

ஆண்மை பெண்மையாகத் திரிந்தால், 'பேடி வந்தான்' என்றும், பெண்மை ஆண்மையாகத் திரிந்தால், 'பேடி வந்தாள்' என்றும் கூறப்படும். பலர்பால் என்றால், 'பேடிகள் வந்தனர்'.

'பேடி' க்கு இணையாக 'அலி' எனும் சொல்லும் உள்ளது. ஆண், பெண், பலர் பாலுடன், அஃறிணையாய் குறிப்பதும் வழக்கில் உள்ளது. 'அலி வந்தான்', 'அலி வந்தாள்', 'அலிகள் வந்தனர்', அலி வருது', 'அலிகள் வந்தன'.

'மாரி', 'காளி' போன்றவை, ஆணுக்கும் பெண்ணுக்குமான பொதுப் பெயர்களாக இருக்கின்றன. எனவே, 'மாரி வந்தான்' என்பதும், 'மாரி வந்தாள்' என்பதும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றது.

### உயர்திணை ஆண்பால் ஈறு

**5.** ***னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்.***

*பொருள்:* சொல்லின் இறுதியில் வரும், னகர ஒற்றான 'ன்'–

ஆல்தான், ஆண்பால் என அறியமுடிகின்றது.

எடுத்துக்காட்டு:
அவன். இவன். உவன்.

### உயர்திணைப் பெண்பால் ஈறு

6. ளஃகானொற்றே மகடூஉ வறிசொல்.

பொருள்: சொல்லின் இறுதியில் வரும், ளகர ஒற்றான 'ள்'– ஆல்தான், பெண்பால் என அறியமுடிகின்றது.

எடுத்துக்காட்டு:

அவள். இவள். உவள்.

### உயர்திணைப் பலர்பால் ஈறு

7. ரஃகா னொற்றும் பகர விறுதியும்
மாரைக் கிளவி யுளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே.

பொருள்: சொல்லின் இறுதியில், ரகர ஒற்றான 'ர்' உம், 'ப'கரமும், 'மார்' எனும் சொல் உள்பட மூன்றும் வந்தால், பலர் பால் என அறியமுடிகின்றது.

எடுத்துக்காட்டு:

அவர். நண்ப. அன்னைமார்.

### அஃறிணை ஒன்றன்பால் ஈறு

8. ஒன்றறி கிளவி த ற ட வூர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்.

பொருள்: 'த், ற், ட்' ஆகியவற்றுடன், குற்றியலுகரம் சேர்ந்து வரும் இறுதியை உடைய சொற்களால், அஃறிணை ஒன்றன்பாலை அறியமுடிகின்றது.

எடுத்துக்காட்டு:
அது.

ஆறு.
ஆடு.

*அஃறிணைப் பலவின்பால் ஈறு*

***9.*** ***அ ஆ வஎன வரூஉம் இறுதி***
***அப்பான் மூன்றே பலவறி சொல்லே.***

***பொருள்:*** 'அ, ஆ, வ' எனும் மூன்று வகையான இறுதியை உடைய சொற்களால்தான், அஃறிணை பலவின்பாலை அறியமுடிகின்றது.

***எடுத்துக்காட்டு:***
சில.
யா.
மாடுவ.

***மேலே உணர்த்தப்பட்ட ஈறுகள், வினைக்கண் வந்து, பாலை விளக்குதல்.***

***10.*** ***இருதிணை மருங்கின் ஐம்பா லறிய***
***ஈற்றுநின் றிசைக்கும் பதினோ ரெழுத்தும்***
***தோற்றந் தாமே வினையொடு வருமே.***

***பொருள்:*** உயர்திணை, அஃறிணை ஆகிய இரண்டு இடங்களில், ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் ஆகிய ஐந்து பால்களை அறியும் வகையில் நின்று ஒலிக்கும், 'ன், ள், ர், ப, மார், து, று, டு, அ, ஆ, வ' ஆகிய பதினோரு எழுத்துகளும், பெயர்ச்சொற்களுடன் வருவதோடு, வினைச்சொற்களிலும் வரும்.

***எடுத்துக்காட்டு:***
வந்தான்.
வந்தாள்.
வந்தார். என்ப. கொண்மார்.
வந்தது. கூவிற்று. வந்திட்டு.
வந்தன. வரா. வருவ.

***பாலறி கிளவிகள் மயங்கல் கூடா.***

***11.*** ***வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்***

*பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்*
*மயங்கல் கூடா தம்மர பினவே.*

***பொருள்:*** *வினைச்சொல்லில் வரும் பாலை அறிகின்ற ஒலியும், பெயர்ச்சொல்லில் வரும் பாலை அறிகின்ற ஒலியும், மாறாத இயல்புடையன.*

*எடுத்துக்காட்டு:*
*அவன் வந்தான். அவள் வந்தாள். அவர் வந்தார். அது வந்தது. அவை வந்தன.*
*அவன் வந்தாள் என்றோ, அவள் வந்தான் என்றோ, அவர் வந்தது என்றோ, அது வந்தன என்றோ வராது.*

### ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி

***12.*** ***ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி***
***ஆண்மை யறிசொற் காகிட னின்றே.***

***பொருள்:*** *ஆண்மை திரிந்ததால் உருவான நிலையானப் பெயர்ச் சொல், 'பேடி'. அதன் அடிப்படையில், ஆண்மையை அறிகின்றச் சொல்லை, ஒலியை உருவாக்குவதற்கான வாய்ப்பு அங்கு இல்லை.*

***விளக்கம்:*** *ஆண்மை பெண்மையாகத் திரிந்ததால், பெண் மையைக் குறிக்கும் இறுதி ஒலியான, 'இ' யைக் கொண்டச் சொல்லாக, 'பேடி' உருவாக்கப்பட்டது. பொதுவான விதிப்படி, 'கேடி – கேடன்', 'சேடி – சேடன்' என 'பெண்பால் – ஆண்பால்' சொற்களை உருவாக்கலாம். ஆனால், 'பேடி' என்பது, ஆண்மை பெண்மையாகத் திரிந்ததால் உருவாக்கப்பட்ட சிறப்பு விதிப் பெயர். எனவே, பெண்பாலைக் குறிக்கும் ஒரு பெயராக, 'பேடி' மட்டுமே உருவாக்கப்பட்டுள்ளது.*

*பெண்மை ஆண்மையாகத் திரிந்தாலும், பெண்ணின் தன்மைகள் சில இன்னும் எஞ்சி நிற்பதால், 'பேடி' என்றே பெயர் கொள்ளும்.*

*'பேடன்' என்றோ, 'பேடர்' என்றோ வராது.*

*'பேடி வந்தான்', 'பேடி வந்தாள்', 'பேடியர் / பேடிகள் வந்தனர்' என்றே வரும்.*

### விடையும் வினாவும் அமையும் வகை

***13.*** ***செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்.***

**பொருள்:** கூற்றும் கேள்வியும், ஒன்றின் இடத்தில் மற்றொன்று வராமல் காக்க வேண்டும்.

**விளக்கம்:**

'அவன் வந்தான்' என்பது கூற்று. 'அவன் வந்தானா?' என்பது கேள்வி.

'அவன் வந்தான்?' என, கூற்று கேள்வியாவதும், 'அவன் வந்தான் ஆ' என கேள்வி கூற்றாவதும், பொருள் குழப்பத்தை ஏற்படுத்தும்.

### வினாவுஞ் செப்பே

**14. வினாவுஞ் செப்பே வினாவெதிர் வரினே.**

**பொருள்:** கேள்விக்கு கேள்வியே மறுமொழியாக வந்தால், எதிர்கேள்வியும் கூற்றாகும்.

**எடுத்துக்காட்டு:**

'அவன் வந்தானா?' எனும் கேள்விக்கு, மறுமொழி, 'வராமல் இருப்பானா?' என வந்தால், அது, 'அவன் வந்துவிட்டான்' எனும் கூற்றின் பொருள் தரும்.

### செப்பு, பிறவாறு வழுவி வரினும், அமையும்

**15. செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே**
**அப்பொருள் புணர்ந்த கிளவி யான.**

**பொருள்:** அதே பொருளைத் தரும் சொல்லாக இருந்தால், கூற்றே, கேள்வியாக வழுவினும் தடையில்லை.

**விளக்கம்:** 'மதுரைக்குப் போ' என்பது கூற்று. 'மதுரைக்குப் போகின்றாயா?', 'மதுரைக்குப் போகமுடியுமா?', 'மதுரை தெரியுமா?', 'மதுரைக்கு எப்பொழுது?', 'மதுரைக்கு எப்படி?' போன்றக் கேள்விகள், அதே பொருளைக் குறிப்பவை.

நிலவும் சூழல், கேட்பவர், கேட்கப்படுபவர் ஆகியவற்றைப் பொறுத்து, கேள்வியே கூற்றாய் அமையும்.

### சினைமுதற் கிளவியிற் செப்பும் வினாவும் அமைதல்

16. **செப்பினும் வினாவினும் சினைமுதற் கிளவிக்கு**
**அப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே.**

***பொருள்:*** *கூற்றிலும் கேள்வியிலும், சினைச்சொல்லும் முதல் சொல்லும் மாறிவந்தாலும், சாரத்தில் அதே பொருள் வரும்.*

***எடுத்துக்காட்டு:***
*கூற்று:*
*முடி கருப்பு. தலை கருப்பு.*
*வினா:*
*ஆள் சிவப்பா? மேனி சிவப்பா?*

***விளக்கம்:*** *கருப்பு எனும் நிறக்குணம், தலைமுடிக்கே உரியது. தலைக்கு அல்ல. தலையும் முடியும் மிகவும் நெருக்கமாய் உள்ளதால், 'தலை' என்று சொன்னாலும், அது 'முடி'யைக் குறிக்கின்றது.*

## தகுதியும் வழக்கும்

17. **தகுதியும் வழக்குந் தழீஇயின வொழுகும்**
**பகுதிக் கிளவி வரைநிலை யிலவே.**

***பொருள்:*** *பொருத்தமும் வழக்கமும் உடைய உறுப்புச் சொற்களுக்கு தடையில்லை.*

***எடுத்துக்காட்டு:***

*எத்தனை தலை இன்றைக்கு? (எத்தனை ஆட்கள் இன்றைக்கு வேலைக்கு வந்தார்கள்?)*

*ஒரு கை குறையுது. (விளையாட்டிற்கு ஒரு ஆள் தேவை)*

*எத்தனை ஏர் வந்தது? (ஏர், இணைமாடுகள், உழுபவன் ஆகிய மூவற்றையும் குறிக்கும், 'ஏர்' எனும் சொல்.)*

## இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர், செய்யுள் வழக்கு

18. **இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை**
**வழக்கா றல்ல செய்யு ளாறே.**

***பொருள்:*** *ஒரு இனத்தைச் சுட்டாதப் பண்பை, பெயருக்கு கொடுத்தல், வழக்கில் நடக்காது, செய்யுளில் நடக்கும்.*

***விளக்கம்:*** *யானை கரிய நிறமுடையது. வெண்மை, யானையின்*

உடல் பண்பல்ல. வெள்யானை என்பது வழக்கில் வராது. செய்யுளிலும், இலக்கியத்திலும் வரும்.

### இயற்கைப் பொருளை உணர்த்துதல்

**19. இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.**

**பொருள்:** இயற்கைப் பொருளான நிலம், நீர், காற்று, தீ, வெளி போன்றவற்றை, இத்தன்மைய எனக் கூறுக. அவை நிலையான பண்புகள்.

**எடுத்துக்காட்டு:**
நிலம் வலிது.
நீர் தண்ணிது.
காற்று உலவும்.
தீ சுடும்.
வெளி நிலைக்கும்.

### செயற்கைப் பொருளை உணர்த்துதல்

**20. செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்.**

ஆக்கம் = வினை

**பொருள்:** மனித இடையீடுகளால் உருவான பொருட்களை, நிகழ்த்திய வினையுடன் கூறல் வேண்டும்.

எடுத்துக்காட்டு:
சோறு ஆக்கினேன்.
குழம்பு செய்தேன்.
கறி வறுத்தேன்.

### புறனடை

**21. ஆக்கந் தானே காரண முதற்றே.**
ஆக்கம் = விளைவு
காரணம் = வினை

**பொருள்:** நிகழ்த்திய வினைச் சொல்லை அடுத்து, விளைவுச் சொல் வரும்.

*எடுத்துக்காட்டு:*
ஆக்கியச் சோறு.
செய்தக் குழம்பு.
வறுத்தக் கறி.

### எய்தியது விலக்கல்

**22. ஆக்கக் கிளவி காரணம் இன்றியும்
போக்கின் றென்ப வழக்கினுள்ளே.**

*பொருள்:* பேச்சு வழக்கில், விளைவுச்சொல், நிகழ்த்திய வினைச்சொல் இன்றியும், வரும். அவை, மனித இடையீடு இன்றி, இயற்கையாய் தானாய் நிகழ்ந்தது போன்ற தோற்றத்தைக் கொடுக்கும்.

*எடுத்துக்காட்டு:*
சோறு ஆகியது.
குழம்பு ஆயிற்று.
கறி ஆகியது.

### பால் ஐயத்தின்கண் பன்மை நிகழ்தல்

**23. பான்மயக் குற்ற வையக் கிளவி
தானறி பொருள்வயிற் பன்மை கூறல்.**

*பொருள்:* சந்தேகத்தால் பால் மயக்கம் கொள்ளும்போது, தான் அறிந்த திணையின் இடத்துப் பன்மையில் கூறவேண்டும்.

*எடுத்துக்காட்டு:*
'அவனோ, அவளோ, யாரோ ஒருத்தர் இன்றைக்கு வந்தார்கள்'.
'ஒன்றோ, பலவோ இங்கு வந்தன'.

### திணை ஐயம், அஃறிணைப் பால் ஐயம் – சொல் நிகழ்தல்

**24. உருவென மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்
இருவீற்று முரித்தே சுட்டுங் காலை.**

*பொருள்:* உயர்திணையா, அஃறிணையா என, உருவத்தைப் பற்றிய ஐயம் வந்தாலும், அஃறிணையில் ஒன்றா, பலவா என, எண்ணிக்கைப் பற்றி ஐயம் வந்தாலும், இரண்டு இடங்களிலும்,

குறிப்பிடும்போது, பன்மை வரும்.

**எடுத்துக்காட்டு:**
'மாடோ, மனிதனோ யாரையோ கண்டேன்'.
'ஒன்றோ, பலவோ எவையோ கண்டேன்'.

### ஐயப்பட்ட பொருளைத் துணிதல்

**25. தன்மை சுட்டலு முரித்தென மொழிப**
**அன்மைக் கிளவி வேறிடத் தான.**

**பொருள்:** இல்லாமைச் சொல் வேறு ஒன்றைக் குறிப்பதால், பால்தன்மையைக் குறிப்பதும் வழக்கில் உள்ளது எனச் சொல்லுவர், அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**
நான் கண்டது, அது அல்ல அவன்.
நான் கண்டது, ஒன்று அல்ல பல.

### வண்ணச் சினைச் சொல்

**26. அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை**
**நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்.**

**பொருள்:** (கூட்டுச்சொல்லில்) உடல் உறுப்பின் நிறத்தைக் குறிக்கும்போது, நிறம் எனும் அடைமொழி, சினை எனும் உடல் உறுப்பைக் குறிக்கும் சொல், முதல் எனும் பெயர்ச்சொல் என, மூன்றுச் சொற்களும், தம் வரிசையில் இருந்து, மாறாமல் வரும் இயல்புடையன.

**எடுத்துக்காட்டு:**
'கரிகால்வளவன்' என வருவதில்,
கரி = நிறம் குறிக்கும் அடைமொழி
கால் = உடல் உறுப்பைக் குறிக்கும் சொல்.
வளவன் = முதல் எனும் பெயர்ச்சொல்.

'கால்கரிவளவன்' என்றோ, 'வளவன்கால்கரி' என்றோ வராது.

### பால் திணை வழுவமைதி

**27. ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்**

*ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்*
*வழக்கி னாகிய வுயர்சொற் கிளவி*
*இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல.*

*பொருள்:* ஒருவரைக் குறித்துக் கூறும் பலர்பால் சொல்லும், ஒன்றைக் குறித்துக் கூறும் பலவின்பால் சொல்லும், வழக்கில் உயர்வான சொற்கள். ஆனால், இலக்கணத்தின்படி, அவை அப்படி சொல்லுகின்ற முறையல்ல.

*எடுத்துக்காட்டு:*
நந்தன் வாருங்கள்.
மாடு வருவ.

உயர்திணையை அஃறிணையிலும், அஃறிணையை உயர்திணை யிலும் கூறுவது உண்டு.

*எடுத்துக்காட்டு:*

'என் இதயம் வந்தது' என உயர்திணை ஒருத்தியை, அஃறி ணையில் கூறுவது.

'என் ஆத்தா வந்துவிட்டாள்' என அஃறிணை பசுவை, உயர் திணையில் கூறுவது.

## இட வழுக் காத்தல்

**28.** *செலவினும் வரவினுந் தரவினுங் கொடையினும்*
*நிலைபெறத் தோன்று மந்நாற் சொல்லுந்*
*தன்மை முன்னிலை படர்க்கை யென்னும்*
*அம்மூ விடத்து முரிய வென்ப.*

*பொருள்:* 'செல்லும், வரும், தரும், கொடும்', எனும் அந்த நான்கு சொற்களும், தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூன்று இடங்களிலும், மாறாமல், நிலையாகத் தோன்றும் என்பர், அறிஞர்கள்.

## தன்மை முன்னிலைச் சொற்கள்

**29.** *அவற்றுள்,*
*தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்*
*தன்மை முன்னிலை ஆயீ ரிடத்த.*

**பொருள்:** அந்நான்கு சொற்களுள், 'தரும்' எனும் சொல்லும், 'வரும்' எனும் சொல்லும், தன்மை, முன்னிலை ஆகிய இரண்டு இடங்களுக்கும் உரியன.

*எடுத்துக்காட்டு:*
*யான் தரும், வரும்.*
*நீர் தரும், வரும்.*

*படர்க்கைச் சொற்கள்*

***30. ஏனை யிரண்டும் ஏனை யிடத்த.***

**பொருள்:** மற்ற இரண்டு சொற்களும், அதாவது, 'செல்லும்', 'கொடும்' எனும் இரண்டு சொற்களும், படர்க்கை இடத்திற்கு உரியன.

*எடுத்துக்காட்டு:*

*அவர் செல்லும், கொடுக்கும்.*

*யாது, எவன் என்னும் சொற்கள்*

***31. யாதெவன் என்னும் ஆயிரு கிளவியும்***
***அறியாப் பொருள்வயிற் செறியத் தோன்றும்.***

*செறி = சேர்*

**பொருள்:** 'யாது', 'எவன்' என்னும் இரண்டு சொற்களும், அறியாதப் பொருள் இடத்தில், எதிர்பாராத செய்தியைக் கேட்கும்போது, சேர்ந்துத் தோன்றும்.

*எடுத்துக்காட்டு:*
*'யாதெவன்?', அவனா இவன்?*

*'என்னது? யார்?', அவனா அப்படி செய்தான்?*

*யாது என்னும் சொல்*

***32. அவற்றுள்,***
***யாதென வரூஉம் வினாவின் கிளவி***

**அறிந்த பொருள்வயின் ஐயந் தீர்தற்குத்
தெரிந்த கிளவி யாதலு முரித்தே.**

***பொருள்:*** *'யாது', 'எவன்' என்னும் அவை இரண்டனுள், 'யாது?' எனும் கேள்விச் சொல், அறியாதப் பொருள் இடத்தில் மட்டுமின்றி, அறிந்தப் பொருள் இடத்திலும், சந்தேகத்தைத் தீர்க்கும் பொருட்டு, தேர்ந்தெடுத்து பயன்படுத்தும் சொல்லாக உள்ளது.*

***எடுத்துக்காட்டு:***

*இம்மரங்களுள், கருங்காலி யாது?*

**33. இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகையி னும்மை வேண்டும்.**

***பொருள்:*** *இத்தனைதான் என அறிந்த உடல் உறுப்புகளைக் குறிக்கும் சினைச்சொல்லை, வினைச்சொல்லுடன் சேர்க்கும்போது, அச்சினைச்சொல்லுடன், 'உம்' சேர வேண்டும்.*

***எடுத்துக்காட்டு:***

*அரசனின் இரண்டு கண்களும் சிவந்தன.*

***விளக்கம்:*** *'அரசனின் இரண்டு கண்கள் சிவந்தன' என்றால், அவனுக்கு வேறு கண்கள் உள்ளன போன்றும், அவை சிவக்க வில்லை என்றும், ஒருவித பொருள் மயக்கம் ஏற்படுகின்றது.*

*'அரசனின் கண் சிவந்தது' என்றாலும், 'அரசனின் கண்கள் சிவந்தன' என்றாலும், அக்குழப்பம் நேராது.*

**இல்லாமைக்குரிய சொல்**

**34. மன்னாப் பொருளு மன்ன வியற்றே.**

*மன்னா = எண்ணலாகா. கருதமுடியாத.*

***பொருள்:*** *எண்ணமுடியாத பொருளும் மேற்கூறிய, 'உம்' சேரும் இயல்புடையதே.*

***எடுத்துக்காட்டு:***

*நீலயானையை யாரும் கண்டதில்லை.*

*இதுவுமது*

***35.*** ***எப்பொரு ளாயினும் அல்ல தில்லெனின்***
***அப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்.***

*அல்லது = அல் + அது. ஒலித்தது. சொல்லியது. கேட்டது.*

***பொருள்:*** *எந்தப் பொருளாக இருந்தாலும், ஒலித்தது இல்லை யென்றால், அந்தப் பொருள் அல்லாமல், வேறு ஒரு பொருளைக் கூற வேண்டும்.*

***விளக்கம்:*** ஒரு பண்டப்பொருள் என்றாலும், ஒரு சொல்லின் பொருள் என்றாலும், ஒலித்தது இல்லை / தெரியவில்லை என்றால், அந்தப் பொருள் அல்லாமல், அதைப் போன்ற வேறு ஒரு பொருளைக் கூற வேண்டும்.

***எடுத்துக்காட்டு:***

'துவரம்பருப்பு இருக்கா?' – 'பயத்தம்பருப்பு இருக்கு'.

'கிளவி என்றால் சொல். சொல் என்றால் ஒலித்தல். ஒலித்தல் என்றால் அதிர்தல்'.

*புறனடை*

***36.*** ***அப்பொருள் கூறிற் சுட்டிக் கூறல்.***

***பொருள்:*** வேறொரு பொருளை, 'இது' வென காட்டிக் கூறுதல் வேண்டும்.

***எடுத்துக்காட்டு:***

'துவரம்பருப்பு இருக்கா?' – 'இதோ, பயத்தம்பருப்பு இருக்கு'.

***பொருளை உணர்த்தும் பொருளொடு புணராச் சுட்டுப் பெயர்***

***37.*** ***பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்***
***பொருள்வேறு படாஅ தொன்றா கும்மே.***

***பொருள்:*** பொருள் பெயரைச் சேர்க்காமல், சுட்டுப் பெயராய்க் கூறினாலும், பொருள் வேறுபடாமல், அந்த ஒன்றையேக் குறிக்கும்.

***எடுத்துக்காட்டு:***

'துவரம்பருப்பு இருக்கா?' – (பயத்தம்பருப்பைக் காட்டி) 'இது

இருக்கு' எனக் கூறுதல்.

### இயற்பெயரும் சுட்டுப்பெயரும் ஒருவழி வருதல்

**38.** **இயற்பெயர்க் கிளவியுஞ் சுட்டுப்பெயர்க் கிளவியும்**
**வினைக்கொருங் கியலுங் காலந் தோன்றின்**
**சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்**
**இயற்பெயர் வழிய வென்மனார் புலவர்.**

**பொருள்:** இயற்பெயர்ச் சொல்லும், சுட்டுப்பெயர்ச் சொல்லும், வினையுடன் அடுத்தடுத்து வரும் சமயத்தில், சுட்டுப் பெயர்ச்சொல் முதலில் வராது, இயற்பெயர்ச்சொல் வந்தப் பிறகு வரும், என்னும் கருத்துடையவர்கள் புலவர்கள்.

**எடுத்துக்காட்டு:**

'கந்தன் வந்தான். அவன் உண்டான்', என வரும். இங்கே, 'கந்தன்' என்பதும், 'அவன்' என்பதும் ஒருவரையே குறிக்கும்.

'அவன் வந்தான். கந்தன் உண்டான்', என வராது. அப்படி வந்தால், 'அவன்' என்பதும், 'கந்தன்' என்பதும், வேறு வேறு நபரைக் குறித்துவிடும்.

### இயற்பெயருஞ் சுட்டுப் பெயரும் செய்யுளில் வருதல்

**39.** **முற்படக் கிளத்தல் செய்யுளு ளுரித்தே.**

**பொருள்:** சுட்டுப்பெயர்ச் சொல்லை அடுத்து, இயற்பெயர்ச் சொல் வருவது, செய்யுளில் உள்ளது.

**எடுத்துக்காட்டு:**
அவனணங்கு நோய்செய்தா னாயிழாய் வேலன்
விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி – முகனமர்ந்
தன்னை யலர்கடப்பந் தாரணியி லென்னைகொல்
பின்னை யதன்கண் விளைவு.

### சுட்டுமுதற் காரணச்சொல்

**40.** **சுட்டுமுத லாகிய காரணக் கிளவியுஞ்**
**சுட்டுப்பெய ரியற்கையிற் செறியத் தோன்றும்.**

**பொருள்:** குறிப்பிடுகின்ற முதல் சொல்லாக காரணச் சொல்லும், சுட்டுப்பெயர்ச் சொல்லும், இயற்பெயர்ச் சொல்லும் நெருக்கமாய், அடுத்தடுத்து வரும்.

**எடுத்துக்காட்டு:**

'வேலுடன் இருப்பதால், அவன் முருகன்.'

இதில்,
இருப்பதால் = காரணச் சொல்.
அவன் = சுட்டுப்பெயர்ச் சொல்.
முருகன் = இயற்பெயர்ச் சொல்.

## இயற்பெயரும் சிறப்புப்பெயரும் ஒருவழி வருதல்

**41. சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.**

**பொருள்:** சிறப்புப் பெயர்ச்சொல் வருவதற்கு முன்பும், இயற் பெயர்ச் சொல் வராது. சிறப்புப்பெயர்ச் சொல்லை அடுத்தே, இயற்பெயர்ச் சொல் வரும்.

**எடுத்துக்காட்டு:**
'சின்னக் கந்தன்', என வரும்.
'கந்தன் சின்ன' என வராது.

## ஒரு பொருள் பல பெயர்

**42. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பி னொன்றிட னிலவே.**

**பொருள்:** ஒரு பொருள் அல்லது ஒருவரைக் குறிக்கும் பல பெயர்ச்சொற்கள், வெவ்வேறு வினைச்சொற்களுடன் வந்தால், ஒன்றை அல்லது ஒருவரைக் குறிப்பதாய் இருக்காது.

**எடுத்துக்காட்டு:**

'நெடுஞ்செழியன் பகை வென்றான். பின்பு, பாண்டியன் நாடு திரும்பினான்.'

'நெடுஞ்செழியன்' என்பதும், 'பாண்டியன்' என்பதும், ஒரு மன்னனையே குறித்தாலும், கருத்தளவில், வெவ்வேறு நபர்களாக

தோன்றும்.

எனவே, சுட்டுப்பெயர்ச் சொல்லைப் பயன்படுத்துவது குழப்பத்தைத் தடுக்கும்.

'பாண்டியன் நெடுஞ்செழியன் பகை வென்றான். பின்பு, அவன் நாடு திரும்பினான்.'

**திணை வழூவு உணர்த்துதல்**

***43. தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவியென்று***
***எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.***

***1. பொருள்:*** தன்மைச் சொல்லையே அஃறிணைச் சொல்லாக எண்ணும்போது, வினைச்சொல் திணை மாறி வருவதைத் தடை செய்யார், அறிஞர்.

***எடுத்துக்காட்டு:***

யான் வருது.
அல்லது

***2. பொருள்:*** தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் சேர்ந்து வரும் போது, அதன் பக்கத்தில், வினைச்சொல், திணை மாறி வருவதை, அறிஞர்கள் தடுப்பதில்லை.

***எடுத்துக்காட்டு:***
யானும் எருதும் வருகின்றோம்.
நாங்களும் பசுக்களும் போகின்றோம்.

இங்கே, எருதும், பசுக்களும் அஃறிணையாயினும், அவற்றிற்குரிய (வருகின்றது, போகின்றன) வினைச்சொல்லுக்குப் பதில், உயர்திணைக்குரிய வினைச்சொற்கள் வருகின்றன. உயர்திணை முதன்மை முக்கியத்துவம் பெறுகின்றது.

**ஒருமை என்னும் சொல்**

***44. ஒருமை யெண்ணின் பொதுப்பிரி பாற்சொல்***
***ஒருமைக் கல்ல தெண்ணுமுறை நில்லாது.***

***பொருள்:*** ஒருவரை எண்ணினால், பொதுவாய், ஆண், பெண் எனப் பிரிந்த, பால் சொற்களைக் கொண்டு கூறலாம். பலரை

எண்ணினால், தனிப்பால் சொற்கள் வராது.

**எடுத்துக்காட்டு:**
ஒருவன் / ஒருத்தன், ஒருத்தி, என வரும்.
இருவன், இருத்தி என வராது. பொருள் மாறும்.

பலரை எண்ணும்போது, இருவர், மூவர் என இருபாலரையும் பொதுவாய்க் குறிக்கும் பலர்பால் சொல் வரும்.

## வியங்கோள் எண்ணுப் பெயர்

**45. வியங்கோ ளெண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.**

**பொருள்:** ஏவல் கருத்தில், அஃறிணை உயர்திணைப் பெயர்களின் வினைத்திணை மாறுதல்களை, அறிஞர்கள் தடுப்பதில்லை.

**எடுத்துக்காட்டு:**
நீயும் மாடும் போங்கள்.
ஆடும் அவனும் செல்க.

## வேறு வினைப் பொதுச்சொல்

**46. வேறுவினைப் பொதுச்சொ லொருவினை கிளவார்.**

**பொருள்:** வெவ்வேறு திணைகளுக்கு வெவ்வேறு பொருளைத் தரும் ஒரு வினைச்சொல், இரண்டு திணைகளுக்கும் பொதுவான ஒரு வினைச்சொல்லாக வராது.

**விளக்கம்:**

'மாடு மேய்ந்தது' என்றால், 'மாடு புல்லைத் தின்றது' எனப் பொருள்.

'கண்ணன் மேய்ந்தான்' என்றால், 'கண்ணன் பல பெண்களுடன் சேர்ந்தான்' எனப் பொருள்.

மாடும் கண்ணனும் மேய்ந்தன என்றால், மாடும் கண்ணனும் புல்லைத் தின்றார்களா? அல்லது மாடும் கண்ணனும் பெண்களைச் சேர்ந்தனரா? என பொருள் விகாரம் பெறும்.

## இதுவுமது

**47. எண்ணுங் காலு மதுவதன் மரபே.**

*பொருள்:* நினைக்கின்ற போதும், அதனதன் வழக்கத்தின்படியே நிகழும்.

**விளக்கம்:**

'மாடு மேய்ந்தது' என்றால், 'மாடு புல்லைத் தின்றது' என மனக்காட்சி தோன்றும்.

'கண்ணன் மேய்ந்தான்' என்றால், 'கண்ணன் பல பெண்களுடன் சேர்ந்தான்' என மனக்காட்சி தோன்றும்.

## இரட்டைக் கிளவி

**48. இரட்டைக் கிளவி யிரட்டுப்பிரிந் திசையா.**

*பொருள்:* இரட்டைச் சொல், தனித்து ஒலிக்காது.

**எடுத்துக்காட்டு:**

'கசகச', 'கடகட', 'கணகண', 'கதகத', 'கபகப', 'கமகம', 'கரகர', 'கலகல' என இரட்டையாய் வரும் சொற்கள், 'கச', 'கட', 'கண', 'கத', 'கப', 'கம', 'கர', 'கல' என தனித்து வராது.

## ஒருபெயர்ப் பொதுச்சொல்

**49. ஒருபெயர்ப் பொதுச்சொ லுள்பொரு ளொழியத்**
**தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்**
**உயர்திணை மருங்கினு மஃறிணை மருங்கினும்.**

*பொருள்:* உயர்திணையிலும், அஃறிணையிலும், சமூகத் தலைமை, எண்ணிக்கைப் பெரும்பான்மை கருதி, ஒரு பெயர்ச் சொல்லுடன் ஒரு பொதுச்சொல் வந்தால், அந்தப் பெயர்ச்சொல்லை இருக்கவிட்டு, அந்தப் பொதுச்சொல்லுக்குப் பதிலாக, வேறு ஒரு தகுந்த சொல்லைத் தேர்ந்தெடுத்துக் கூற வேண்டும்.

**விளக்கம்:**

*உயர்திணை:*

ஒரு சமூகத்தில், சமூகத்தலைமை யாரிடம் உள்ளது என்பதைப் பொறுத்தும், யார் பெரும்பான்மைச் சமூகத்தினர் என்பதைப் பொறுத்தும், சமூகச் சிக்கல்களைத் தவிர்க்க, அவர்களின் வாழ் விடத்தை வெவ்வேறு சொற்களால் குறிக்க வேண்டும்.

*உதாரணமாக, பார்ப்பனர்கள் சமூகத்தலைமை பெற்றவர்களாய் இருந்ததால், அவர்கள் வெகுசிலரே இருந்தாலும், அவர்கள் வசிக்கும் இடம் ஊர் எனப்பட்டது.*

*அதே போல், பள்ளர்கள் பெரும்பான்மையாக வசிக்கும் இடம் ஊர் என்றும், சிறுபான்மையாக வசிக்கும் இடம் சேரி என்றும் அழைக்கப்பட்டது.*

*அஃறிணை:*

*காடு என்கின்ற இடத்தில், தென்னை, வேம்பு, புங்கம் போன்ற பலவகை மரங்கள் இருப்பினும், பயன் அல்லது முக்கியத்துவம் கருதி, தென்னங்காடு எனப்படும்.*

*தோப்பு என்கின்ற இடத்திலும், பனை, தென்னை, மா போன்ற பலவகையான மரங்கள் இருந்தாலும், எவ்வகையான மரம் என்ணிக்கையில் மிகையாக உள்ளதோ, அதன் பெயரைக் கொண்டே, அது வழங்கப்படும். உதாரணம், பனைமரங்கள் மிகுந்திருந்தால், பனந்தோப்பு.*

### *ஒன்றொழி பொதுச்சொல்*

***50.** **பெயரினுந் தொழிலினும் பிரிபவை யெல்லாம்***
***மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.***

***பொருள்:** பெயராலும், தொழிலாலும் வகுக்கப்பட்டச் சொற்கள், பிற பெயருக்கும், தொழிலுக்கும் சேராத வழக்கை உடையன.*

***விளக்கம்:***

*உயர்திணை:*

*பார்ப்பனர் தொழில் ஓதுவது. எனவே, 'பார்ப்பான் ஓதினான்', என வரும். எயினர் தொழில் வேட்டையாடுவது. 'வேடன் அம்பு எய்தினான்', என வரும்.*

*'பார்ப்பான் அம்பு எய்தினான்' என்றோ, 'வேடன் ஓதினான்' என்றோ வராது.*

*அஃறிணை:*

*'கிளி கத்தியது', 'குயில் கூவியது' என வரும். 'கிளி கூவியது' என்றோ, 'குயில் கத்தியது' என்றோ வராது.*

*திணைவிரவுப் பெயர்கள் செய்யுளில் வருதல்*

***51.*** **பலவயி னானு மெண்ணுத்திணை விரவுப்பெயர்**
**அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.**

*பொருள்:* செய்யுள் உள்ளே, பல இடங்களிலும், உயர்திணைப் பெயர்ச்சொல்லும், அஃறிணைப் பெயர்ச்சொல்லும் சேர்ந்து வரும்போது, அஃறிணையாய் முடிகின்றது.

*எடுத்துக்காட்டு:*
''வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறும்
குறுகா ரறிவுடை யார்''.

*பலபொரு ளொருசொல்லின் வகைகள்*

***52.*** **வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்**
**வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொலென்று**
**ஆயிரு வகைய பலபொரு ளொருசொல்.**

*பொருள்:* வினைகள் வேறுபடும் பலபொருள் கொண்ட ஒரு சொல் என்றும், வினைகள் வேறுபடாத பலபொருள் கொண்ட ஒரு சொல் என்றும், பலபொருள் கொண்ட ஒரு சொல், இரண்டு வகைப்படும்.

*வினை வேறுபடும் பலபொருளொருசொல்*

***53.*** **அவற்றுள்,**
**வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்**
**வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினுந்**
**தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.**

*பொருள்:* வினைகள் வேறுபடும் பலபொருள் கொண்ட ஒரு சொல், வெவ்வேறு வினைகளிலும், வெவ்வேறு இனங்களிலும், வெவ்வேறு சார்புகளிலும், மாறி வந்து, தெளிவானப் பொருள் தரும்.

*எடுத்துக்காட்டு:*

*வெவ்வேறு வினைகள்:*

*மா என்பது, மரத்தையும், மாட்டையும் குறிக்கும் பலபொருள் கொண்ட ஒரு சொல்.*

*'மா பூத்தது', 'மா காய்த்தது' என்றால், வினையால், 'மா' என்பது மரத்தைக் குறிக்கின்றது.*

*'மா ஓடியது' என்றால், வினையால், 'மா' என்பது மாட்டைக் குறிக்கின்றது.*

*வெவ்வேறு இனங்கள்:*

*'மாவும் மருதும் பூத்தன' என்றால், இனத்தால், 'மா' என்பது மரத்தைக் குறிக்கின்றது.*

*'மாவும் மரையும் ஓடின' என்றால், இனத்தால்,'மா' என்பது மாட்டைக் குறிக்கின்றது.*

*வெவ்வேறு சார்புகள்:*

*'வில்லுக்கு கோல் தா' என்றால், 'கோல்' என்பது, 'அம்பு' எனும் பொருள் தரும்.*

*'குதிரைக்கு கோல் தா' என்றால், 'கோல்' என்பது, 'சாட்டைக் கோல்' எனும் பொருள் தரும்.*

***புறனடை***

***54. ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன்றும்.***

***பொருள்:*** *பொதுவான வினைச்சொல்லின் இடத்தில், பொருள் தெளிவாய்த் தோன்றாது.*

***எடுத்துக்காட்டு:***

*'வீழ்ந்தது' எனும் வினைச்சொல், 'மா' எனும் மரத்திற்கும், 'மாடு' எனும் விலங்கிற்கும், பொதுவாய் வரும் வினைச்சொல்.*

*'மா வீழ்ந்தது' என்றால், 'மரம் வீழ்ந்தது', 'மாடு வீழ்ந்தது' என இரண்டு பொருளையும் தரும். எது என தெளிவாக தெரியாது.*

***வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல்***

***55. வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல்***

*நினையுங் காலைக் கிளந்தாங் கியலும்.*

***பொருள்:*** சொல் வழக்குகளை ஆராய்ந்துப் பார்க்கையில், பலபொருளைக் கொண்ட ஒரு சொல், வினை வேறுபடாமல், தோன்றும் இயல்புடையது.

***எடுத்துக்காட்டு:***

'மாவிற்கு நீர் கொடு' என்றால், 'மாமரத்திற்கு நீர் கொடு', 'மாட்டிற்கு நீர் கொடு' என வினை வேறுபடாமல், பொருள் பலவாக உள்ளன.

### குறித்தோன் கூற்றம்

***56.*** *குறித்தோன் கூற்றந் தெரிந்துமொழி கிளவி.*

***பொருள்:*** கூறப்படுபவன், கூற்று எதுவென அறிந்துப் பேசுக சொல்லை. யாரிடம், எதைப் பேசுகிறோம் என்று தெரிந்துப் பேசு.

***விளக்கம்:*** வேறாக, தவறாகப் புரிந்துக் கொள்ளப்படும் எனத் தெரிந்தால், தெளிவுபடும் வகையில் பேசுதல் வேண்டும்.

'மாஞ்செடிக்கு நீர் கொடு' என்றோ, 'மாவிலங்குக்கு நீர் கொடு' என்றோ தெளிவாய்ப் பேசுதல் வேண்டும்.

### உயர்திணைப் பெயர்களின் அஃறிணை முடிபுகள்

***57.*** *குடிமை யாண்மை யிளமை மூப்பே*
*அடிமை வன்மை விருந்தே குழுவே*
*பெண்மை யரசே மகவே குழவி*
*தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி*
*காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொலென்று*
*ஆவறு மூன்றும் உளப்பட தொகைஇ*
*அன்ன பிறவும் அவற்றொடு சிவணி*
*முன்னத்தினுணருங் கிளவி யெல்லாம்*
*உயர்திணை மருங்கின் நிலையின வாயினும்*
*அஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும்.*

***பொருள்:***

1. குடிமை
2. ஆண்மை

3. இளமை
4. மூப்பு
5. அடிமை
6. வன்மை
7. விருந்து
8. குழூ
9. பெண்மை
10. அரசு
11. மகவு
12. குழவி
13. பேடி / அலி
14. குருடு / செவிடு / ஊமை / நொண்டி
15. காதல்
16. சிறப்பு
17. கொலை
18. வெற்றி

ஆகிய பதினெட்டு சொற்கள் உட்பட்ட தொகுதியும், அவற்றுடன் சேர்ந்து, அதைப் போன்ற பிற சொற்களும், (முன்னம்) நேரடியாய் உரையாடும் போது, உயர்திணைக்கு நிலையாய் உரியனவாயினும், அஃறிணைத் தன்மையில் தோன்றும் இயல்புடையன.

**விளக்கம்:** இவை யாவும், குறிப்பிட்ட பால்தன்மை அற்றவை என்பதால், இந்நிலைப்பாடா?

**எடுத்துக்காட்டு:**

உயர்திணை. அஃறிணை:
1. குடிமை பெற்றான். குடிமை வந்தது.
2. ஆண்மை இழந்தான். ஆண்மை போனது.
3. இளமை கொண்டான். இளமை வந்தது.
4. மூப்பு எய்தினான். மூப்பு கொடியது.
5. அடிமை கிடைத்தான். அடிமை ஒழிந்தது.
6. வன்மை பெற்றான். வன்மை அழிந்தது.
7. விருந்து வந்தனர். விருந்து போனது.
8. குழூ போயினர். குழூ சென்றது.
9. பெண்மை அடைந்தாள். பெண்மை நகைத்தது.
10. அரசு ஏறினான். அரசு கவிழ்ந்தது.
11. மகவு வந்தாள். மகவு தந்தது.

12. குழவி வந்தான். குழவி தவழ்ந்தது.
13. பேடி வந்தாள். பேடி சிரித்தது.
14. குருடு வந்தான். குருடு சென்றது.
15. காதல் கொண்டாள். காதல் வந்தது.
16. பெருமை பெற்றான். பெருமை வந்தது.
17. கொலை செய்தான். கொலை நடந்தது.
18. வெற்றி பெற்றான். வெற்றி வந்தது.

இதுவுமது

**58 & 59.** **காலம் உலக முயிரே யுடம்பே**
**பால்வரை தெய்வம் வினையே பூதம்**
**ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்**
**ஆயீ ரைந்தொடு பிறவு மன்ன**
**ஆவயின் வரூஉங் கிளவி யெல்லாம்**
**பால்பிரிந் திசையா யுயர்திணை மேன**
**நின்றாங் கிசைத்த லிவணியல் பின்றே.**

பொருள்:

1. காலம்
2. உலகம்
3. உயிர்
4. உடம்பு
5. பால்வரை தெய்வம்
6. வினை
7. பூதம்
8. ஞாயிறு
9. திங்கள்
10. சொல்

ஆகிய பத்துடன், அவ்விடத்தில் (சொல்வழக்கில்) வரும் அத்தகைய பிற சொற்கள் எல்லாம், உயர்திணையில் பால் பிரிந்து ஒலிக்காது. நூற்பா 57 –ல் கூறிய சொற்களைப் போல், உயர்திணையில் நிலையாய் ஒலிப்பது, இவற்றின் இயல்பு இல்லை. அஃறிணைத் தன்மையில் ஒலிக்கும்.

**விளக்கம்:** 'காலம் பெற்றான்' என்றோ, 'காலம் பெற்றாள்' என்றோ. 'காலம் பெற்றார்' என்றோ உயர்திணைப் பால்பிரிந்து வராது. 'காலம் வந்தது' என வரும். 'உலகம் சிரித்தனர்' என்று

வலிந்து வருவதைக் காட்டிலும், 'உலகம் சிரித்தது' என்பது இயல்பாய் வருவது.

*எடுத்துக்காட்டு:*

*1.* காலம் வந்தது.
*2.* உலகம் சிரித்தது.
*3.* உயிர் போனது.
*4.* உடம்பு நொந்தது.
*5.* தெய்வம் நின்றது.
*6.* வினை செய்தது.
*7.* பூதம் விழுங்கியது.
*8.* ஞாயிறு விழுந்தது.
*9.* திங்கள் எழுந்தது.
*10.* சொல் புதிது.

புறனடை

***60. இசைத்தலும் உரிய வேறிடத் தான.***

***பொருள்:*** மேலே கூறிய பத்து சொற்கள், செய்யுளில், உயர்திணையில், பால் பிரிந்து வருதலும் உடையது.

***விளக்கம்:*** செய்யுளில், 'காலம் வந்தாள்', 'உயிர் போனான்' போன்றவை வரும்.

எடுத்த இனம் செப்புதல்

***61. எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே.***

***பொருள்:*** மேலே கூறிய சொற்கள், தம் இனச் சொற்களுடன் உரைத்தலும் உடையது.

*எடுத்துக்காட்டு:*

*1.* நேரம் காலம் வந்தது.
*2.* ஊரும் உலகும் சிரித்தது.
*3&4.* உயிரும் உடலும் நொந்தது.
*5.* தெய்வமும் கடவுளும் சதிசெய்தது.
*6.* வினையும் விளைவும் ஊழானது.
*7.* நீரும் பூதமும் விழுங்கியது.
*8.* ஞாயிறும் விண்ணும் ஒளிர்ந்தது.

*9.* *திங்களும் வானும் குளிர்ந்தது.*

*10.* *சொல்லும் பொருளும் புதியது.*

*பன்மை சுட்டிய பெயர்கள்*

***62.*** ***கண்ணுந் தோளு முலையும் பிறவும்***
***பன்மை சுட்டிய சினைநிறைக் கிளவி***
***பன்மை கூறுங் கடப்பா டிலவே***
***தம்வினைக் கியலு மெழுத்தலங் கடையே.***

*பொருள்:* *கண், தோள், முலை, மற்றும், இவை போன்று இரட்டையாய் உள்ள, செவி, கை, கால், இதழ் போன்றவற்றை, கண்கள், தோள்கள், முலைகள், செவிகள், கைகள், கால்கள், இதழ்கள் என, உடல் உறுப்புகளின் பெயர்களைப் பன்மையில் கூற வேண்டிய கட்டாயம், செய்யுளில் இல்லை.*

*எழுத்தில் அல்லாதபோது, பேச்சு வழக்கில், வினைச்சொல்லின் பன்மைக்கேற்றவாறு, உடல் உறுப்புகளின் பெயர்கள், பன்மையாய் வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*'கண் சிவந்தது' என, செய்யுளில் வரும். கண்கள் இரண்டாக இருப்பினும், அவற்றின் செயல்பாடு ஒன்றாகவே உள்ளது. எனவே, ஒருமையிலேயே பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் வந்தன.*

*பேச்சு வழக்கில், 'கண்கள் சிவந்தன' எனவும், 'கண் இரண்டும் சிவந்துப் போயிற்று' எனவும் வரும்.*

# 2. வேற்றுமையியல்

வேற்றுமையியல் = வேற்றுமை + இயல். வேற்றுமை இயல்பு. வேறுபடுத்தும் இயல்பு. பொதுமையிலிருந்து தனித்துப் பிரித்துக் காட்டும் தன்மை. ஒருமையிலிருந்து பன்மையாக்கும் பண்பு.

வேற்றுமைப்படுத்தல் நிகழாத வரை, தானும் (அகமும்) புறமும் கூட பிரியாத முழுமை நிலையே நீடிக்கின்றது. மொழி யற்ற நிலைமை தொடர்கின்றது. மௌனமும் அமைதியும் நிலைக்கின்றது.

புலன்களின் இயக்கத்தால், அகமும் புறமும் பிரிகின்றது.

காண்கின்ற காட்சி ஒற்றைத்தன்மையாக உள்ளது. எல்லாப் பொருட்களும் ஒற்றைக்காட்சியின் பிரிபடாத அங்கங்களாக உள்ளன. ஒரு பொருளுக்கு அதன் பெயரைச் சுட்டியதும், அப்பொருள் அந்த ஒற்றைக்காட்சியிலிருந்து பிரிந்து தனிப்பட்டு விடுகின்றது. வேற்றுமைப்படுத்தப்படுகின்றது. காட்சிகள் பன்மை யாகி விடுகின்றன. பெயர்பெற்ற பொருள் முன்புலத்திலும், ஒற் றைக்காட்சி பின்புலத்திலும் நிற்கின்றன. மொழி இயக்கம் பெறுகின்றது.

### வேற்றுமை ஏழு என்பது

**63. வேற்றுமை தாமே ஏழென மொழிப.**

***பொருள்:*** வேற்றுமைகள் என்பன, மொத்தம் ஏழு என்று சொல்லுவர், அறிஞர்கள்.

***விளக்கம்:*** ஐ, ஒடு, கு, இன், அது, கண் ஆகிய ஆறினையும்,

உருபியலில் கண்டோம். அவற்றுடன், 'பெயர்' சேர்ந்து, வேற்றுமைகள், ஏழாகியது. பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண் ஆகிய ஏழும் வேற்றுமைகள் எனப்பட்டன.

ஐ, ஒடு, கு, இன், அது, கண் ஆகிய ஆறும், பெயர்ச்சொல்லை அடுத்து உருபுகளாய் / உருவுகளாய் / வடிவங்களாய் வந்து வேற்றுமைப் பொருளை உணர்த்தின.

'பெயர்' என்பது, தானாகவே, தன்னியல்பாகவே வேற்றுமையை உணர்த்துகின்றது. பிறவற்றிலிருந்து வேறுபடுத்தப்படுகின்றது.

## வேற்றுமை எட்டென்பது

**64. விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே.**

**பொருள்:** 'விளி' யைக் கணக்கில் எடுத்துக் கொண்டால், வேற்றுமைகள், விளியுடன் சேர்ந்து, மொத்தம் எட்டாகும்.

**விளக்கம்:** விளி என்பது பெயரின் திரிந்த நிலை. 'கந்தன்' என்பது பெயர் என்றால், 'கந்தா' என்பது விளியாகும். பிறரில் இருந்து கந்தனைத் தனிப்படுத்தி வேறுபடுத்துவதால், வேற்றுமை எனப்படுகின்றது.

## வேற்றுமையின் பெயரும் முறையும் உணர்த்துதல்

**65. அவைதாம்,**
**பெயர் ஐ ஒடு கு**
**இன் அது கண் விளி என்னும் ஈற்ற.**

**பொருள்:** அந்த எட்டு வேற்றுமைகள் யாவை என்றால், 'பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண்', இறுதியாய் 'விளி' என்பதாகும்.

## எழுவாய் வேற்றுமை

**66. அவற்றுள்,**
**எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே.**

எழுவாய் = முதல்.

**பொருள்:** மேற்கூறிய எட்டு வேற்றுமைகளுள், பெயர் தோன்றும்

*நிலையிலேயே, முதல் வேற்றுமை உருவாகின்றது.*

***விளக்கம்:*** *'கந்தன்' எனும் பெயரைச் சொன்ன உடனேயே, அப்பெயரைக் கொண்ட நபர், பிறரிலிருந்து வேறுபடுத் தப்படுகின்றார், அந்நியப்படுத்தப்படுகின்றார். வேறு எந்த வேற்றுமை உருபுகளும் இல்லாமலேயே, எந்த வினையும் அவர் நிகழ்த்தாமலே அல்லது அவர் மேல் நிகழ்த்தப்படாமலே, அவர் வேற்றுமைப்படுத்தப்படுகின்றார்.*

### *எழுவாய் பயனிலை ஏற்றல்*

***67. பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்***
***வினைநிலை உரைத்தல் வினாவிற் கேற்றல்***
***பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்று***
***அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே.***

***பொருள்:*** *பொருளைச் சுட்டும் பெயர்ச்சொற்கள், கட்டளை ஏற்கும் பெயர்ச்சொற்கள், வினை செய்வதைக் குறிக்கும் பெயர்ச்சொற்கள், வினாவில் வரும் பெயர்ச்சொற்கள், பண்பு கொண்டதைக் குறிக்கும் பெயர்ச்சொற்கள், தனிப்பெயரைக் கொண்டவனின் பெயர்ச்சொற்கள் ஆகியவை அன்றி, பிறவும் பெயரின் பயனான வேற்றுமையைக் குறிக்கின்றன.*

***எடுத்துக்காட்டு:***

*பொருளைச் சுட்டும் பெயர்ச்சொற்கள்:*
*அது, இது, உது, அவை, இவை, உவை.*

*கட்டளை ஏற்கும் பெயர்ச்சொற்கள்:*
*நீ, நீர், நீங்கள்.*

*வினை செய்வதைக் குறிக்கும் பெயர்ச்சொற்கள்:*
*மரம் நட்டவன், நீர் ஊற்றுபவன், பழம் பறிக்கப்போகிறவன்.*

*வினாவில் வரும் பெயர்ச்சொற்கள்:*
*அவனா? இவளா? உவரா?*

*பண்பு கொண்டதைக் குறிக்கும் பெயர்ச்சொற்கள்:*
*கரியது, பெரியன், பச்சையன்.*

*தனிப்பெயரைக் கொண்டப் பெயர்ச்சொற்கள்:*
*மரம், செடி, கொடி, கந்தன், சந்தன், நந்தன்.*

## தொகைப் பெயரும் வேற்றுமை

*68. பெயரின் ஆகிய தொகையுமா ருளவே*
*அவ்வும் உரிய அப்பா லான.*

***பொருள்:*** *பெயராய் ஆகின்ற தொகைச்சொற்களும் உள்ளன. அவையும் வேற்றுமைப்படுத்தும் வகையையைச் சேர்ந்தவை.*

***விளக்கம்:*** *'சாத்தன் கந்தன்', சாத்தனின் கந்தன் என்பது போன்ற பெயர்த்தொகையும், 'கொல்யானை' போன்ற வினைத்தொகையும், 'பெயரை'ப் போல், வேற்றுமைப்படுத்தும் வகையையைச் சேர்ந்தவை.*

## பெயர்களின் தெளிவு

*69. எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி*
*அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப.*

***பொருள்:*** *பேச்சு வழக்கிலும், செய்யுளிலும் பெயர் தெளிவாக தோன்றி, அவ்வாறே நிற்பது சிறந்தது என்பர், அறிஞர்.*

***விளக்கம்:***

*'தலையாலங்கானத்துச்செருவென்றவன்'*

*'தலையாலங்கானத்துச்செருவென்ற பாண்டியன்'*

*என்பதைக் காட்டிலும்,*

*'தலையாலங்கானத்துச்செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியன்'*

*என்பதே தெளிவான வேற்றுமைப்படுத்தும் பெயராக இருக்கும்.*

## உருபேற்றல் பெயரதிலக்கணம்

*70. கூறிய முறையின் உருபுநிலை திரியாது*
*ஈறுபெயர்க் காகும் இயற்கைய என்ப.*

***பொருள்:*** *முன்பு உருபியலில் கூறியபடி, வேற்றுமை உருபுகள், இடம் மாறாமல், பெயர்ச்சொல்லின் இறுதியில் வரும் இயல்புடையன, என்பர் அறிஞர்.*

## பெயரதனின் இலக்கணம்

71. பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழில்நிலை ஒட்டும் ஒன்றலங் கடையே.

*பொருள்:* நிலையான பெயர்ச்சொல் காலத்தை உணர்த்தாது. வினையின் நிலைமையைக் கொண்ட பெயர்ச்சொல், காலம் உணர்த்தும்.

*எடுத்துக்காட்டு:*

அது, நீ, மரம், பெரியன், 'சாத்தன் கந்தன்' போன்ற பெயர்ச்சொற்கள் காலத்தை உணர்த்தா.

'மரம் நட்டவன்', 'நீர் ஊற்றுபவன்', 'பழம் பறிக்கப்போகிறவன்', 'தலையாலங்கானத்துச்செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்' போன்ற வினையின் காலத்தைக் குறித்து நிற்கும் பெயர்ச்சொற்கள் காலத்தை உணர்த்தும்.

## இரண்டாம் வேற்றுமை இன்ன பொருட்கண் வரும் எனல்

72. இரண்டா குவதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்பு
அவ்விரு முதலின் தோன்றும் அதுவே
காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்
ஒப்பின் புகழின் பழியின் என்றா
பெறலின் இழவின் காதலின் வெகுளியின்
செறலின் உவத்தலின் கற்பின் என்றா
அறுத்தலின் குறைத்தலின் தொகுத்தலின் பிரித்தலின்
நிறுத்தலின் அளவின் எண்ணின் என்றா
ஆக்கலின் சார்தலின் செலவின் கன்றலின்
நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்றா
அன்ன பிறவும் அம்முதற் பொருள
என்ன கிளவியும் அதன்பால என்மனார்.

*பொருள்:* 'ஐ' எனப் பெயர் கொண்ட இரண்டாம் வேற்றுமைச்சொல் அல்லது வேற்றுமை ஒலி, எப்படி வந்தாலும், வினை மற்றும் வினைக்குறிப்பு ஆகிய இரண்டுக்கும் உரிய

பெயர்ச்சொல்லை அடுத்துத் தோன்றும்.

காப்பு, ஓப்பு, ஊர்தி, இழை, ஒப்பு, புகழ், பழி மற்றும் பெறல், இழவு, காதல், வெகுளி, செறல், உவத்தல், கற்பு மற்றும் அறுத்தல், குறைத்தல், தொகுத்தல், பிரித்தல், நிறுத்தல், அளவு, எண் மற்றும் ஆக்கல், சார்தல், செலவு, கன்றல், நோக்கல், அஞ்சல், சிதைப்பு மற்றும் அவை போன்றவற்றில் உள்ள பெயர்ச்சொற்களை அடுத் தும்; மேலே கூறியவற்றில் உள்ள வினைப்பெயர்ச்சொற்கள் மற்றும் அவை போன்ற எந்தச் சொல்லும், வினை அல்லது வினைக்குறிப்பு ஆவதற்கு வரும் பெயர்ச்சொற்களை அடுத்தும், 'ஐ' எனும் இரண் டாம் வேற்றுமை வரும் என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

ஊர்தி, இழை, புகழ், பழி, காதல், வெகுளி, கற்பு, அளவு, எண், செலவு போன்றவை பெயர்ச்சொற்கள்.

காப்பு, ஓப்பு, பெறல், இழவு, செறல், உவத்தல், அறுத்தல், குறைத்தல், தொகுத்தல், பிரித்தல், நிறுத்தல், ஆக்கல், சார்தல், செலவு, கன்றல், நோக்கல், அஞ்சல், சிதைப்பு போன்றவை வினைப்பெயர்ச்சொற்கள்.

வினையில், பெயர்ச்சொற்களை அடுத்து 'ஐ' எனும் இரண்டாம் வேற்றுமை:

ஊர்தியைப் பிடித்தான். இழையைப் பிரித்தான். புகழை ஏற்றான். பழியைச் சுமந்தான். காதலை வெறுத்தான். வெகுளியை அடக்கினான். கற்பைக் காத்தான். அளவை ஏற்றினான். எண்ணை மாற்றினான். செலவைக் குறைத்தான்.

சொற்கள் இடம் மாறி வந்தாலும், பெயர்ச்சொற்களை அடுத்து வரும், 'ஐ' எனும் இரண்டாம் வேற்றுமை:

பிடித்தான் ஊர்தியை. பிரித்தான் இழையை. ஏற்றான் புகழை. சுமந்தான் பழியை. வெறுத்தான் காதலை. அடக்கினான் வெகு ளியை. காத்தான் கற்பை. ஏற்றினான் அளவை . மாற்றினான் எண்ணை. குறைத்தான் செலவை.

வினையில், வினைப்பெயர்ச்சொற்களை அடுத்து 'ஐ' எனும் இரண்டாம் வேற்றுமை:

காப்பைக் கட்டினான். ஓப்பைச் செய்தான். பெறலை இழந்தான். இழவைப் பெற்றான். செறலைத் துணிந்தான். உவத்தலைத் துறந் தான். அறுத்தலை முடித்தான். குறைத்தலைத் தொடர்ந்தான்.

தொகுத்தலை முயன்றான். பிரித்தலை மறந்தான். நிறுத்தலைப் பொறுத்தான். ஆக்கலை மறுத்தான். சார்தலைக் குறைத்தான். செலவைச் செய்தான். கன்றலை இழந்தான். நோக்கை மறந்தான். அஞ்சலைத் துறந்தான். சிதைப்பைத் தொடர்ந்தான்.

சொற்கள் இடம் மாறி வந்தாலும், வினைப்பெயர்ச்சொற்களை அடுத்து வரும், 'ஐ' எனும் இரண்டாம் வேற்றுமை:

கட்டினான் காப்பை. செய்தான் ஒப்பை. இழந்தான் பெறலை. ...., தொடர்ந்தான் சிதைப்பை.

வினைக்குறிப்பில், பெயர்ச்சொற்களை அடுத்து 'ஐ' எனும் இரண்டாம் வேற்றுமை:

ஊரைக் காப்பன். நிலத்தை ஒப்பன். மரத்தை இழைப்பன். மனத்தை ஒப்புவன். பரிசைப் பெறுவன். மானத்தை இழப்பன். ஊரைப் புகழ்வன். நாட்டைப் பழிப்பன். பகையைச் செறுவன். பாட்டை உவப்பன். தாலியை அறுப்பன். கூலியைக் குறைப்பன். கதைகளைத் தொகுப்பள். நீரைப் பிரிப்பன். போரை நிறுத்தன். சொல்லை ஆக்கன். உறவைச் சார்ந்தன். சூதைக் கன்றன். அண்ணலை நோக்குனள். பகையை அஞ்சுவன். அணியைச் சிதைப்பன்.

சொற்கள் இடம் மாறி வந்தாலும், பெயர்ச்சொற்களை அடுத்து வரும், 'ஐ' எனும் இரண்டாம் வேற்றுமை:

காப்பன் ஊரை. ஒப்பன் நிலத்தை. இழைப்பன் மரத்தை. ..., சிதைப்பன் அணியை.

### மூன்றாம் வேற்றுமை இன்ன பொருட்கண் வரும் எனல்

**73.** மூன்றா குவதே
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே
அதனின் இயற லதற்றகு கிளவி
அதன்வினைப் படுத லதனின் ஆதல்
அதனிற் கோடல் அதனொடு மயங்கல்
அதனோ டியைந்த ஒருவினைக் கிளவி
அதனோ டியைந்த வேறுவினைக் கிளவி
அதனோ டியைந்த ஒப்ப லொப்புரை
இன்னான் ஏது ஈங்கென வரூஉம்

*அன்ன பிறவும் அதன்பால என்மனார்.*

*முதற்றது = முதலாகக் கொண்டது.*

*இயறல் = இயல் + அறல். இயல்பு அறுதல்.*

***பொருள்:*** *'ஒடு' எனப் பெயர் கொண்ட வேற்றுமைச்சொல், வினை, முதல், கருவி ஆகியவற்றை தனக்கு முன்பாகக் கொண்டது.*

*'ஒடு' வின் இயல்பு பிரிதல், 'ஒடு' இணையான சொல்லுக்கு வருதல், 'ஒடு' வினையோடு சேர்தல், 'ஒடு' கருவியொடு சேர்தல், 'ஒடு' அளத்தலுடன் சேர்தல், ஒன்றுடன் 'ஒடு' சேர்ந்து மற்றதுடன் இரண்டறக் கலத்தல், 'ஒடு', ஒரு வினைச்சொல்லுக்கு வருதல், 'ஒடு',வேறு வினைச்சொல்லுக்கு வருதல், 'ஒடு', வலிந்துச் சேர்த்து உரைக்கும் சொல்லுடன் வருதல், 'இன்', 'ஆன்', 'ஏது', 'ஈங்கு' என்பவற்றுடனும், அதைப் போன்ற பிறவற்றுடனும், 'ஒடு' சேரும்.*

***எடுத்துக்காட்டு:***

*கந்தனொடு நந்தன் வாளொடு வெட்டியதொடு சிதைத்தான். இதில், 'கந்தன்' எனும் முதல் அல்லது பெயருடனும், 'வாள்' எனும் கருவியுடனும், 'வெட்டியது' எனும் வினையுடனும், 'ஒடு' சேர்ந்தது.*

*1. 'ஒடு' வின் இயல்பு பிரிதல்: 'கந்தனொடு நந்தன்'. முக்கியத்துவம், கந்தனிலிருந்து நந்தனுக்குப் போகின்றது.*

*2. 'ஒடு' இணையானச் சொல்லுக்கு வருதல்: அரசனொடு அரசி*

*3. 'ஒடு' வினையோடு சேர்தல்: வெட்டியதொடு*

*4. 'ஒடு' கருவியொடு சேர்தல்: வேலொடு கொன்றான்.*

*5. 'ஒடு', அளத்தலுடன் சேர்தல்: படியொடு அளந்தான்.*

*6. ஒன்றுடன் 'ஒடு' சேர்ந்து மற்றதுடன் இரண்டறக் கலத்தல்: பாலொடு நீர் கலந்தது.*

*7. 'ஒடு' ஒரு வினைச்சொல்லுக்கு வருதல்: அரசனொடு வந்தான்.*

*8. 'ஒடு' பிற வினைச்சொல்லுக்கு வருதல்: வெட்டியதொடு சிதைத்தான்*

*9. 'ஒடு', வலிந்து சேர்த்து உரைக்கும் சொல்லுடன் வருதல்: பொன்னொடு இரும்பு*

*10. 'ஒடு', 'இன்' எனும் சாரியையுடன் வருதல்: மதியினொடு*

*மேகம் வந்தது.*

*11. 'ஒடு', 'ஆன்' எனும் விகுதியுடன் வருதல்: கொன்றானொடு சேர்ந்தான்.*

*12. 'ஒடு', 'ஏது' எனும் வினாவுடன் வருதல்: ஏதொடு வந்தான்?*

*13. 'ஒடு', 'ஈங்கு' எனும் சுட்டுடன் வருதல்: ஈங்கொடு நின்றான்.*

**நான்காம் வேற்றுமை இன்ன பொருட்கண் வரும் எனல்**

*74.* **நான்கா குவதே**
**குவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**எப்பொரு ளாயினுங் கொள்ளும் அதுவே**
**அதற்குவினை யுடைமையின் அதற்குடம் படுதலின்**
**அதற்குப்படு பொருளி னதுவாகு கிளவியின்**
**அதற்கியாப் புடைமையின் அதற்பொருட் டாதலின்**
**நட்பிற் பகையிற் காதலிற் சிறப்பினென்று**
**அப்பொருட் கிளவியு மதன்பால என்மனார்.**

*அதற்கு = அது + அன் + கு.*

**பொருள்:** *நான்காவது வேற்றுமைச்சொல் அல்லது ஒலி, 'கு' எனும் பெயருடையது. அது, எல்லா சொற்களுடனும் சேரும்.*

*அந்த 'கு', வினை உரியதாகும் பொருளில், ஒப்புக்கொள்ளும் பொருளில், பண்பு உரிய பொருளில், ஒருசொல்லுக்கு இணையான பிறிதொரு சொல்லைக் குறிக்கையில், செய்யுளில் உரியதாகும் பொருளில், ஒன்றிற்காக மற்றொன்று செய்தல் எனும் பொருளில், நட்பு, பகை, காதல், சிறப்பு மற்றும் அதைப் போன்ற பிற சொற்களுடனும் வரும் எனும் கருத்துடையவர்கள், அறிஞர்கள்.*

**எடுத்துக்காட்டு:**

*1. வினை உரியதாகும் பொருள்: செய்வதற்குத் துணிந்தான்.*

*2. ஒப்புக்கொள்ளும் பொருள்: அழைப்புக்கு ஒப்பினான்.*

*3. பண்பு உரியப் பொருள்: கண்ணனுக்குக் கருமை. இராமனுக்கு நீலம்.*

*4. ஒருசொல்லுக்கு இணையான பிறிதொரு சொல்லைக் குறிக்கும் பொருள்: குதிரைக்குக் குர்ரம். பொன்னுக்குப் பறி.*

*5.* *செய்யுளில் உரியதாகும் பொருள்: 'செயற்கரிய செய்வார்'. செயற்கரிய = செயல் + கு + அரிய.*

*6.* *ஒன்றிற்காக மற்றொன்று செய்தல் எனும் பொருள்: கூலிக்கு மாரடித்தான். காசுக்குத் தலைகுனிந்தான்.*

*நட்புக்கு பகை செய்தான். பகைக்கு நட்பானான்.*

*காதலுக்குச் சிறப்பு செய்தான். சிறப்புக்குக் காதல் செய்தான்.*

*பெயருடன்: கந்தனுக்கு*

*வினையுடன்: செய்வதற்கு. (செய்வதற்கு = செய் + அது + அன் + கு)*

*கருவியுடன்: வேலுக்கு*

*பண்புடன்: கருமைக்கு*

*உரியுடன்: சிறியதற்கு*

*வேற்றுமையுடன்: ஒடுவிற்கு. ஒடுவுக்கு.*

*சாரியையுடன்: அன்னிற்கு. அன்னுக்கு.*

**ஐந்தாம் வேற்றுமை இன்ன பொருட்கண் வரும் எனல்**

**75.** **ஐந்தா குவதே**
**இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**இதனின் இற்றிது என்னும் அதுவே**
**வண்ணம் வடிவே அளவே சுவையே**
**தண்மை வெம்மை அச்சம் என்றா**
**நன்மை தீமை சிறுமை பெருமை**
**வன்மை மென்மை கடுமை என்றா**
**முதுமை இளமை சிறத்தல் இழித்தல்**
**புதுமை பழைமை ஆக்கம் என்றா**
**இன்மை உடைமை நாற்றந் தீர்தல்**
**பன்மை சின்மை பற்று விடுதலென்று**
**அன்ன பிறவும் அதன்பால என்மனார்.**

*என்றா = என்று + ஆ. என்றாகும்.*

*பொருள்: ஐந்தாவது வேற்றுமைச்சொல், 'இன்' எனும் பெயரை*

உடையது. 'இதனுடைய', 'இதைவிடஇத்தன்மையதுஇது' எனும் பொருட்களில் அது வரும்.

வண்ணம், வடிவு, அளவு, சுவை, தண்மை, வெம்மை, அச்சம் ஆகிய சொற்களுடன் அவ்வாறு ஆகும்; நன்மை, தீமை, சிறுமை, பெருமை, வன்மை, மென்மை, கடுமை ஆகிய சொற்களுடன் அவ்வாறு ஆகும்; முதுமை, இளமை, சிறத்தல், இழித்தல், புதுமை, பழைமை, ஆக்கம் ஆகிய சொற்களுடன் அவ்வாறு ஆகும்; இன்மை, உடைமை, நாற்றம், தீர்தல், பன்மை, சின்மை, பற்றுவிடுதல் ஆகிய சொற்களுடன் அவ்வாறு ஆகும். இதைப் போன்ற பிற சொற்களும், இவ்வகையைச் சேர்ந்தவை எனும் கருத்துடையவர்கள், அறிஞர்கள்.

**எடுத்துக்காட்டு:**

'இதனுடைய' எனும் பொருளில்:

வானின் வண்ணம் நீலம். நிலவின் வடிவம் வட்டம். விண்ணின் அளவு பெரிது. மாவின் சுவை அருமை. நீரின் தண்மை இனிது. கதிரின் வெம்மை கொடிது. போராளியின் அச்சம் கொடுமை. நன்மையின் பெருமை. சிறுமையின் தீமை. வன்மையின் கடுமை. மென்மையின் நன்மை. முதுமையின் இழிவு. இளமையின் சிறப்பு. கவிதையின் புதுமை. செய்யுளின் பழைமை. புதுமையின் பழைமை. சொல்லின் ஆக்கம். இன்மையின் இன்மை. கந்தனின் உடைமை. பூவின் நாற்றம் இனிது. தீர்தலின் சின்மை கடிது. பற்றுவிடுதலின் பன்மை.

'இதைவிட இத்தன்மையது இது' எனும் பொருளில்:

வானின், நீலம் இராமன். நிலவின், வட்டம் சூரியன். விண்ணின், பெரிது வெளி. மாவின், சுவை தேன். நீரின், இனிது நிலவு. கதிரின், கொடிது வறுமை. போராளியின், கொடுமை தலைமையின் அச்சம். நன்மையின், பெருமை அமைதி. சிறுமையின், தீமை வன்மை..... பூவின், இனிது தென்றல். தீர்தலின் கடிது பின்பற்றுதல். பற்று விடுதலின் பெருமை பற்றாமை.

'இதனுடைய' எனும் பொருளில்: அவனின் சிறப்பு. அவளின் சிறப்பு.

'இதைவிட இத்தன்மையது இது' எனும் பொருளில்: அவனின், சிறந்தவள் அவள். அவனின், அவள் சிறந்தவள்.

ஆறாம் வேற்றுமை இன்ன பொருட்கண் வரும் எனல்

*76.* ***ஆறா குவதே***
***அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி***
***தன்னினும் பிறிதினும் இதன திதுவெனும்***
***அன்ன கிளவிக் கிழமைத் ததுவே***
***இயற்கையின் உடைமையின் முறைமையிற் கிழமையிற்***
***செயற்கையின் முதுமையின் வினையின் என்றா***
***கருவியின் துணையிற் கலத்தின் முதலின்***
***ஒருவழி யுறுப்பிற் குழூஉவின் என்றா***
***தெரிந்துமொழிச் செய்தியி னிலையின் வாழ்ச்சியின்***
***திரிந்து வேறுபடூஉம் பிறவு மன்ன***
***கூறிய மருங்கின் தோன்றுங் கிளவி***
***யாறன் பால என்மனார் புலவர்.***

*வாழ்ச்சி = வாழ் + ச் + இ. வாழ்கின்ற இயக்க இருப்பு. வாழ்க்கை.*

***பொருள்:*** *ஆறாவது வேற்றுமைச்சொல், 'அது' எனும் பெயரை உடையது. அது, தன்னிலையிலும், பிற முன்னிலை, படர்க்கையிலும், அவை போன்ற பிற சொற்களுக்கு 'இதன் அது இது' அல்லது 'இதற்கு உரிமையானது / உடைமையானது இது' எனும் பொருளில் வரும்.*

*இயற்கை, உடைமை, முறைமை, கிழமை, செயற்கை, முதுமை,வினை ஆகிய சொற்களுடன் அவ்வாறு ஆகும்; கருவி, துணை, கலம், முதல், ஒருவழி உறுப்பு, குழு ஆகிய சொற்களுடன் அவ்வாறு ஆகும்; தெரிந்து சொல்லுகின்ற செய்தி, நிலை, வாழ்ச்சி, திரிந்து வேறாய் ஆகின்ற பொருளின் பெயர்ச்சொல் மற்றும் அவை போன்ற மற்ற சொற்களும், கூறிய (தன்னிலை, முன்னிலை, படர்க்கை ஆகிய) இடங்களில் தோன்றினால், அவை ஆறாம் வேற்றுமையின் வகைப்படும் என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.*

***எடுத்துக்காட்டு:***
*எனது இயற்கை இதுதான்.*
*தனது உடைமையைத் தானே காக்க வேண்டும்.*
*எமது முறைமை இல்லை.*
*தமது கிழமை இந்நிலத்திற்கு உண்டு.*
*உனது செயற்கையான நடிப்பு.*

உமது முதுமை வினைப்பயன்.
கந்தனது கருவி வேல்.
முருகனது துணை வள்ளி.
அவனது கலம் இது.
இவனது முதல் ஆட்டம்.
மானது கொம்பு. ஆட்டது வால்.
போராளியது குழு.
எனக்கு நன்றாகத் தெரியும், அவரது கவிதைதான் இது.
மக்களது நிலை மோசம்.
அவர்களது வாழ்ச்சி பரிதாபம்.
எள்ளது நெய். ஆனது பால். (பசுவினது பால்). அரிசியது இட்டிலி. முட்டையது தோசை.

**ஏழாம் வேற்றுமை இன்ன பொருட்கண் வரும் எனல்**

77. ஏழா குவதே
**கண்ணனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்**
**அனைவகைக் குறிப்பின் தோன்றும் அதுவே**
**கண்கால் புறமகம் உள்ளுழை கீழ்மேல்**
**பின்சார் அயல்புடை தேவகை எனாஅ**
**முன் இடை கடை தலை வலமிடம் எனாஅ**
**அன்ன பிறவும் அதன்பால என்மனார்.**

வினைசெய் இடம் = தன்னிலை, முன்னிலை, படர்க்கை.

எனாஅ = என ஆகும்.

கண் = க் + அண் = மெய்யின் நெருங்கியத் தன்மை.

**பொருள்:** ஏழாவது வேற்றுமைச்சொல், ‘கண்’ எனும் பெயரை உடையது. அது, வினை செய்யும் இடங்களில், மலை, காடு, வயல், கடல், பாலை, வீடு, நாடு, ஊர், நிலவு போன்ற நிலவெளிகளில், காலை, மாலை, பகல், இரவு, பொழுது, நாள், கிழமை, மாதம், பருவம், வருடம் போன்ற காலநிலைகளில், எல்லா வகையான குறிப்புகளிலும் தோன்றும்.

கண் எனும் **பொதுவாக** இட, நில, காலத்தை வேற்றுமைப் படுத்தும் சொல், **குறிப்பாக / சிறப்பாக** கால், புறம், அகம், உள், உழை, கீழ், மேல், பின், சார், அயல், புடை, தே, வகை என ஆகும்;

முன், இடை, கடை, தலை, வலம், இடம் என ஆகும். அவை போன்ற பிறவும், ஏழாவது வேற்றுமைச்சொல் வகைப்பட்டவை என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.

**விளக்கம்:** 'கண்' என்பது 'இடம்' அல்லது 'வெளி' எனும் பொருளில் வருகின்றது. கால், புறம், அகம், உள், உழை, கீழ் போன்ற குறிப்பு அல்லது சிறப்புச் சொற்களும், அடிப்படையில், 'இடத்'தையே குறிக்கின்றது

***எடுத்துக்காட்டு:***

*பொதுப்பொருளிலும் குறிப்புப் பொருளிலும்:*

*வினை செய்யும் இடங்கள்:*
*நிலத்தின்கண் வந்தான்.*
*பட்டறையின்கண் வந்தான்.*
*தொழிற்சாலைக்கண் வந்தான்.*

*நிலவெளிகள்:*

*குறிஞ்சிக்கண் தேன் உண்டு. குறிஞ்சிக்கடை தேன் உண்டு.*
*முல்லைக்கண் மான் உண்டு. முல்லைக்குள் மான் உண்டு.*
*மருதக்கண் யாழ் உண்டே. மருதகம் யாழ் உண்டே.*
*நெய்தற்கண் கலம் உண்டு. நெய்தலுள் கலம் உண்டு.*
*பாலைக்கண் கொற்றவை உண்டு. பாலையிடை கொற்றவை இருந்தாள்*
*வீட்டின்கண் பொருள் உண்டா? வீட்டின்மேல் கடன் உண்டா?*
*நாட்டின்கண் அமைதி இல்லை. நாட்டினுள் அமைதி இல்லை.*
*நிலத்தின்கண் தற்கொலை உண்டு. நிலத்தின்மேல் தற்கொலை உண்டு.*
*ஊரின்கண் போராட்டம் இல்லை. ஊரின்கால் போராட்டம் இல்லை.*
*நிலவின்கண் காற்று இல்லை. நிலவினுள் காற்று இல்லை.*

*காலநிலைகள்:*

*காலைக்கண் அருணன் வந்தான். காலைக்குள் அருணன் வந்தான்.*
*மாலைக்கண் வருணன் சென்றான். மாலைமேல் வருணன் சென்றான்.*
*பகற்கண் செய்தான். பகலிடை செய்தான்.*
*இரவுக்கண் தூங்கினான். இரவின்பின் தூங்கினான்.*
*நடுப்பொழுதுக்கண் ஓய்ந்தான். நடுப்பொழுதுக்குள் ஓய்ந்தான்.*

திங்கட்கண் வந்தான். திங்கள்முன் வந்தான்.
சுவாதிக்கண் சென்றான். சுவாதியின்பின் சென்றான்.
ஆடிக்கண் விதைத்தான். ஆடித்தலை விதைத்தான்.
பின்பனிக்கண் அறுத்தான். பின்பனிக்கடை அறுத்தான்.

குறிப்பு அல்லது சிறப்புப் பொருளில்:

புத்தகம் எங்குள்ளது?
வீட்டின்கண் உள்ளது.

வீட்டில் எங்குள்ளது?
வீட்டின் அகத்துள்ளது.

அகத்தே எங்குள்ளது?
படிப்பு அறைக்குள் உள்ளது.

அறைக்குள் எங்குள்ளது?
பெட்டியின்முன் உள்ளது.

பெட்டி எங்குள்ளது?
நாற்காலியின்மேல் உள்ளது.

நாற்காலி எங்குள்ளது?
கட்டிலின் வலம் உள்ளது.

இவ்வாறு, பொதுவான வேற்றுமைப்படுத்தலில் இருந்து குறிப்பாக வேற்றுமைப்படுத்தப்படுகின்றது.

அறைக்குள் இருந்தவாறே வினவினால்,

'புத்தகம் எங்குள்ளது?'
'நாற்காலியின்கண் உள்ளது.'

இதுவும் தேவையான பொருளை வேற்றுமைப்படுத்தும்.

குறிப்பான வேற்றுமைச்சொல்லை அடுத்தும் பொது வேற்றுமைச்சொல் வரும்.

கீழ்க்கண். மேற்கண். வலக்கண். முற்கண். முதற்கண். அகக்கண். வடக்கண்.

## வேற்றுமை உருபுகள் பிரிந்து வருதல்

***78. வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை***
***ஈற்றுநின்றியலுந் தொகைவயின் பிரிந்தே.***

***பொருள்:*** *வேற்றுமைப் பொருளை மேலும் தெளிவாக்கும் போது, இறுதிக் குறிப்பு அல்லது சிறப்புச்சொல் மட்டும், சொல்தொடரில் இருந்து பிரிந்து, தனித்து வரும்.*

*விளக்கம்: இந்நூற்பா 77–ம் நூற்பாவின் தொடர்ச்சி போலும்.*

***எடுத்துக்காட்டு:***
*நாற்காலி, கட்டிலின்கண் எங்குள்ளது?*
*'வலம்.' (கட்டிலின் வலம் உள்ளது)*

**வேற்றுமை உருபு விரிதல்**

***79. பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கும்***
***எல்லாச் சொல்லும் உரிய என்ப.***

***பொருள்:*** *பலவிதமாக சேர்ந்து, வேற்றுமைப் பொருளைக் கொண்டு ஒலிக்கும் எல்லாச் சொற்களும், வேற்றுமை இயலுக்கு உரியன, என்பர் அறிஞர்.*

***எடுத்துக்காட்டு:***

*1. பெயரற்றவன். (பெயரின்றியும் வேறுபடுத்தும்)*

*2. அவன்இது செய்தான். ('இதை' என்பதற்குப் பதில், 'இது' என வந்துள்ளது. 'ஐ' மறைந்துள்ளது)*

*3. கந்தன்நந்தன் வந்தான். ('கந்தனொடு' என்பதற்குப் பதில், 'கந்தன்' என வந்துள்ளது. 'ஒடு' மறைந்துள்ளது)*

*4. சாமிபூசை செய்தான். ('சாமிக்கு' என்பதற்குப் பதில், 'சாமி' என வந்துள்ளது. 'கு' மறைந்துள்ளது)*

*5. கந்தன்வேல் இது. ('கந்தனின்' என்பதற்குப் பதில், 'கந்தன்' என வந்துள்ளது. 'இன்' மறைந்துள்ளது)*

*6. கந்தன்மயில் இது. ( 'கந்தனது' என்பதற்குப் பதில், 'கந்தன்' என வந்துள்ளது. 'அது' மறைந்துள்ளது)*

*7. குறிஞ்சிவந்தான். ('குறிஞ்சிக்கண்' என்பதற்குப் பதில்,*

‘குறிஞ்சி’ என வந்துள்ளது. ‘கண்’ மறைந்துள்ளது)

8. வேல். (‘வேலா’ என்பதற்குப் பதில், ‘வேல்’ என வந்துள்ளது. ‘ஆ’ மறைந்துள்ளது)

மேற்கூறியவற்றில், வேற்றுமை உருபுகள் இல்லாமலேயே, சொற்கள் பொருளை வேற்றுமைப்படுத்துகின்றது.

# 3. வேற்றுமை மயங்கியல்

வேற்றுமை மயங்கியல் = வேற்றுமை + மயங்கியல். வேற்றுமை = வேற்றுமை உருபு. மயங்கியல் = மயங்கும் இயல்பு.

வேற்றுமை மயங்கியல் = வேற்றுமை உருபுகள் மயங்கும் இயல்பு. வேற்றுமை உருபுகள் வடிவிலும் பொருளிலும் திரியும் இயல்பு.

**இரண்டாம் வேற்றுமை ஏழாம் வேற்றுமைப் பொருளில்**

***80.*** ***கரும மல்லாச் சார்பென் கிளவிக்***
***குரிமையு முடைத்தே கண்ணென் வேற்றுமை.***

***பொருள்:*** *'சார்பு' எனும் சொல், உடலின் செயலைக் குறிக்காமல் வந்தால், அதற்கு முன், இரண்டாம் வேற்றுமையான 'ஐ'க்குப் பதில், ஏழாம் வேற்றுமையான 'கண்' ணும் வரும் உரிமை உடையது.*

***விளக்கம்:*** *உடலின் செயலைக் குறிக்காத 'சார்பு' எனும் சொல், இங்கு, உளவியல் நெருக்கத்தைக் குறிக்கும். பொதுவாக, 'பொருண்மையின் நெருக்கத்'தைக் குறிக்கும் 'ஐ' எனும் வேற்றுமை உருபு, இங்கு 'இடத்'தைக் குறிக்கும்.*

***எடுத்துக்காட்டு:***

*'தூணைச் சார்ந்தான்'. இதில், உடலின் செயலைக் குறிக்கும் பொருளில், 'சார்ந்தான்' எனும் சொல் வந்தது.*

*'அரசரைச் சார்ந்தான்'. இதில், உடலின் செயலைக் குறிக்காமல்,*

உளவியல் அடிப்படையில், 'நெருங்கினான்' எனும் பொருளில், 'சார்ந்தான்' எனும் சொல்லும், 'இடம்' எனும் பொருளில், 'ஐ' எனும் வேற்றுமை உருபும், மயங்கி வந்தது.

'அரசர்கண் சார்ந்தான்'. 'கண்' எனும் வேற்றுமை உருபுக்கு, 'இடம்' எனும் பொருள் உள்ளதால், 'இடம்' எனும் பொருளில் வந்த 'ஐ' எனும் வேற்றுமை உருபுக்குப் பதில், 'கண்' எனும் வேற்றுமை உருபும் வருகின்றது.

**இதுவுமது**

***81. சினைநிலைக் கிளவிக் கையும் கண்ணும்***
***வினைநிலை ஒக்கும் என்மனார் புலவர்.***

***பொருள்:*** நிலைமொழியாக இருக்கும் உடல் உறுப்புப் பெயருடன் சேரும், 'ஐ' எனும் வேற்றுமை உருபும், 'கண்' எனும் வேற்றுமை உருபும், ஒத்தப் பொருளைத் தரும், எனும் கருத்துடையவர்கள், அறிஞர்கள்.

*விளக்கம்:* 'ஐ' எனும் வேற்றுமை உருபு, மேற்கண்ட நூற்பாவில் போல், இங்கும் 'இடத்'தைக் குறிக்கும். எனவே, இடத்தைக் குறிக்கும் வேற்றுமை உருபான, 'கண்', பதிலியாக வருகின்றது.

***எடுத்துக்காட்டு:***

*கண் + ஐ + குத்தினான் = கண்ணைக் குத்தினான்.*

*கண் + கண் + குத்தினான் = கண்கண் குத்தினான். கண்கட் குத்தினான்.*

*கண்ணில் குத்தினான். கண்ணுள் குத்தினான். கண்மேல் குத்தினான். கண்கீழ் குத்தினான்.* இவ்வாறு, 'கண்' எனும் வேற்றுமை உருபின் பொதுவான 'இடம்' எனும் பொருளில் வருவதோடு அன்றி, 'இல், உள், மேல், கீழ்' போன்ற அதன் குறிப்பு அல்லது சிறப்புப் பொருட்களிலும் வரும்.

**இதுவுமது**

***82. கன்றலுஞ் செலவும் ஒன்றுமார் வினையே.***

ஒன்றுமார் வினை = ஒன்றும் + ஆர் + வினை. பொருந்தும் அந்தச் செயல். (வேற்றுமை உருபுகள் 'ஐ'யும் 'கண்'ணும் ஒரே

*பொருண்மையைத் தரும்.)*

***பொருள்:*** *'கன்றல்' எனும் சொல்லும், 'செலவு' எனும் சொல்லும், மேற்கூறிய (81 ம் நூற்பாவில் கூறிய) செயலுடன் பொருந்தும்.*

***விளக்கம்:*** *'ஐ' எனும் வேற்றுமை உருபும், 'கண்' எனும் வேற்றுமை உருபும், ஒரே பொருளைத் தருவது, 'கன்றல்' எனும் சொல்லுக்கும், 'செலவு' எனும் சொல்லுக்கும், பொருந்தும்.*

***எடுத்துக்காட்டு:***

*கன்றல் = சிவத்தல். செலவு = பயணம்.*

*கன்றல் + ஐ + கண்டான் = கன்றலைக் கண்டான்.*

*கன்றல் + கண் + கண்டான் = கன்றல்கண் கண்டான்.*

*செலவு + இன் + ஐ + குறைத்தான். செலவினைக் குறைத்தான்.*

*செலவு + இன் + கண் + குறைத்தான். செலவின்கண் குறைத்தான்.*

*'கன்றல்' மற்றும் 'செலவு' எனும் சொற்கள் வெவ்வேறு வகைகளில் இடத்தைக் குறிக்கின்றன. எனவே, 'கண்' எனும் வேற்றுமை உருபு வந்து மயங்குகின்றது.*

### *முதற்பெயர் சினைப்பெயர் உருபுகள்*

***83. முதற்சினைக் கிளவிக் கதுவென் வேற்றுமை***
***முதற்கண் வரினே சினைக்கை வருமே.***

***பொருள்:*** *முதல் மற்றும் உறுப்பைக் குறிக்கும் சொற்கள் அடுத்தடுத்து வந்தும், 'அது' எனும் வேற்றுமை உருபு, முதலைக் குறிக்கும் சொல்லை அடுத்து வந்தால், உறுப்பைக் குறிக்கும் சொல்லை அடுத்து 'ஐ' எனும் வேற்றுமை உருபு வரவேண்டும்.*

***எடுத்துக்காட்டு:***

*தலை + அது + முடி + ஐ + வெட்டினான் = தலையது முடியை வெட்டினான்.*

*கை + அது + விரல் + ஐ + நீட்டினான். கையது விரலை நீட்டினான்.*

*விரல் + அது + நகம் + அத்து + ஐ + வெட்டினான். விரலது நகத்தை வெட்டினான்.*

*('நகமை' என்பது 'நகத்தின் வண்ணம்' என வேறு ஒரு பொருளைக் கொடுத்து விடலாம். எனவே, 'அத்து' எனும் சாரியை*

*இடையில் வருகின்றது.)*

*இங்கு, உறுப்பு, முக்கியத்துவம் பெறுகின்றது.*

**இதுவுமது**

***84. முதல்முன் ஐவரின் கண்ணென் வேற்றுமை***
***சினைமுன் வருதல் தெள்ளி தென்ப.***

***பொருள்:*** *முதலைக் குறிக்கும் சொல்லை அடுத்து, 'ஐ' எனும் வேற்றுமை உருபு வந்தால், உறுப்பைக் குறிக்கும் சொல்லை அடுத்து, 'கண்' எனும் வேற்றுமை உருபு வருவது, தெளிவானதாகும் என்பர் அறிஞர்.*

***எடுத்துக்காட்டு:***

*தலை + ஐ + முடி + கண் + சீராக்கு = தலையை முடிக்கண் சீராக்கு.*

*கை + ஐ + விரல் + கண் + தூய்மையாக்கு = கையை விரற்கண் தூய்மையாக்கு.*

*விரல் + ஐ + நகம் + கண் + வண்ணந்தீட்டு = விரலை நகங்கண் வண்ணந்தீட்டு*

*இங்கு, முதல், முக்கியத்துவம் பெறுகின்றது.*

**குறிப்பினான் உணர்த்துதல்**

***85. முதலும் சினையும் பொருள்வேறு படாஅ***
***நுவலுங் காலைச் சொற்குறிப் பினவே.***

***பொருள்:*** *முதலும் உறுப்பும் தாமாகப் பொருளை வேறு படுத்தாது. பேசும்போது, சொற்களும் வேற்றுமை உருபுகளும், எங்கு, எப்படிப் பயன்படுத்தப்படுகின்றன என்பதைப் பொறுத்து, பொருள் மாறுபடும்.*

***விளக்கம்:***

*தலை + அது + முடி = தலையது முடி. (உறுப்பு முக்கியத்துவம் பெறுகின்றது.)*

*முடி + அது + தலை = முடியது தலை. (முதல் முக்கியத்துவம்*

*பெறுகின்றது.)*

### பிண்டப்பொருளும் அவ்விலக்கணம் பெறல்

**86. பிண்டப் பெயரும் ஆயியல் திரியா**
**பண்டியல் மருங்கின் மரீஇய மரபே.**

**பொருள்:** பழமையான காலத்தில் மருவிய வழக்கத்தின்படி, தொகுதியின் பெயரும் மேற்கூறிய இயல்பிலிருந்து மாறாது.

**விளக்கம்:** முதல் – உறுப்பைப் போலவே, தொகுதி – பகுதியின் சொற்களும் வேற்றுமை உருபுகளும், எங்கு, எப்படிப் பயன்படுத்தப்படுகின்றன என்பதைப் பொறுத்து, பொருள் மாறுபடும்.

முதலில், உறுப்புகள் அங்கங்களாய் உள்ளதைப் போன்று, தொகுதியிலும், பகுதிகள் அங்கங்களாய் உள்ளன.

**எடுத்துக்காட்டு:**

*குப்பை + அது + எள் = குப்பையது எள். (பகுதி முக்கியத்துவம் பெறுகின்றது.)*

*எள் + அது + குப்பை = எள்ளது குப்பை. (தொகுதி முக்கியத்துவம் பெறுகின்றது.)*

*மூட்டை + அது + நெல் = மூட்டையது நெல். (பகுதி முக்கியத்துவம் பெறுகின்றது.)*

*நெல் + அது + மூட்டை = நெல்லது மூட்டை. (தொகுதி முக்கியத்துவம் பெறுகின்றது.)*

### ஒடு உருபு உயர் பெயர்வழி வருதல்

**87. ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே.**

**பொருள்:** ஒரு தொழிலாற்றும் 'ஒடு' எனும் வேற்றுமை உருபு, உயர்ந்த சொல்லை அடுத்தே வரும்.

**விளக்கம்:** மேலே, முதல் – உறுப்பு, தொகுதி – பகுதி என இரண்டுக்குமாக வந்தது, வேற்றுமை உருபு. ஆனால், இங்கு, உயர்ந்தது – தாழ்ந்தது என்பனவற்றுக்கு இடையில், 'ஒடு' எனும் வேற்றுமை உருபு வரும்போது, உயர்ந்த ஒன்றை அடுத்தே வரும்.

*தாழ்ந்ததை அடுத்து வராது.*

***எடுத்துக்காட்டு:***

*அரசனொடு சேவகர் வந்தனர். (உயர்ந்த அரசன் முக்கியத்துவம் பெறுகின்றான்.)*

*சேவகரொடு அரசன் வந்தான் என வராது. (வந்தால், அரசனை இழிவுபடுத்துவதாக வரும்.)*

### மூன்றாம் வேற்றுமையும் ஐந்தாம் வேற்றுமையும் ஏதுப் பொருளில்

***88.*** **மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய**
**ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி**
**நோக்கோர் அனைய என்மனார் புலவர்.**

*ஆக்கம் = வினைச்சொல்.*

*ஏது = காரணம்.*

***பொருள்:*** *காரணச்சொல்லுக்கும் வினைச்சொல்லுக்கும் இடையில், மூன்றாவது அல்லது ஐந்தாவது வேற்றுமை உருபு வந்தால், பார்ப்பவர்க்கு / கேட்பவர்க்கு ஒத்தப் பொருளைக் கொடுக்கும் என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.*

***எடுத்துக்காட்டு:***
*வியாபாரத்தொடு உயர்ந்தான்.*
*வியாபாரத்தின் உயர்ந்தான்.*
*வியாபாரத்தொடு தாழ்ந்தான்.*
*வியாபாரத்தின் தாழ்ந்தான்.*

### நோக்கல், நோக்கம், ஆகிய இரு பொருளில் இரண்டாம் வேற்றுமை

***89.*** **இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்கமவ்**
**விரண்டன் மருங்கின் ஏதுவு மாகும்.**

***பொருள்:*** *இரண்டாவது வேற்றுமை உருபு, நோக்கல் மற்றும் நோக்கம் ஆகிய இரண்டு பொருட்களில் வருகின்றது. அந்த இரண்டாவது நோக்கத்தில், காரணமும் வரும்.*

*நோக்கல் = வெறுமனே பார்த்தல்.*

*நோக்கம் = வேறு ஒரு காரணத்திற்காகப் பார்த்தல்.*

*எடுத்துக்காட்டு:*
*வானைப் பார்த்தான். (நோக்கல்)*
*வானை மழைக்காகப் பார்த்தான். (நோக்கம்)*
*அவளைப் பார்த்தான். (நோக்கல்)*
*அவளைக் காதலுக்காகப் பார்த்தான். (நோக்கம்)*

## ஆறாம் வேற்றுமை நான்காம் வேற்றுமைப் பொருளில்

**90.** **அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்**
**அதுவென் உருபுகெடக் குகரம் வருமே.**

***பொருள்:*** *'அது' எனும் வேற்றுமை உருபைக் கொண்ட உயர் திணைச் சொற்றொடரில், 'அது' எனும் வேற்றுமை உருபு கழிய, குகரம் கூடும்.*

*எடுத்துக்காட்டு:*
*நம்பி + ~~அது~~ + கு + மகன் –> நம்பிக்கு மகன்.*
*தங்கை + ~~அது~~ + கு + மகள் –> தங்கைக்கு மகள்.*

*'நம்பியது மகன்' என்பது 'மகனை நம்பினார்' என்றோ, 'நம்பி அது மகன்' என பிரிந்து 'நம்பியே மகன்' என்றோ, 'தங்கையது மகள்' என்பது 'தங்கை அது மகள்' என பிரிந்து, 'தங்கையே மகள்' எனவும் பொருள் தந்து விடலாம். தெளிவை உண்டாக்க, 'அது' எனும் வேற்றுமை உருபுக்கு மாற்றாக, 'கு' எனும் வேற்றுமை உருபு வருகின்றது.*

## இரண்டாம் வேற்றுமையும் மூன்றாம் வேற்றுமையும் மயங்குதல்

**91.** **தடுமாறு தொழிற்பெயர்க் கிரண்டும் மூன்றும்**
**கடிவரை இலவே பொருள்வயி னான.**

***பொருள்:*** *இரண்டு பெயர்களுக்கிடையில், குழப்பம் தரும் வினைச்சொல்லின் பொருளைத் தெளிவாக்க, 'ஐ' எனும் இரண்டாம் வேற்றுமையும், 'ஒடு' எனும் மூன்றாம் வேற்றுமையும் வருவதற்குத் தடையில்லை.*

*எடுத்துக்காட்டு:*

*புலி கொல் யானை –> 'கொல்' எனும் குழப்பம் தரும் வினைச்சொல், 'புலி கொல்யானை' என வந்து, 'புலியைக்*

கொல்லும் யானை' என்றும் 'புலிகொல் யானை' என வந்து, 'புலி கொல்லும் யானையை' என இரண்டு மாறுபட்ட பொருள் தரும். பேச்சிலும், எழுத்திலும் பொருளைத் தெளிவாக்குவது கடினம்.

எனவே, பொருளைத் தெளிவாக்க, 'ஐ' எனும் இரண்டாம் வேற்றுமையும், 'ஒடு' எனும் மூன்றாம் வேற்றுமையும் வருவதற்குத் தடையில்லை.

'புலியைக் கொல் யானை' என்றோ, 'புலியொடு கொல்யானை' என்றோ வரலாம்.

அல்லது

'யானையைக் கொல் புலி' என்றோ, 'யானையொடு கொல்புலி' என்றோ வரலாம்.

இவை, பொருளைத் தெளிவுபடுத்தும்.

**புறனடை**

**92. ஈற்றுப்பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்
வேற்றுமை தெரிப உணரு மோரே.**

பனுவல் = பல் + நுவல் = பலவற்றைப் பற்றிக் கூறும் நூல். ஒன்றைப் பற்றி பலவாறாய் கூறும் நூல். அகராதி. கலைக்களஞ் சியம்.

**பொருள்:** சொற்றொடரின் இறுதிப் பெயரை அடுத்து, உண் மையை அறிவதற்காக, அகராதி அல்லது கலைக்களஞ்சியத்தில் உள்ள வேற்றுமைப்படுத்தும் சொல்லைத் தேர்ந்தெடுத்துச் சேர்ப்பர், ஒன்றாக உணர்ந்தோர்.

**எடுத்துக்காட்டு:**

புலிகொல் யானை பிளிறியபடி விழுந்தது.
புலிகொல் யானை தந்தமுடன் விழுந்தது.
புலிகொல் யானை தும்பிக்கையுடன் விழுந்தது.
புலி கொல்யானை தன் கூட்டமுடன் சேர்ந்தது.
புலி கொல்யானை வெற்றியுடன் பிளிறியது.
புலி கொல்யானை தந்தத்தில் இரத்தமுடன் ஓடியது.

பிளிறல், தந்தம், தும்பிக்கை, கூட்டமாய் வாழ்தல் போன் றவை யானைக்கு உரியவை, புலிக்கு அல்ல. இவ்வகையான

*வேற்றுமைப்படுத்தும் சொற்களால், பொருள் தெளிவாக்கப் படுகின்றது.*

**இரண்டாம் வேற்றுமையும் மூன்றாம் வேற்றுமையும் ஓம்படைப் பொருளில் மயங்கல்**

***93. ஓம்படைக் கிளவிக் கையும் ஆனும்***
***தாம்பிரி விலவே தொகைவரு காலை.***

*ஓம்படை = ஓம்பு + அடை. ஓம்பி அடைவது. வீடு. ஓன் + படை. ஒன்றாய்க் கொண்டு தொடர்தல்.*

***பொருள்:*** *சொற்றொடரில் வரும்போது, வீடு எனும் சொல்லுக்கு, 'ஐ' எனும் வேற்றுமை உருபும், 'ஆன்' எனும் வேற்றுமை உருபும், மாறுபட்ட பொருளைத் தருவதில்லை, ஒரே பொருளையே தரும்.*

***எடுத்துக்காட்டு:***
*வீடு + ஐ + அடைந்தான் = வீட்டை அடைந்தான்.*
*வீடு + ஆன் + அடைந்தான் = வீட்டான் அடைந்தான்.*

**ஆறாம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் மயங்கல்**

***94. ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு***
***ஏழும் ஆகும் உறைநிலத் தான.***

*வாழ்ச்சி = வாழ்க்கை. வாழ்வு.*

*கிழமை = உரிமை.*

*உறைநிலம் = வாழ்விடம்.*

***பொருள்:*** *வாழ்க்கைக்கு உரிய வாழ்விடத்தை அடுத்து வரும், 'அது' எனும் ஆறாவது வேற்றுமை உருபின் இடத்தில், 'கண்' எனும் ஏழாவது வேற்றுமை உருபும் வரும்.*

***எடுத்துக்காட்டு:***
*வீடு + அது + மனிதன் = வீட்டது மனிதன்.*
*வீடு + கண் + மனிதன் = வீட்டின்கண் மனிதன்.*
*வீடு + உள் + மனிதன் = வீட்டுள் மனிதன். ('கண்' எனும் ஏழாவது வேற்றுமை உருபின், குறிப்பு அல்லது சிறப்புப் பொருளாக, 'உள்'.)*
*காடு + அது + யானை = காட்டது யானை.*
*காடு + கண் + யானை = காட்டின்கண் யானை.*

*காடு + உள் + யானை = காட்டுள் யானை. ('கண்' எனும் ஏழாவது வேற்றுமை உருபின், குறிப்பு அல்லது சிறப்புப் பொருளாக, 'உள்'.)*

### நான்காம் வேற்றுமையும் ஆறாம் வேற்றுமையும் மயங்கல்

***95.*** ***குத்தொக வரூஉங் கொடையெதிர் கிளவி***
***அப்பொருள் ஆறற் குரித்தும் ஆகும்.***

*கொடை எதிர் கிளவி = 'கொடை' க்கு எதிர்ச்சொல். காணிக்கை. பலி.*

*கொடை = கேட்டுப் பெறுதல்.*

*காணிக்கை. பலி = கேட்காமல் தருதல்.*

***பொருள்:*** *'கு' எனும் வேற்றுமை உருபு தொக்கி வரும், 'கொடை' க்கு எதிர்ச்சொல்லான 'காணிக்கை' அல்லது 'பலி', 'அது' எனும் ஆறாவது வேற்றுமை உருபு வந்தும், அப்பொருளைத் தருவதற்கு உரியது.*

***எடுத்துக்காட்டு:***
*கந்தன் + கு + காணிக்கை –> கந்தன் காணிக்கை*
*கந்தன் + அது –> கந்தனது காணிக்கை.*
*காளி + கு + பலி –> காளி பலி*
*காளி + அது + பலி = காளியது பலி.*

### ஐந்தாம் வேற்றுமையும் இரண்டாம் வேற்றுமையும் மயங்கல்

***96.*** ***அச்சக் கிளவிக் கைந்தும் இரண்டும்***
***எச்சம் இலவே பொருள்வயி னான.***

*எச்சம் = மீதம்.*

***பொருள்:*** *'அச்சம்' எனும் சொல்லுக்கு 'இன்' எனும் ஐந்தாவது வேற்றுமை உருபும், 'ஐ' எனும் வேற்றுமை உருபும், பொருள் தருவதில், குறை இல்லாதவை, சமமானவை.*

***எடுத்துக்காட்டு:***
*புலி + இன் + அஞ்சும் + யானை = புலியின் அஞ்சும் யானை.*
*புலி + ஐ + அஞ்சும் + யானை = புலியை அஞ்சும் யானை.*

*புறனடை*

*97. அன்ன பிறவுந் தொன்னெறி பிழையாது*
*உருபினும் பொருளினும் மெய்தடு மாறி*
*இருவயின் நிலையும் வேற்றுமை எல்லாந்*
*திரிபிடன் இலவே தெரியு மோர்க்கே.*

***பொருள்:*** மேற்கூறியவற்றைப் போன்றே, பழமையான விதிகளை மீறாமல், பிற சொற்களுடனும், தம் உருவமும் பொருளும் மாறிய, வேற்றுமை உருபுகள் சேர்ந்து, ஒரே பொருளைத் தரும். அவ்வேற்றுமைகள் எல்லாம் எவை எவை என்றறிவதில், குழப்பமில்லை, மொழி ஞானியர்க்கு.

*பல உருபுகள் அடுக்கி வருதல்*

*98. உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி*
*ஒருசொல் நடைய பொருள்செல் மருங்கே.*

***1. பொருள்:*** பல வேற்றுமை உருபுகள் தொடர்ந்து வந்து, ஒரு சொல்லை வேறுபடுத்தினாலும், பொருள் வரும் இடத்தில், அவ்வேற்றுமை உருபுகள் எல்லாம் ஒரு சொல்லின் இயல்புடையது.

***விளக்கம்:*** புலி + இன் + ஐ + அஞ்சியது + யானை = புலியினை அஞ்சியது யானை.

இதில், 'இன்', 'ஐ', என இரண்டு வேற்றுமை உருபுகள் அடுத்து அடுத்து வந்தாலும், பொருள் வரும் இடத்தில், 'புலியினை' என்ற சொற்றொடர் முழுவதுமே, ஒற்றை உருபுச் சொல்லின் இயல்புடன் நடக்கும்.

அல்லது

***2. பொருள்:*** பல வேற்றுமை உருபுகள் தொடர்ந்து வந்து

வேற்றுமைப்படுத்தப்பட்ட சொல், பொருள் வரும் இடத்தில், ஒரு உருபுச் சொல்லுடன் மட்டும் இணைந்து நடக்கும்.

***விளக்கம்:*** 'யானையது கோட்டை நுனியிற்கண் குறைத்தான்'.

இங்கு, 'அது, 'ஐ', 'இன்', 'கண்' என நான்கு வேற்றுமை உருபுச் சொற்கள் வந்த போதும், 'கண்' எனும் ஒரு உருபுடன் மட்டும், 'நுனி' எனும் சொல் இணையும். 'குறைத்தான்' என்ற

வினைச்சொல்லால் பொருள் வருகின்றது.

அதாவது, ‘நுனிக்கண் குறைத்தான்’ என்ற பிம்பம் மட்டுமே மிஞ்சி நிற்கும். ‘யானை’, ‘கோடு’ என்பன பின்புலத்தில் நிற்க, கோட்டின் ‘நுனி’ மட்டுமே, மனக்காட்சியில் முன்னதாக வரும்.

அல்லது

***3. பொருள்:*** வேற்றுமை உருபுகள் தொடர்ந்து வந்து

வேற்றுமைப்படுத்தப்பட்ட சொல், பொருள் வரும் இடத்தில், ஒரு சொல்லின் இயல்புடையது.

***விளக்கம்:*** ‘நுனியிற்கண்’ என்பதில், ‘இன்’ மற்றும் ‘கண்’ எனும் வேற்றுமை உருபுகள் தொடர்ந்து அடுக்கி வந்துள்ளன. ‘நுனியின்’, நுனிக்கண்’ என இரண்டு வெவ்வேறு வேற்றுமை உருபுகளின் பொருண்மையைக் கொள்ளாமல், ‘நுனியிற்கண்’ என ஒற்றைச் சொல்லின் இயல்பாக வரும்.

தொல்காப்பியம் ஒரு இலக்கண இலக்கியமாய் இருப்பதால், பன்மை வாசிப்புகளைத் தருவதும், பன்மைப் பொருண்மைகளைப் பெறுவதும், தவிர்க்க இயலாததாய் உள்ளது.

### உருபுகள் விரிந்து நிற்றல்

***99.*** **இறுதியும் இடையும் எல்லா உருபும்**
**நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார்.**

***பொருள்:*** எல்லா உருபுகளும், இறுதியிலும் இடையிலும் (தொடர்ந்து) ஒழுங்கு முறையில், பொருண்மை பெற, வருவதற்குத் தடைகள் விதிக்கமாட்டார்கள், அறிஞர்கள்.

***எடுத்துக்காட்டு:***
*கந்தன் + ஒடு + இன் = கந்தன் ஒடுவின்.*
*கந்தன் + ஒடு + அது = கந்தன் ஒடுவது.*
*புலி + இன் + ஐ = புலியினை.*
*கந்தன் + இன் + ஒடு = கந்தனினொடு.*
*கந்தன் + இன் + அது = கந்தனினது.*
*கந்தன் + இன் + கண் = கந்தனின்கண்.*
*கந்தன் + அது + ஐ = கந்தனதை.*
*கந்தன் + அது + கண் = கந்தனதுகண்.*
*கந்தன் + கண் + அது = கந்தங்கண்ணது.*

*கந்தன் + கண் + இன் = கந்தங்கண்ணின்.*
*கந்தன் + கண் + கு = கந்தங்கட்கு.*
*கந்தன் + கண் + ஒடு = கந்தங்கண்ணொடு.*
*கந்தன் + கண் + ஐ = கந்தங்கண்ணை.*

## ஆறாம் வேற்றுமை உருபிற்கும் மற்ற உருபிற்கும் இலக்கணம்

**100. பிறிதுபிறி தேற்றலும் உருபுதொக வருதலும்
நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப.**

*பிறிது = வேற்றுமை உருபு அற்ற சொல்.*

*பிறிது = வேறுவழியில்.*

*உருபுதொக = உருபுகள் சேர்ந்து.*

***1. பொருள்:*** *மற்ற, வேற்றுமை உருபு அல்லாத சொல்லை, வேறு வகையில் ஏற்பதும், உருபாக சேர்ந்து வருதலும், ஒழுங்கு முறையாகக் கூறிய விதிப்படி வரும் என்பர், அறிஞர்.*

***எடுத்துக்காட்டு:***

*கந்தன் + அது + கண் = கந்தனதுக் கண். இங்கு, 'கண்' என்பது வேற்றுமை உருபாக இல்லாமல், 'கந்தனுடைய புலனாகிய கண்' எனும் பொருளில் வந்தது. வல்லின ஒற்று கூடியதையும் கவனிக்க.*

*கந்தன் + அது + கண் = கந்தனதுகண். இங்கு, 'கண்' என்பது வேற்றுமை உருபாக, 'கந்தனது இடத்தில்' எனும் பொருளில் வந்தது.*

*அல்லது*

*பிறிது = வேற்றுமை உருபு*

***2. பொருள்:*** *ஒரு வேற்றுமை உருபுக்குப் பதில் மற்றோர் வேற்றுமை உருபு வருதலும், வேற்றுமை உருபு புலப்படாமல் நிற்பதும், இலக்கண விதிகளில் உள்ளன.*

***எடுத்துக்காட்டு:***

*ஒரு வேற்றுமை உருபுக்குப் பதில் மற்றோர் வேற்றுமை உருபு:*
*கந்தன் + அது + வேல் = கந்தனது வேல்.*
*கந்தன் + இன் + வேல் = கந்தனின் வேல்.*

*உருபு புலப்படாமை:*

*கந்தன் கண்டேன். (கந்தனைக் கண்டேன். 'ஐ' தொக்கி நிற்கிறது)*

*கந்தன் நந்தன் கண்டேன் (கந்தனொடு நந்தன் கண்டேன். 'ஒடு' தொக்கி நிற்கிறது)*

*கந்தன் காணிக்கை (கந்தற்குக் காணிக்கை. 'கு' தொக்கி நிற்கிறது)*

*கந்தன் வேல் (கந்தனின் வேல். 'இன்' தொக்கி நிற்கிறது)*

*கந்தன் மயில் (கந்தனது மயில். 'அது' தொக்கி நிற்கிறது)*

*குன்றத்துக் கந்தன் (குன்றத்துக்கண் கந்தன். 'கண்' தொக்கி நிற்கிறது)*

**எய்தியது விலக்கியது**

***101. ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின்***
***மெய்யுருபு தொகாஅ இறுதி யான.***

**பொருள்:** 'ஐ', 'கண்' ஆகிய வேற்றுமை உருபுகளின் பொருண்மை இல்லாமல், பிற வேற்றுமை உருபுகளின் பொருள், சொற்தொடரின் இறுதியில் தொக்கி வராது.

**எடுத்துக்காட்டு:**

*'கண்டேன் கந்தன்' என வரும். ('கந்தனைக் கண்டேன் ' எனப் பொருள் வந்து, 'ஐ' தொக்கும்)*

*'கந்தன் குன்றத்து' என வரும். ( 'குன்றத்துக்கண் கந்தன் ' எனப் பொருள் வந்து, 'கண்' தொக்கும்)*

*'கண்டேன் கந்தன் நந்தன்' என வராது. ( 'கந்தனொடு நந்தன் கண்டேன்' எனப் பொருள் வராது, 'ஒடு' தொக்கி நிற்காது)*

*'காணிக்கை கந்தன்' என வராது. ('கந்தற்கு காணிக்கை' எனப் பொருள் வராது, 'கு' தொக்கி நிற்காது)*

*'வேல் கந்தன்' என வராது. ('கந்தனின் வேல்' எனப் பொருள் வராது, 'இன்' தொக்கி நிற்காது)*

*'மயில் கந்தன்' என வராது. ('கந்தனது மயில்' எனப் பொருள் வராது, 'அது' தொக்கி நிற்காது)*

### உருபுகள் வேறுபொருளில் மயங்குதல்

*102. யாதன் உருபின் கூறிற் றாயினும்*
*பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்.*

*பொருள்:* எந்த வடிவத்தில் ஒரு சொல்லைக் கூறி இருந்தாலும், பொருள் வரும் இடத்தில், அச்சொல், ஒரு வேற்றுமை உருபின் பொருளைச் சார்ந்து நிற்கும்.

*எடுத்துக்காட்டு:*

'வானம் மழை பொழிந்தது', 'வானம் பொழிந்தது மழை', 'மழை பொழிந்தது வானம்'. இச்சொற்தொடர்களில், 'வானம் மழையைப் பொழிந்தது' என பொருள் கொள்கின்றோம். 'மழை' எனும் சொல், 'ஐ' எனும் வேற்றுமை உருபைச் சார்ந்துள்ளது.

'வானின் றுலகம் வழங்கி வருதலால்'. இச்சொற்தொடரில், 'வானின்கண் நின்று உலகத்திற்கு வழங்கி வருதலால்' எனப் பொருள் கொள்கின்றோம். 'வானம்', 'கண்' எனும் வேற்றுமை உருபையும், 'உலகம்', 'கு' எனும் வேற்றுமை உருபையும் சார்ந்துள்ளது.

### எதிர்மறையிலும் வேற்றுமைப் பொருள் திரியாமை

*103. எதிர்மறுத்து மொழியினும் தத்தம் மரபின்*
*பொருள்நிலை திரியா வேற்றுமைச் சொல்லே.*

*பொருள்:* எதிர்மறைக் கூற்றிலும், வேற்றுமைச் சொற்கள், தங்களின் வழிவழியாய் வந்த பொருளில் இருந்து, மாறுவதில்லை

*எடுத்துக்காட்டு:*
'அவன் மரத்தை அறுக்கவில்லை'. (ஐ)
'கந்தன் நந்தனொடு வரவில்லை'. (ஒடு)
'ஊர்க்கு மழையில்லை'. (கு)
'அவளின் புத்தகம் இல்லை'. (இன்)
'கந்தனது வேலைக் காணவில்லை'. (அது)
'நந்தன்கண் பணமில்லை'. (கண்)

*சில உருபுகள் செய்யுளில் திரிதல்*

***104.*** ***கு ஐ ஆன்என வரூஉம் இறுதி***
***அவ்வொடுஞ் சிவணுஞ் செய்யு ளுள்ளே.***

***பொருள்:*** *செய்யுளில், 'கு', 'ஐ', 'ஆன்' எனச் சொற்களின் இறுதியில் வரும் வேற்றுமை உருபுகள், 'அ' எனும் எழுத்துடனும் சேரும்.*

*எய்தியது விலக்கல்*

***105,*** ***அவற்றுள்***
***அஎனப் பிறத்தல் அஃறிணை மருங்கில்***
***குவ்வும் ஐயும் இல்லென மொழிப.***

***பொருள்:*** *மேற்கூறியவைகளுள், 'அ' எனச் சொல்லின் இறுதியில் ஒலிப்பது, அஃறிணை இடத்தில் உண்டு. ஆனால், 'கு' வும் 'ஐ' யும், அஃறிணை இடத்தில் வராது எனச் சொல்லுவர், அறிஞர்கள்.*

*எனவே, அஃறிணையின் இறுதியில் வரும் 'ஆன்' எனும் வேற்றுமை உருபே, 'அ' வுடன் சேர்ந்து 'ஆன' என ஒலிக்கும்.*

*மறுதலையாக, 'ஆன' எனச் சொல்லின் இறுதியில் ஒலிப்பது, உயர்திணையில் உண்டு. மேலும், வேற்றுமை உருபுகளான 'கு' வும் 'ஐ' யும், உயர்திணை இடத்தில் 'அ' என மாறி வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*அஃறிணை இறுதியில், 'ஆன்':*
*புள்ளினான் –> புள்ளினான.*

*உயர்திணை இறுதியில், 'ஆன்':*
*புலவரான் –> புலவரான.*

*உயர்திணை இறுதியில், 'கு', 'ஐ':*

*கடிநிலை யின்றே யாசிரியர்க்கு –> கடிநிலை யின்றே யாசிரியர்க்க.*
*காவலோனைக் களிறஞ் சும்மே –> காவலோனக் களிறஞ் சும்மே.*

*நான்காம் வேற்றுமை மற்ற வேற்றுமைகளுடன் மயங்கல்*

***106.*** ***இதன திதுவிற் றென்னுங் கிளவியும்***
***அதனைக் கொள்ளும் பொருள்வயி னானும்***

அதனாற் செயற்படற் கொத்த கிளவியும்
முறைக்கொண் டெழுந்த பெயர்ச்சொற் கிளவியும்
பால்வரை கிளவியும் பண்பின் ஆக்கமுங்
காலத்தி னறியும் வேற்றுமைக் கிளவியும்
பற்றுவிடு கிளவியும் தீர்ந்துமொழிக் கிளவியும்
அன்ன பிறவும் நான்க னுருபின்
தொன்னெறி மரபின் தோன்ற லாறே.

*பொருள்:* 'இதனது இத்தகையது' என்னும் சொல்லும், 'அதனைக் கொள்ளும் பொருள்' இடத்திலும், 'அதனால் செயல் படுவதற்கு ஒத்த' சொல்லும், 'முறையைக் கொண்டு எழுந்தப் பெயர்ச்' சொல்லும், 'பால்வரை'ச் சொல்லும், 'பண்பின் ஆக்கம்', 'காலத்தை அறியும் வேற்றுமைச் சொல்லும்', 'பற்றை விடுகின்ற'ச் சொல்லும், 'தீர்ந்து மொழிகின்ற' சொல்லும், இவை போன்ற பிறவும், பழங்கால மரபில், நான்காவது வேற்றுமை உருபு தோன்றுகின்ற வழிகளாகும்.

*எடுத்துக்காட்டு:*

*1. இதனது இத்தகையது:*
*யானையது தந்தம் கூர்மையானது –> யானைக்குத் தந்தம் கூர்மையானது.*

*2. அதனைக் கொள்ளும் பொருள்:*
*பாலைக் கொள்ளும் பானை –> பாலுக்குக் கொள்ளும் பானை.*

*3. அதனால் செயல்படுவதற்கு ஒத்தது:*
*எண்ணத்தால் அமைவது வாழ்க்கை –> எண்ணத்திற்கு அமைவது வாழ்க்கை.*

*4. முறையைக் கொண்டு எழுந்த பெயர்ச்சொல்:*
*கந்தனது மகன் –> கந்தனுக்கு மகன்.*

*5. பால்வரைச் சொல்:*
*வேலூரின் மேற்கில் பங்களூர் –> வேலூர்க்கு மேற்கில் பங்களூர்.*

*6. பண்பின் ஆக்கம்:*
*கந்தனின் ஓங்காரம் பெருமை –> கந்தனுக்கு ஓங்காரம் பெருமை.*

*7. காலத்தை அறியும் வேற்றுமைச் சொல்:*
*சுவாதியில் வந்தான் –> சுவாதிக்கு வந்தான்.*

*8. பற்றை விடுகின்ற சொல்:*
*மண்ணின் பற்றை விட்டான் –> மண்ணுக்குப் பற்றை விட்டான்.*

9. தீர்ந்து மொழிகின்ற சொல்:
மருந்தால் நோய் தீர்ந்தது –> மருந்துக்கு நோய் தீர்ந்தது.

### மற்ற வேற்றுமை உருபுகளும் மயங்குதல்

107. ஏனை யுருபும் அன்ன மரபின
மானம் இலவே சொல்முறை யான.

பொருள்: மற்றைய வேற்றுமை உருபுகளும், மேற்கூறிய மயங்கும் மரபை உடையன. சொல்லுகின்ற முறையால், அவை குற்றமில்லை.

### வினைச்சொல் இலக்கணம் இன்னதெனல்

108. வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி என்றா
இன்னதற் கிதுபய னாக என்னும்
அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழில்முத னிலையே.

பொருள்: ஒரு வினைச்சொல் குறிப்பது, வினை, செய்தல், செயப்படுபொருள், நிலம், காலம், கருவி, என்றும், அத்தகைய மரபில், இன்னதற்கு, இதுபயன் என்னும் இரண்டுடன் சேர்ந்து, மொத்தம் எட்டானது என்பர், அறிஞர்.

எடுத்துக்காட்டு:

வனைந்தான் எனும் வினைச்சொல் குறிப்பது:
1. வனைவு – வினை.
2. வனைதல் – செய்தல்.
3. பானை – செயப்படுபொருள்.
4. வினசெய் இடம் – நிலம்.
5. காலை, மாலை, இரவு – காலம்.
6. சக்கரம், கோல் – கருவி.
7. குடியானவர்க்கு – இன்னதற்கு.
8. பொங்கல் வைக்க – இதுபயன்.

*புறனடை*

*109.* *அவைதாம்,*
**வழக்கியல் மருங்கின் குன்றுவ குன்றும்.**

*பொருள்:* *வினைச்சொல்லின் குறிப்புகளில் சில, வழக்கியலில், தோன்றாமல் போகும்.*

**எடுத்துக்காட்டு:**

*'கொடி ஆடிற்று' என்பதில் உள்ள 'ஆடிற்று' எனும் வினைச்சொல், 'செயப்படுபொருள் எது' எனும் குறிப்பைத் தரவில்லை.*

## ஆகுபெயர் இன்னதெனல்

*110.* **முதலிற் கூறுஞ் சினையறி கிளவியும்**
**சினையிற் கூறு முதலறி கிளவியும்**
**பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்**
**இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்**
**வினைமுதல் உரைக்குங் கிளவியொடு தொகைஇ**
**அனைமர பினவே ஆகுபெயர்க் கிளவி.**

*பொருள்:* *முதலைக் கூறி உறுப்பை அறியும் சொல்லும், உறுப்பைக் கூறி முதலை அறியும் சொல்லும், ஒரு பொருளை அது உருவான இடத்தைக் கொண்டு அறியும் சொல்லும், ஒரு பொருளை அதன் குணத்தைக் கொண்டு அறியும் சொல்லும், செய்த வினையைக் கொண்டு ஒரு பொருளை அறியும் சொல்லும், இரண்டு பெயர்கள் சேர்ந்து வந்து வேறொரு பொருளை குறிக்கும் சொல்லும், விளைவைக் கொண்டு முதலை அறியும் சொல்லொடு சேர்ந்த எல்லா மரபினையும் உடையது ஆகுபெயர்ச்சொல்.*

**எடுத்துக்காட்டு:**

*1. முதலைக் கூறி உறுப்பை அறியும் சொல்:*
*தென்னை குடித்தான் –> தென்னையின் உறுப்பான இளநீர் அல்லது கள் குடித்தான்.*

*2. உறுப்பைக் கூறி முதலை அறியும் சொல்:*
*காய் நட்டான் – காய் எனும் உறுப்பின் முதலான செடியை நட்டான்.*

*3. ஒரு பொருளை அது உருவான இடத்தைக் கொண்டு அறியும்*

*சொல்:*

*ஆரணி போதும் –> ஆரணியில் நெய்த பட்டுச் சேலை போதும்.*

*4. ஒரு பொருளை அதன் குணத்தைக் கொண்டு அறியும் சொல்:*

*பச்சை இருக்கா? –> பச்சை நிறத்தை குணமாகக் கொண்ட மரகதக்கல் இருக்கா?*

*5. செய்த வினையைக் கொண்டு ஒரு பொருளை அறியும் சொல்:*

*வனைந்ததைக் கொடு –> வனைந்தப் பானையைக் கொடு.*

*6. இரண்டு பெயர்கள் சேர்ந்து வந்து வேறொரு பொருளை குறிக்கும் சொல்:*

*பொற்கொடி வந்தாள் –> பொன்னைப் போன்ற நிறத்துடைய, கொடியைப் போன்ற வடிவுடைய பெண் வந்தாள்.*

*7. விளைவைக் கொண்டு முதலை அறியும் சொல்:*

*குயில்பாட்டு வருது, அழகின்சிரிப்பு வருது –> 'குயில்பாட்டு' எழுதிய பாரதியார் வருகிறார், 'அழகின்சிரிப்பு' எழுதிய பாரதிதாசன் வருகிறார்.*

### ஆகுபெயரின் இலக்கணம் இருவகையாதல்

***111.*** ***அவைதாம்,***
***தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்***
***ஒப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலும்***
***அப்பண் பினவே நுவலுங் காலை.***

***பொருள்:*** *ஆகுபெயர்களைப் பற்றிச் சொல்லும்போது, தமது பொருள் வரும் இடத்தில், அதாவது முதல், சினை, இடம், பண்பு, வினைநிகழ்வு, விளைவு ஆகிய இடங்களில் தம்முடன் சேர்வதும், தமக்குப் பொருத்தமில்லாத இடத்தில், வேறு ஒரு பொருளைக் குறிப்பதும், ஆகிய இரண்டு பண்புகளைக் கொண்டுள்ளன.*

***எடுத்துக்காட்டு:***

*தத்தம் பொருள்:*

*1. தென்னை குடித்தான். (முதல்)*
*2. தேங்காய் நட்டான். (சினை)*
*3. தோப்பில் இருந்து வந்தது. (இடம்)*
*4. பச்சைதான் இருக்கு. (பண்பு – இளநீர்)*
*5. இறக்கியது கொடு. (வினைநிகழ்வு – கள்)*

*6. நெய் ஆகுமா? (விளைவு– கொப்பரை)*

*வேற்றுமைப் பொருள்:*

*தென்னம் வீடு –> தென்னை ஓலைகளால் நெய்த கூரையுடைய வீடு. அல்லது தென்னங்கழிகளைக் கொண்டு தாங்கும் வீடு.*

*தென்னம் பச்சையை எடு –> தென்னம் ஓலைப் பச்சை நிறமுடைய ஆடையை எடு.*

## ஆகுபெயரும் வேற்றுமை ஏற்கும் எனல்

***112. வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்.***

***பொருள்:*** *ஆகுபெயர்களும், வேற்றுமை உருபுகளைப்போல் வேற்றுமைப்படுத்தும் என்பதை அறிதல் வேண்டும்.*

***எடுத்துக்காட்டு:***
*தென்னை குடித்தான் –> பனையை (நுங்கை) அல்ல.*
*தேங்காய் நட்டான் –> வெண்டை அல்ல.*
*ஆரணி போதும் –> காசி (பட்டு) அல்ல.*
*பச்சை இருக்கா? –> சிவப்பு அல்ல.*

## அளவுப் பெயரும் நிறைப் பெயரும் ஆகுபெயர்

***113. அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி***
***உளவென மொழிப உணர்ந்திசி னோரே.***

***பொருள்:*** *அளவுப்பெயர்களும் நிறைப்பெயர்களும், பொருள் கொள்கின்ற விதத்தில், வேற்றுமை உருபுகள் மறைந்து வரும் ஆகுபெயர்களாய் வருகின்றன, எனச் சொல்லுவர், உணர்ந்து கூறிய அறிஞர்கள்.*

***எடுத்துக்காட்டு:***

*ஆழாக்கு வாடா. ( ஆழாக்கைப் போன்ற சிறிய உருவினன்)*
*மரக்கால் வருதுபார். (மரக்காலைப் போன்ற பெரிய உருவினன்)*
*மணங்கு வருகிறாள் (மணங்கைப் போன்ற அதிக நிறையுடையவள்)*

*எண்ணிலும் ஆகுபெயர்:*
*ஒன்பது வரான். (அலி)*

*ஏழரை வந்தாள். (சனியன்)*

*புறனடை*

***114. கிளந்த அல்ல வேறுபிற தோன்றினுங்***
***கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே.***

***பொருள்:*** *மேற்கூறியன அன்றி, வேறுபிற புதியதாகத் தோன்றி னாலும், கூறியவற்றின் இயல்பைக் கணக்கில் கொண்டு, நெறிப் படுத்தி, அவற்றை அறிஞர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்.*

***எடுத்துக்காட்டு:***
*அணுகுண்டு வரான் பார்.*
*வெற்றுவேட்டு போறான்.*
*விரைவுவண்டி வருகிறாள்.*

# 4. விளி மரபு

விளி மரபு = அழைக்கும் வழக்கம். பெயர் சொல்லி அழைக்கும் முறையால் வேற்றுமைப்படுத்துவது.

**விளி வேற்றுமையின் பொது இலக்கணம்**

***115.* விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு**
**தெளியத் தோன்றும் இயற்கைய என்ப.**

*பொருள்:* விளி வேற்றுமை எனப்படுவன, தாம் இணைகின்ற பெயருடன், தெளிவாக வெளிப்படும் இயல்புடையன என்பர், அறிஞர்.

**விளிப்பெயர்கள் இவை எனல்**

***116.* அவ்வே**
**இவ்வென அறிதற்கு மெய்பெறக் கிளப்ப.**

*பொருள்:* அவை இவையென அறிவதற்கு, அவைதம் உருவத்தைக் காணும் வகையில், உரைப்பேன்.

**விளியேற்கும் உயிரீற்று உயர்திணைப் பெயர்கள்**

***117.* அவைதாம்,**
**இ உ ஐ ஓ என்னு மிறுதி**
**அப்பால் நான்கே உயர்திணை மருங்கின்**

*மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே.*

***பொருள்:*** *அவை யாவை என்றால், உயர்திணை இடத்தில், வேற்றுமைப்படுத்தும் விளி வடிவங்களை ஏற்கும், 'இ', 'உ', 'ஐ', 'ஓ' ஆகிய நான்கு வகை எழுத்துகளை, இறுதியில் கொண்டப் பெயர்கள்.*

### விளியேற்கும் இகர, ஐகார ஈற்றுப் பெயர்கள்

***118.*** ***அவற்றுள்,***
***இ ஈ யாகும் ஐ ஆய் ஆகும்.***

***பொருள்:*** *மேற்கூறியவற்றுள், உயர்திணைப் பெயரின் 'இ' எனும் இறுதி, விளியில் அல்லது கூவி அழைக்கையில், 'ஈ' யாக மாறும்; 'ஐ' எனும் இறுதி, 'ஆய்' என மாறும்.*

***எடுத்துக்காட்டு:***
*நம்பி –> நம்பீ.*
*நங்கை –> நங்காய்.*
*அம்பி –> அம்பீ.*
*அம்பை –> அம்பாய்.*

### விளியேற்கும் ஓகர, உகர ஈற்றுப் பெயர்கள்

***119.*** ***ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும்.***

***பொருள்:*** *உயர்திணைப் பெயரின் 'ஓ' எனும் இறுதியும், 'உ' எனும் இறுதியும், விளியில் அல்லது கூவி அழைக்கையில், 'ஏ' வுடன் சேரும்.*

***எடுத்துக்காட்டு:***
*பொற்கோ –> பொற்கோவே.*
*வேந்து –> வேந்தே.*

### உகரம் என்றது குற்றியலுகரம்

***120.*** ***உகரந் தானே குற்றிய லுகரம்.***

***பொருள்:*** *மேலே கூறிய உகர இறுதி, குற்றியலுகரம். முற்றிய லுகரம் அல்ல.*

**விளக்கம்:** முற்றியலுகர இறுதி, விளியில் அல்லது கூவி அழைக்கையில், 'ஊ' என நெடிலாகலாம்.

**எடுத்துக்காட்டு:**
அம்மு -> அம்மூ.
மஞ்சு -> மஞ்சூ.

**உயர்திணையில் விளியை ஏற்கா மற்ற உயிரீற்றுப் பெயர்கள்**

***121. ஏனை உயிரே உயர்திணை மருங்கின்***
***தாம்விளி கொள்ளா என்மனார் புலவர்.***

**பொருள்:** மேற்கூறிய, 'இ', 'உ', 'ஐ', 'ஓ' வைத் தவிர, மற்ற உயிர் எழுத்துகளான, 'அ', 'ஆ', 'ஈ', 'ஊ', 'எ', 'ஏ', 'ஒ', 'ஔ' ஆகியவற்றை இறுதியில் கொண்ட உயர்திணைப் பெயர்கள், விளி வேற்றுமை உருபை ஏற்காது என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.

**விளக்கம்:** உயர்திணைப் பெயர்ச் சொற்கள், 'அ', 'எ', 'ஒ' ஆகியவற்றை இறுதியில் கொண்டு வருவதில்லை.

பொதுவாக, உயிரீற்றுப் பெயர்களில், விளி உருபுகள் நெடிலாகின்றன அல்லது நெடில் உருபுடன் சேர்கின்றன. எனவே, உயர் திணைப் பெயர்ச் சொற்கள்களின் இறுதியில் 'ஆ', 'ஈ', 'ஊ', ஏ, 'ஔ' எனும் நெடில்களே வந்தால், அவை மேலும் நீள முடியாது. அவை இயல்பாக விளியாகும்.

**எடுத்துக்காட்டு:**
கங்கா

**விளியேற்கும் இகர ஈற்று அளபெடைப் பெயர்**

***122. அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்***
***இயற்கைய ஆகுஞ் செயற்கைய என்ப.***

**பொருள்:** அளவும் எடையும் மிகுந்த இகரத்தை இறுதியாகக் கொண்டப் பெயர்ச்சொல், விளியில் அல்லது கூவி அழைக்கையில், இயல்பாக அதாவது மாற்றம் எதுவுமின்றி ஒலிக்கும். அளவு எடை மிகுதல் என்பதே செயற்கையான ஒரு ஏற்பாடாகும். அந்த செயற்கையே, விளியில் இயற்கையாக ஒலிப்பதால்,

*இயற்கையானதே செயற்கையாகும் என்பர், அறிஞர்.*

*எடுத்துக்காட்டு:*

*தோழீஇ -> தோழீஇ. (மாற்றமில்லை)*

### *முறைப்பெயரில் ஐஈறு ஆவீறாக மாறும்*

**123.** **முறைப்பெயர் மருங்கின் ஐயென் இறுதி**
**ஆவொடு வருதற் குரியவும் உளவே.**

**பொருள்:** *உறவு முறைப் பெயர்களில், 'ஐ' எனும் இறுதி, ('ஆய்' ஆவது தவிர) 'ஆ'வாக வருவதற்கும், உரியவை உள்ளன.*

*எடுத்துக்காட்டு:*
*அன்னை -> அன்னா.*
*அத்தை -> அத்தா.*
*அம்மை -> அம்மா.*

### *இயல்பாய் நிற்கும் அண்மை விளி*

**124.** **அண்மைச் சொல்லே இயற்கை ஆகும்.**

**பொருள்:** *அருகில் இருப்பவரை விளிக்கும் அல்லது அழைக்கும் பெயர்ச்சொல், இயல்பாக அதாவது மாற்றம் எதுவுமின்றி ஒலிக்கும்.*

*எடுத்துக்காட்டு:*
*நம்பி -> நம்பி.*
*நங்கை -> நங்கை.*
*பொற்கோ -> பொற்கோ.*
*வேந்து -> வேந்து.*
*அம்மு -> அம்மு.*
*மஞ்சு -> மஞ்சு.*
*அன்னை -> அன்னை.*
*அத்தை -> அத்தை.*
*அம்மை -> அம்மை.*

### *விளியேற்கும் புள்ளியீற்று உயர்திணைப் பெயர்கள்*

**125.** **னரலள என்னும் அந்நான் கென்ப**

*புள்ளி இறுதி விளிகொள் பெயரே.*

*பொருள்:* 'ன', 'ர', 'ல', 'ள' எனும் நான்கு மெய் எழுத்துகளை, இறுதியில் கொண்டு இருக்கும் உயர்திணைப் பெயர்ச்சொற்கள், விளிவேற்றுமை உருபை ஏற்கும்.

### விளியை ஏற்காத புள்ளியீற்று உயர்திணைப் பெயர்கள்

*126. ஏனைப் புள்ளி ஈறுவிளி கொள்ளா.*

*பொருள்:* மற்ற மெய்யெழுத்துகளை இறுதியாய்க் கொண்ட உயர்திணைப் பெயர்ச்சொற்கள், விளிவேற்றுமை உருபை ஏற்காது.

*எடுத்துக்காட்டு:*
அருண்
சிவானந்தம்

ஆனால், 'பெண்ணே', 'ஆயே' என வருவதால், 'ண்' மற்றும் 'ய்' எனும் மெய்யெழுத்துகள், விளிவேற்றுமை உருபை ஏற்கும் என்றே தோன்றுகின்றது. (நன்றி: ஆதித்தர்)

### விளியை ஏற்கும் அன் ஈற்றுப் பெயர்

*127. அவற்றுள்,*
*அன்னென் இறுதி ஆவா கும்மே.*

*பொருள்:* விளிவேற்றுமை உருபை ஏற்கும் 'ன', 'ர', 'ல', 'ள' எனும் நான்கு மெய் எழுத்துகளுள், னகரத்தை இறுதியாய்க் கொண்ட 'அன்' எனும் அசை, உயர்திணைப் பெயர்ச்சொல்லின் இறுதியில் வந்தால், அது 'ஆ' வாக மாறும்.

*எடுத்துக்காட்டு:*
தோழன் –> தோழா
சோழன் –> சோழா

### அண்மை விளியில் அன் அகரமாதல்

*128. அண்மைச் சொல்லில் அகரமும் ஆகும்.*

*பொருள்:* அருகில் இருப்பவரை விளிக்கும் அல்லது அழைக்கும்

பெயர்ச்சொல்லின் இறுதியில், ‘அன்’ இருந்தால், அது ‘அ’ வும் ஆகும். ‘ஆ’ வும் ஆகும்.

*எடுத்துக்காட்டு:*

*‘அ’ ஆதல்:*
*கண்ணன் –> கண்ண.*
*சோழன் –> சோழ.*
*சேரன் –> சேர.*
*பாண்டியன் –> பாண்டிய.*
*தோழன் –> தோழ.*
*மன்னன் –> மன்ன.*

*‘ஆ’ ஆதல்:*
*கண்ணன் –> கண்ணா.*
*சோழன் –> சோழா.*
*சேரன் –> சேரா.*
*பாண்டியன் –> பாண்டியா.*
*தோழன் –> தோழா.*
*மன்னன் –> மன்னா.*

## இயல்பாகும் ஆன் இறுதிப் பெயர்

**129. ஆனென் இறுதி இயற்கை ஆகும்.**

***பொருள்:*** விளியில் அல்லது கூவி அழைக்கையில், ‘ஆன்’ என்பதை இறுதியாகக் கொண்டப் பெயர்ச்சொல், இயல்பாக அதாவது மாற்றம் எதுவுமின்றி ஒலிக்கும்.

*எடுத்துக்காட்டு:*
*அதியமான் –> அதியமான்.*
*செங்கணான் –> செங்கணான்.*

## விளியை ஏற்கும் ஆன் ஈற்று வினையாலணையும் பெயர்

**130. தொழிலிற் கூறும் ஆனென் இறுதி**
**ஆயா கும்மே விளிவயி னான.**

***பொருள்:*** விளியில் அல்லது கூவி அழைக்கையில், வினைச் சொல்லின் ‘ஆன்’ எனும் இறுதி, ‘ஆய்’ என மாறும்.

*எடுத்துக்காட்டு:*
*நடந்தான் -> நடந்தாய்.*
*நடக்கின்றான் -> நடக்கின்றாய்.*
*நடப்பான் -> நடப்பாய்.*

### விளியை ஏற்கும் ஆன் ஈற்றுப் பண்புப் பெயர்

**131. பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே.**

**பொருள்:** *விளியில் அல்லது கூவி அழைக்கையில், பண்புப் பெயரும், அதைப் (வினைச்சொல்லைப்) போன்றதே. அதாவது, 'ஆன்' எனும் பண்புப்பெயரின் இறுதி, 'ஆய்' என மாறும்.*

*எடுத்துக்காட்டு:*
*கரியான் -> கரியாய்.*
*வெள்ளையான் -> வெள்ளையாய்.*
*சிவத்தான் -> சிவத்தாய்.*
*பச்சையான் -> பச்சையாய்.*
*மஞ்சளான் -> மஞ்சளாய்.*
*குணத்தான் -> குணத்தாய்.*
*சிறியான் -> சிறியாய்.*

### விளியை ஏற்கும் ஆன் ஈற்று அளபெடைப் பெயர்

**132. அளபெடைப் பெயரே அளபெடை இயல.**

**பொருள்:** *'ஆன்' ஐ இறுதியாகக் கொண்ட அளபெடைப் பெயர், இகரத்தை இறுதியாகக் கொண்ட அளபெடைப் பெயரைப் போன்றதே. அதாவது, விளியில் அல்லது கூவி அழைக்கையில், அளபெடைப் பெயர் இயல்பாக, மாற்றம் எதுவுமின்றி ஒலிக்கும்.*

*எடுத்துக்காட்டு:*

*அழாஅன் -> அழாஅன்.*

### னகார வீற்று முறைப்பெயர் விளியேற்குமாறு

**133. முறைப் பெயர்க் கிளவி ஏயொடு வருமே.**

**பொருள்:** *உறவுமுறைப் பெயர்ச்சொல்லின் னகர இறுதி, 'ஏ'*

வாக மாறும்.

**எடுத்துக்காட்டு:**
மகன் –> மகனே.
தகப்பன் –> தகப்பனே.

### விளியை ஏற்கா னகார வீற்றுப்பெயர்

**134. தானென் பெயருஞ் சுட்டுமுதற் பெயரும்
யானென் பெயரும் வினாவின் பெயரும்
அன்றி அனைத்தும் விளிகோள் இலவே.**

**பொருள்:** 'தான்' எனும் பெயர்ச்சொல்லும், 'அவன்', 'இவன்', 'உவன்' எனும் சுட்டுப் பெயர்சொல்லும், 'யான்' எனும் பெயர்ச் சொல்லும், 'யாவன்' எனும் வினாப் பெயர்ச்சொல்லும் மட்டும் அல்லாமல், இவைப் போன்ற பிறவும், விளிவேற்றுமை உருபை ஏற்றது இல்லை.

**விளக்கம்:**

மேற்கூறியவற்றைப் போன்று, விளிவேற்றுமை உருபை ஏற்காத பிற சொற்கள், தாம், தாங்கள், அவர்கள், நாங்கள், யாவர்.

பெயர் தெரியாதபோது அல்லது மறந்தபோது, 'அவனே', 'இவனே' என்று அழைக்கும் வழக்கம், இன்று உள்ளது.

### விளியை ஏற்கும் ரகார வீற்றுப் பெயர்

**135. ஆரும் அருவும் ஈரொடு சிவணும்.**

**பொருள்:** உயர்திணைப் பெயர்ச்சொல்லின் இறுதியில் வரும் 'ஆர்' என்பதும், 'அர்' என்பதும், 'ஈர்' உடன் ஒன்றும், அதாவது, 'ஈர்' ஆக மாறும்.

**எடுத்துக்காட்டு:**
பார்ப்பார் –> பார்ப்பீர்.
பறையர் –> பறையீர்.
கூத்தர் –> கூத்தீர்.

**விளியை ஏற்கும் ரகார வீற்று வினையாலணையும் பெயர்**

***136.*** **தொழிற்பெயர் ஆயின் ஏகாரம் வருதலும்**
**வழுக்கின் றென்மனார் வயங்கி யோரே.**

*வயங்கியோர் = வயம் + க் + இயம் + ஓர். உள்ளும் புறமும், (முழுதும்) பொருண்மையின் இயல்பை உணர்ந்தோர்.*

**பொருள்:** *'ஆர்' என்பதும், 'அர்' என்பதும், வினைப்பெயர்ச் சொல்லின் இறுதியானால், அவை, 'ஈர்' என மாறுவதன்றி, 'ஏ' என மாறுவதிலும் குற்றமில்லை என்னும் கருத்துடையவர்கள், மொழி ஞானியர்.*

*'ஓர்' எனவும், 'ஓர்' உடன் 'ஏ' வுமாயும் மாறும் எனலாம்.*

**எடுத்துக்காட்டு:**
*'ஈர்' என மாறுதல்:*
*உண்டார் –> உண்டீர்.*
*வந்தவர் –> வந்தீர்.*

*'ஏ' என மாறுதல்:*
*உண்டார் –> உண்டாரே.*
*வந்தவர் –> வந்தவரே.*

*'ஈர்' உம் 'ஏ' வுமாய் மாறுதல்:*
*உண்டார் –> உண்டீரே.*
*வந்தவர் –> வந்தீரே.*

*'ஓர்' என மாறுதல்:*
*உண்டார் –> உண்டோர்.*
*வந்தவர் –> வந்தோர்.*

*'ஓர்' உம் 'ஏ' வுமாய் மாறுதல்:*
*உண்டார் –> உண்டோரே.*
*வந்தவர் –> வந்தோரே.*

**விளியை ஏற்கும் ரகார வீற்றுப் பண்புகொள் பெயர்**

***137.*** **பண்புகொள் பெயரும் அதனோர் அற்றே.**

**பொருள்:** *பண்புப்பெயர்ச் சொல்லும் மேற்கூறியதைப் போன்*

றதே. அதாவது, 'ஆர்' என்பதும், 'அர்' என்பதும், பண்புப் பெயர்ச் சொல்லின் இறுதியானால், அவை, 'ஈர்' என மாறுவதன்றி, 'ஏ' என மாறுவதிலும் குற்றமில்லை.

**விளக்கம்:** 'ஓர்' எனவும், 'ஓர்' உடன் 'ஏ' வுமாயும் மாறும் எனலாம்.

**எடுத்துக்காட்டு:**

'ஈர்' என மாறுதல்:
கரியார் –> கரியீர்.
வெள்ளையர் –> வெள்ளையீர்.

'ஏ' என மாறுதல்:
கரியார் –> கரியாரே.
வெள்ளையர் –> வெள்ளையரே.

'ஈர்' உம் 'ஏ' வுமாய் மாறுதல்:
கரியார் –> கரியீரே.
வெள்ளையர் –> வெள்ளையீரே.

'ஓர்' என மாறுதல்:
கரியார் –> கரியோர்.
வெள்ளையர் –> வெள்ளையோர்.

'ஓர்' உம் 'ஏ' வுமாய் மாறுதல்:
கரியார் –> கரியோரே.
வெள்ளையர் –> வெள்ளையோரே.

## விளியை ஏற்கும் ரகார வீற்று அளபெடைப் பெயர்

**138. அளபெடைப் பெயரே அளபெடை இயல.**

**பொருள்:** 'அர்' ஐ இறுதியாகக் கொண்ட அளபெடைப் பெயர், இகரத்தை இறுதியாகக் கொண்ட அளபெடைப் பெயரைப் போன்றதே. அதாவது, விளியில் அல்லது கூவி அழைக்கையில், அளபெடைப் பெயர் இயல்பாக, மாற்றம் எதுவுமின்றி ஒலிக்கும்.

**எடுத்துக்காட்டு:**
மகாஅர் –> மகாஅர்.
சிறாஅர் –> சிறாஅர்.

**விளியை ஏலா ரகார வீற்றுப் பெயர்கள்**

***139. சுட்டுமுதற் பெயரே முற்கிளந் தன்ன.***

***பொருள்:*** *சுட்டெழுத்தை முதலாக கொண்டப் பெயர்ச்சொற்கள், முன்பு கூறியதைப் போன்றன. அதாவது, 'அவன்', 'இவன்', 'உவன்' எனும் சுட்டுப் பெயர்ச்சொற்களைப் போல், 'அவர்', 'இவர்', 'உவர்' போன்ற ரகர மெய்யெழுத்தை இறுதியாய்க் கொண்டப் பெயர்ச்சொற்களும், விளிவேற்றுமை உருபை ஏற்பது இல்லை.*

***விளக்கம்:*** *பெயர் தெரியாதபோது அல்லது மறந்தபோது, 'அவரே', 'இவரே' என்று அழைக்கும் வழக்கம், இன்று உள்ளது.*

**இதுவுமது**

***140. நும்மின் திரிபெயர் வினாவின் பெயரென்று***
***அம்முறை இரண்டும் அவற்றியல் பியலும்.***

***பொருள்:*** *'நும்'மின் திரிந்த பெயரான, 'நீயிர்', வினாவின் திரிந்த பெயரான, 'யாவர்' ஆகிய இரண்டும், மேற்கூறியவற்றின் இயல்பாகும். அதாவது, 'நீயிர்' மற்றும் 'யாவர்', விளிவேற்றுமை உருபை ஏற்பது இல்லை.*

**விளியை ஏற்கும் லகார, ளகார ஈற்றுப் பெயர்கள்**

***141. எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே***
***நின்ற ஈற்றயல் நீட்டம் வேண்டும்.***

***பொருள்:*** *'ல்', 'ள்' எனும் மீதமுள்ள இரண்டு மெய் எழுத்துகளை, இறுதியில் கொண்டப் பெயர்ச்சொற்களின், கடைசி எழுத்துக்கு முன்பு உள்ள எழுத்து, நீண்டு ஒலிக்க வேண்டும்.*

***விளக்கம்:*** *'வள்ளலே' என்றும், 'மக்களே' என்றும், இன்று வழக்கில் உள்ளது. எனவே, பெயர்ச்சொற்களின் இறுதியில் வரும், 'ல்' மற்றும் 'ள்', விளி வேற்றுமையில் ஏகாரமாகும்.*

***எடுத்துக்காட்டு:***
*வள்ளல் –> வள்ளால்.*
*மக்கள் –> மக்காள்.*

இதுவுமது

*142. அயல்நெடி தாயின் இயற்கை யாகும்.*

***பொருள்:*** 'ல்', 'ள்' எனும் இரண்டு மெய் எழுத்துகளை, இறுதியில் கொண்டப் பெயர்ச்சொற்களின், கடைசி எழுத்துக்கு முன்பு உள்ள எழுத்து நெடிலாயின், அப்பெயர்ச்சொல் இயல்பாக, மாற்றம் எதுவுமின்றி விளியாகும்.

***விளக்கம்:*** 'திருமாலே', 'பெருமாளே' என ஏகாரமாவதும் உண்டு. *(நன்றி: ஆதித்தர்)*

***எடுத்துக்காட்டு:***
திருமால் –> திருமால்
பெருமாள் –> பெருமாள்

*ளகார ஈற்று வினைப்பெயரும் பண்புகொள் பெயரும் ஆய் ஆதல்*

*143. வினையினும் பண்பினும்*
*நினையத் தோன்றும் ஆளென் இறுதி*
*ஆயா கும்மே விளிவயி னான.*

***பொருள்:*** வினைப்பெயர்ச் சொல்லிலும், பண்புப்பெயர்ச் சொல்லிலும், நின்று வெளிப்படும் 'ஆள்' எனும் இறுதி, விளியின் இடத்தில், 'ஆய்' என மாறும்.

***எடுத்துக்காட்டு:***
நடந்தாள் –> நடந்தாய்
கரியாள் –> கரியாய்.
வெள்ளாள் –> வெள்ளாய்.

*விளியை ஏற்கும் ளகார ஈற்று முறைப்பெயர்*

*144. முறைப்பெயர்க் கிளவி முறைப்பெயர் இயல.*

***பொருள்:*** ளகர மெய்யை இறுதியாய்க் கொண்ட உறவுமுறைப் பெயர், னகர மெய்யை இறுதியாய்க் கொண்ட உறவுமுறைப் பெயரைப் போன்றதே. அதாவது, ளகர மெய் ஏகாரமாய் மாறும்.

*எடுத்துக்காட்டு:*

*மகள் –> மகளே.*

### *விளியை ஏற்கா ளகார வீற்றுப் பெயர்*

***145.*** ***சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரும்***
***முற்கிளந் தன்ன என்மனார் புலவர்.***

***பொருள்:*** *சுட்டெழுத்தை முதலாக கொண்டப் பெயர்ச்சொல்லும், வினாப் பெயர்ச்சொல்லும், முன்பு கூறியதைப் போன்றதே என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.*

*அதாவது, 'அவன்', 'இவன்', 'உவன்' எனும் சுட்டுப் பெயர்ச் சொற்களைப் போல், 'யாவன்' எனும் வினாப்பெயர்ச் சொல்லைப் போல் 'அவள்', 'இவள்', 'உவள்' போன்ற, ளகர மெய்யெழுத்தை இறுதியாய்க் கொண்டப் பெயர்ச்சொற்களும், 'யாவள்' எனும் வினாப்பெயர்ச் சொல்லும், விளிவேற்றுமை உருபை ஏற்பது இல்லை.*

***விளக்கம்:*** *பெயர் தெரியாதபோது அல்லது மறந்தபோது, 'அவளே', 'இவளே' என்று அழைக்கும் வழக்கம், இன்று உள்ளது.*

### *விளியை ஏற்கும் லகர, ளகர வீற்று அளபெடைப் பெயர்*

***146.*** ***அளபெடைப் பெயரே அளபெடை இயல.***

***பொருள்:*** *'அல்' மற்றும் 'அள்' ளை இறுதியாகக் கொண்ட அளபெடைப் பெயர், இகரத்தை இறுதியாகக் கொண்ட அளபெடைப் பெயரைப் போன்றதே. அதாவது, விளியில் அல்லது கூவி அழைக்கையில், அளபெடைப் பெயர் இயல்பாக, மாற்றம் எதுவுமின்றி ஒலிக்கும்.*

*எடுத்துக்காட்டு:*
*"மாஅனின் னிறம்போன் மழையிருளிற் பட்டதே*
*கோஒள் குளக்கோடு கொண்டு".*

*'மாஅல்', 'கோஒள்' எனும் லகர, ளகர வீற்று அளபெடைப் பெயர்ச் சொற்கள், இயல்பாக மாற்றம் எதுவுமின்றி விளியாகும்.*

## *விளியை ஏற்கும் அஃறிணை விரவுப் பெயர்*

***147. கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்***
***விளம்பிய நெறிய விளிக்குங் காலை.***

***பொருள்:*** *மேலே வந்த இறுதிகளை உடைய, அஃறிணை விரவுப்பெயர்கள், விளிக்கும்போது, மேற்கூறிய விதிகளைக் கொள்ளும்.*

***எடுத்துக்காட்டு:***
*சாத்தி –> சாத்தீ.*
*பூண்டு –> பூண்டே.*
*தந்தை –> தந்தாய்.*
*சாத்தன் –> சாத்தா.*
*கூந்தல் –> கூந்தால்.*
*மகள் –> மகளே.*

## *விளியை ஏற்கும் அஃறிணைப் பெயர்*

***148. புள்ளியும் உயிரும் இறுதி யாகிய***
***அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்***
***விளிநிலை பெறூஉங் காலந் தோன்றின்***
***தெளிநிலை யுடைய ஏகாரம் வரலே.***

***பொருள்:*** *மெய் எழுத்தையும் உயிர் எழுத்தையும் இறுதியாகக் கொண்ட எல்லா அஃறிணைப் பெயரும், விளிக்கின்ற அல்லது அழைக்கின்ற நிலைமையைப் பெறுகின்ற காலம் வந்தால், தெளிவான நிலையில் ஏகாரம் வருவதை உடையதாகும்.*

***எடுத்துக்காட்டு:***
*கிளி –> கிளியே.*
*மரம் –> மரமே.*
*கிளை –> கிளையே.*
*வேர் –> வேரே.*
*காய் –> காயே.*
*அலகு –> அலகே.*
*கல் –> கல்லே.*
*புள் –> புள்ளே.*

### விளிப்பெயர்கள் சேய்மையில் அளவு கடத்தல்

*149. உளவெனப் பட்ட எல்லாப் பெயரும்*
*அளபிறந் தனவே விளிக்குங் காலைச்*
*சேய்மையின் இசைக்கும் வழக்கத் தான.*

*பொருள்:* தூரத்தில் இருந்து நீண்டு ஒலிக்கும் வழக்கத்தால், விளிவேற்றுமை உருபை ஏற்கும் எல்லா உயர்திணை மற்றும் அஃறிணைப் பெயர்களும், கூப்பிடும்போது, மாத்திரை அளவில் எல்லையற்றவை.

*எடுத்துக்காட்டு:*
நம்பி –> நம்பீ...
நங்கை –> நங்கா...ய்
அம்மு –> அம்மூ...
கிளி –> கிளியே...
மரம் –> மரமே...

### விளியை ஏற்கும் அம்ம என்னும் இடைச்சொல்

*150. அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்*
*அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்*
*விளியொடு கொள்ப தெளியு மோரே.*

*பொருள்:* 'அம்ம' என்னும் அசைச் சொல்லின் நீட்டமான 'அம்மா', உறவு முறைப்பெயரோடு பொருந்தாவிட்டாலும், கவனத்தை ஈர்க்கும் காரணத்தால், அதை விளியாகக் கொள்வர், மொழியின் இயக்கத்தில் தெளிவானவர்கள்.

### விளியை ஏற்கா உயர்திணைப் பெயர்

*151. தநநு எயென அவைமுத லாகித்*
*தன்மை குறித்த னளரவென் இறுதியும்*
*அன்ன பிறவும் பெயர்நிலை வரினே*
*இன்மை வேண்டும் விளியொடு கொளலே.*

*பொருள்:* 'த', 'ந', 'நு', 'எ ஆகிய எழுத்துகளை முதலாகவும், தன்னிலையைக் குறிக்கும் 'ன', 'ள', 'ர' ஆகிய எழுத்துகளை

இறுதியாகவும் கொண்ட சொற்களும், அவற்றைப் போன்ற பிறவும், பெயர்ச்சொற்களாக வந்தால், விளிவேற்றுமை உருபுடன் சேர்த்தல் கூடாது.

**எடுத்துக்காட்டு:**
தமன், தமள், தமர்
நமன், நமள், நமர்
நுமன், நுமள், நுமர்
எமன், எமள், எமர்

# 5. பெயரியல்

*பெயரியல் = பெயர் + இயல் = பெயர்ச்சொல்லின் இயல்பு.*

*பெயர் – வினை – இடை – உரி ஆகிய நால்வகைச் சொற்கும் பொது இலக்கணம்*

***152. எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே.***

***பொருள்:*** *பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என எல்லா வகைச் சொற்களும் பொருளைக் குறிக்கின்றன.*

***விளக்கம்:*** *பொருளைக் குறிக்காத சொல்லென்று எதுவும் இல்லை. கூர்ந்தும் ஆழ்ந்தும் நோக்கினால், வேற்றுமை உருபு களும், சாரியைகளும், ஏன், அசைச் சொற்களும் கூட பகுதிப் பொருளையோ, குறிப்புப் பொருளையோ உணர்த்துகின்றன என்பதை அறியலாம்.*

***சொல், பொருண்மையையும் தன்மையையும் உணர்த்தல்***

***153. பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்***
***சொல்லினாகும் என்மனார் புலவர்.***

***பொருள்:*** *சொல்லில் இருந்தே, அதன் பொருண்மையையும், அதன் தன்மையையும் அறிய முடியும், என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.*

***விளக்கம்:*** *சொல்லின் அலகுகள், எழுத்துகளும் அசைகளும்.*

எழுத்துகள் ஒவ்வொன்றுமே பொருண்மையைக் குறிப்பவை. எனவே, இயல்பாகவே, எழுத்துகள் சேர்ந்து உருவாகும் அசைகளும், அசைகளும் எழுத்துகளும் சேர்ந்து உருவாகும் சொற்களும், பொருண்மையைக் குறிக்கின்றன.

சொல்லைக் கொண்டே, அது பெயர்ச்சொல்லா, வினைச் சொல்லா, இடைச்சொல்லா, உரிச்சொல்லா என அதன் தன்மை யையும் அறிய முடியும்.

| எழுத்தும் அசையும் | அசையும் அசையும் |
|---|---|
| அவன் = அ + அன். | அவன் = அவ் + அன். |
| இவன் = இ + அன். | இவன் = இவ் + அன். |
| உவன் = உ + அன். | உவன் = உவ் + அன். |

மேலே உள்ள சொற்களைப் பகுத்தால், 'அ', 'இ', 'உ' ஆகிய சுட்டெழுத்துகளை அடுத்து, 'அன்' எனும் அசை வருகின்றது. அல்லது, 'அவ்', 'இவ்', 'உவ்' எனும் சுட்டு அசைகளை அடுத்து, 'அன்' எனும் அசை வருகின்றது. 'அன்' எனும் அசை, ஆண்பால் உயர்திணையைக் குறிக்கும்.

அவன் = அ + அன்.
அவள் = அ + அள்.
அவர் = அ + அர்.

மேலே உள்ள சொற்களைப் பகுத்தால், 'அ' எனும் சுட்டெழுத்தை அடுத்து, 'அன்', 'அள்', 'அர்' எனும் அசைகள் முறையே, உயர்திணையின் ஆண்பால், பெண்பால், பொதுப்பால் (ஆண், பெண் இரண்டுக்கும் பொதுவானது) ஆகியவற்றைக் குறிக்கின்றன.

அன் = அ + ன்.
அள் = அ + ள்.
அர் = அ + ர்.

மேலே உள்ள அசைகளைப் பகுத்தால், 'அ' என்பது பொதுவாய் உயிரைக் குறிப்பதாய் இருக்க, 'ன்', 'ள்', 'ர், ஆகியவையே, இறுதியில் உயர்திணையின் ஆண்பால், பெண்பால், பொதுப்பால் ஆகியவற்றை வேற்றுமைப்படுத்திக் குறிக்கின்றன.

மேற்கூறியவற்றில் பெறவேண்டியது யாதெனில், ஒவ்வொரு எழுத்தும் பொருண்மை அல்லது பகுதிப் பொருண்மையைக் குறிக்கின்றது என்பதுவே.

வந்தான் = வன் + த் + ஆன் = வல் + த் + ஆன்.
வந்தாள் = வன் + த் + ஆள் = வல் + த் + ஆள்.

வந்தார் = வன் + த் + ஆர் = வல் + த் + ஆர்.

மேலே உள்ள சொற்களைப் பகுத்தால், 'வல் + த்' என்பது, மூன்று சொற்களுக்கும் பொதுவாய், 'வருதல்' எனும் வினையைக் குறிப்பதாய் உள்ளது. 'ஆன்', 'ஆள்', 'ஆர்' ஆகிய அசைகளே, உயர்திணையின் ஆண்பால், பெண்பால், பொதுப்பால் ஆகிய வற்றை, வினையில், வேற்றுமைப்படுத்திக் குறிக்கின்றன.

ஆன் = ஆ + ன்.
ஆள் = ஆ + ள்.
ஆர் = ஆ + ர்.

மேலே உள்ள அசைகளைப் பகுத்தால், 'ஆ' என்பது பொதுவாய் ஆதலைக் குறிப்பதாய் இருக்க, 'ன்', 'ள்', 'ர், ஆகியவையே, இறுதியில் உயர்திணையின் ஆண்பால், பெண்பால், பொதுப்பால் ஆகியவற்றை வேற்றுமைப்படுத்திக் குறிக்கின்றன.

வந்த = வன் + த் + அ = வல் + த் + அ.

'வந்த' எனும் சொல், 'வருதல் செய்த' எனும் வினை எச்சமாய் பொருண்மை குறிக்கின்றது.

வந்தவன் = வந்த + அன் = வன் + த் + அ + அன்.
வந்தவள் = வந்த + அள் = வன் + த் + அ + அள்.
வந்தவர் = வந்த + அர் = வன் + த் + அ + அர்.

இங்கு, வினையெச்சமானது ஆண்பால், பெண்பால், பொதுப் பால் ஆகியவற்றைக் குறிக்கும் விகுதியின் சேர்க்கையால், வினைப் பெயராகின்றது.

எனவே, சொல்லை அதன் அடிப்படை அலகுகளாய்ப் பிரித்து, அதன் பொருளையும், தன்மையையும் அறிய முடியும்.

மேலும், சொன்மை என்பது, சொல்லை ஒலிக்கும் முறைமை என்பதும், இங்கு பொருந்தும். என்ன எழுத்துகளோ அவற்றின் ஒலிகளே தமிழில் ஒலிக்கப்படுகின்றன. சில மொழிகளில் உள்ளது போல், அமைதியாகும் எழுத்தொலியோ, ஒரு எழுத்துக்கு வேறொரு ஒலியோ, தமிழில் கிடையாது.

### சொல் இருவகையாகப் பொருளுணர்த்துதல்

**154.தெரிபுவேறு நிலையலும் குறிப்பின் தோன்றலும்**
**இருபாற் றென்ப பொருண்மை நிலையே.**

*பொருள்:* பொருண்மை, சொல்லினில் இருந்து வேறாய்த் தெரிதலும், குறிப்பு எனும் சொல்லின்படி தோன்றலும், என இரண்டு வகைப்படும்.

**எடுத்துக்காட்டு:**

*1.* 'கருப்பன் வந்தது', இதில், 'கருப்பன்' என்பது உயர்திணை ஆண்பாலைக் குறிக்கும் பெயர்ச்சொல். 'வந்தது' என்பது அஃறிணை ஒன்றன்பாலைக் குறிக்கும் வினைச்சொல். பெயர்ச்சொல்லுக்கும் வினைச்சொல்லுக்கும் இயல்பான இணக்கம் இல்லை. எனினும், 'வந்தது' எனும் வினைச்சொல்லால், 'கருப்பன்' என்பது அஃறிணைக்கு விரவி வந்த உயர்திணைப் பெயர்ச்சொல் என்பது தெரிகின்றது. எனவே, பொருண்மை சொல்லினில் இருந்து வேறாய் தெரிகின்றது.

*2.* 'கருப்பன் வந்தான்', இதில் 'கருப்பன்' எனும் உயர்திணை ஆண்பால் பெயர்ச்சொல்லும், 'வந்தான்' எனும் உயர்திணை ஆண்பால் வினைச்சொல்லும் இயல்பான இணக்கமுடன் வந்துள்ளன. பொருண்மை அல்லது குறிப்பு சொல்லின்படியே தோன்றுகின்றது.

*3.* 'தேங்காய் தின்றான்', இதில், தேங்காயைத் தின்றான் என்று பொருள் பெறப்படும். 'தேங்காய்' என்பதைச் செயல்படும் பெயர்ச்சொல்லாகக் கருதாமல், செயலுக்குட்பட்ட பொருளாகின்றது. 'ஐ' எனும் வேற்றுமை உருபும் மறைந்து நிற்கிறது. இங்கும், பொருண்மை சொல்லினில் இருந்து வேறாய்த் தெரிகின்றது.

*4.* 'தேங்காய் தின்றான்', என்பதில், 'தேங்காய்' எனும் அஃறிணைப் பெயர்ச்சொல், உயர்திணை ஒருவனுக்கு ஆகிவந்த பெயராய் இருப்பின், பொருண்மை, சொல்லினில் இருந்து வேறாய்த் தெரிகின்றது.

*5.* 'தேங்காயைத் தின்றான்', என்பதில், 'தேங்காய்' எனும் அஃறிணப் பொருளைத் 'தின்றான்' எனும் உயர்திணை ஆண்பால் ஒருவனுக்குரிய வினைச்சொல் இயல்பாக இணங்கி வருகின்றது. பொருண்மை அல்லது குறிப்பு சொல்லின்படியே தோன்றுகின்றது.

### பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும்

***155.*** **சொல்லெனப் படுப பெயரே வினையென்று**
**ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே.**

இசினோர் = விரிவாக ஆராய்ந்த அறிஞர்கள்.

**பொருள்:** சொற்கள் எனப்படுபவை, பெயர்ச்சொல், வினைச் சொல் என இரண்டு வகைப்படுபவை என்பர், சொற்களின் அமைப்பையும், பொருளையும், இயக்கத்தையும் விரிவாக ஆராய்ந்த அறிஞர்கள்.

**விளக்கம்:** பெயர்ச்சொல்லும், வினைச்சொல்லும் மொழியின் இயக்கத்திற்கு அடிப்படையானவை. அவையின்றி, மொழி இயங்காது. பிற சொற்களான, இடைச் சொற்களும், உரிச்சொற் களும், பெயர்ச்சொல்லையும் வினைச்சொல்லையும் சார்ந்தே இயங்கும், தனித்து இயங்காதன.

வேற்றுமை உருபுகளும், சாரியைகளும், அசைச்சொற்களும், பெயர்ச்சொல்லையும் வினைச்சொல்லையும் சார்ந்தே இயங்கும், தனித்து இயங்காதன. தொக்கி நிற்பன. முழுமையான பொருள் தராதன.

இடைச்சொற்கள், உரிச்சொற்கள், வேற்றுமை உருபுகள், சாரி யைகள், அசைச்சொற்கள் ஆகியவை இன்றியும், பெயர்ச் சொல்லும், வினைச்சொல்லும் இயங்கி, முழுமையான பொருள் தரும்.

## இடைச்சொல்லும் உரிச்சொல்லும்

**156.இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்**
**அவற்றுவழி மருங்கின் தோன்று மென்ப.**

**பொருள்:** இடைச்சொல் ஒலிப்பும், உரிச்சொல் ஒலிப்பும், பெயர்ச்சொல் மற்றும் வினைச்சொல் ஆகியவை வருகின்ற இடத்தில் தோன்றும் என்பர், அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

'நல்ல கந்தனைக் கண்டேன்'. இதில், 'நல்ல' என்பது உரிச்சொல். 'கந்தன்' என்பது பெயர்ச்சொல். 'ஐ' என்பது இடைச்சொல். 'கண் டேன்' என்பது வினைச்சொல்.

'நல்ல' என்பதும் 'ஐ' என்பதும் தனித்து வந்து பொருள் தராது. 'கந்தன் கண்டேன்' என்பது அடிப்படையான பொருளைத் தருகின்றது.

## பெயர்ச்சொற்கள்

**157.அவற்றுள்,**
**பெயரெனப் படுபவை தெரியுங் காலை**
**உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்**
**ஆயிரு திணைக்கு மோரன்ன உரிமையும்**
**அம்மூ உருபின தோன்றல் ஆறே.**

**பொருள்:** மேலே கூறியவற்றுள், ஆராய்ந்து பார்க்கும்போது, பெயர்ச்சொற்கள் எனப்படுபவை, உயர்திணைக்கு உரியதாயும், அஃறிணைக்கு உரியதாயும், அந்த இரண்டு திணைகளுக்கும் சமமாய் உரியதாயும், என, மூன்று வடிவங்களில் தோன்றும் வழிகள் கொண்டவையாக இருக்கின்றன.

**விளக்கம்:** பெயர்ச்சொல் மூன்று வகைப்படும். அவை, உயர் திணைப் பெயர்ச்சொல், அஃறிணைப் பெயர்ச்சொல், விரவுப் பெயர்ச்சொல். (நன்றி: பாலசுந்தரனார்)

**எடுத்துக்காட்டு:**
கருப்பன் வந்தான். (உயர்திணைப் பெயர்ச்சொல்)
கருப்பு வந்தது. (அஃறிணைப் பெயர்ச்சொல்)
கருப்பன் வந்தது அல்லது கருப்பு வந்தான். (விரவுப் பெயர்ச்சொல்)

## இருதிணை ஐம்பாற் சொற்கள்

**158. இருதிணைப் பிரிந்த ஐம்பாற் கிளவிக்கும்**
**உரியவை உரிய பெயர்வயி னான.**

**பொருள்:** இரண்டு திணைகளில், ஐந்து பால்களாய் பிரியும் எல்லாச் சொற்களுக்கும் உரிய எழுத்துகள், பெயர்ச்சொல்லின் இடத்தில், உள்ளன.

**எடுத்துக்காட்டு:**

உயர்திணை:
1. அவன் – ஆண்பால்.
2. அவள் – பெண்பால்.
3. அவர் அல்லது அவர்கள் – ஒருமை பொதுப்பால் அல்லது பன்மை பொதுப்பால்.

‘அவர்’ எனும் சொல் ஒருமையையே குறிக்கின்றது, பலரை

*அல்ல. ஆண்பால் அல்லது பெண்பால் ஆகிய இரண்டனுள் ஏதாவது ஒன்றைக் குறிக்கின்றது. இரண்டு பாலையும் அல்ல. அதனுடன் வருகின்ற வினைச்சொல்லைப் பொறுத்து வேண்டுமானால் பாலை உறுதிப்படுத்தலாம். எனவே, 'பலர்பால்' என்பதைக் காட்டிலும், 'பொதுப்பால்' என்பது, சரியானதாய் இருக்கும் என தோன்றுகின்றது.*

*அஃறிணை:*
*4. அது – ஒன்றன்பால்.*
*5.அவை – பலவின்பால்.*

*1. 'ன்' எனும் இறுதி பொதுவாக, ஆண்பாலைக் குறித்தாலும், அது பெண்பாலுக்கும், அஃறிணைக்கும் வரலாம்.*

***எடுத்துக்காட்டு:***

*பெண்மகன் (ஆகுபெயர்), கருப்பன் (விரவுப்பெயர்)*

*2. 'ள்' எனும் இறுதி பொதுவாக, பெண்பாலைக் குறித்தாலும், அது பல்லோர்க்கும், அஃறிணைக்கும் வரலாம்.*

***எடுத்துக்காட்டு:***
*மக்கள் (பல்லோர்)*
*மகள் (அஃறிணை)*

*3. 'ர்' அல்லது 'ர்கள்' எனும் இறுதிகள் பொதுவாக, பொதுப்பாலைக் குறித்தாலும், அஃறிணை ஒன்றன்பாலுக்கும், பலவின்பாலுக்கும் வரும்.*
*அவர்*
*அவர்கள்*

*4. 'உ' எனும் இறுதி பொதுவாக, அஃறிணை ஒன்றன்பாலைக் குறித்தாலும், உயர்திணை ஆண்பால் மற்றும் பெண்பால் ஆகிய இரண்டுக்கும் வரலாம்.*
*ஆடூஉ (உயர்திணை ஆண்பால்)*
*மகடூஉ (உயர்திணை பெண்பால்)*

*5. 'ஐ' என்பது அஃறிணைக்கு வந்தாலும், உயர்திணைக்கும் வரும்.*

*அவை கூடியது.*

### உயர்திணைப் பெயர்கள்

*159.அவ்வழி,*
*அவனிவன் உவனென வரூஉம் பெயரும்*
*அவளிவள் உவளென வரூஉம் பெயரும்*
*அவரிவர் உவரென வரூஉம் பெயரும்*
*யான்யாம் நாமென வரூஉம் பெயரும்*
*யாவன் யாவள் யாவர் என்னும்*
*ஆவயின் மூன்றோ டப்பதினைந்தும்*
*பாலறி வந்த உயர்திணைப் பெயரே.*

*பொருள்:* அவன், இவன், உவன், அவள், இவள், உவள், அவர், இவர், உவர், யான், யாம், நாம் மற்றும் யாவன், யாவள், யாவர் என அம்மூன்று இடங்களில் வரும், மொத்தம் பதினைந்து சொற்களும், ஆண்பால், பெண்பால், பொதுப்பால் ஆகியவற்றைத் தெரிவிக்கும் உயர்திணைப் பெயர்ச்சொற்களாம்.

*விளக்கம்:*
அவன், இவன், உவன், யாவன் – ஆண்பால்.
அவள், இவள், உவள், யாவள் – பெண்பால்.
அவர், இவர், உவர், யான், யாம், நாம், யாவர் – பொதுப்பால்.

இதுவுமது

*160.ஆண்மை அடுத்த மகனென் கிளவியும்*
*பெண்மை அடுத்த மகளென் கிளவியும்*
*பெண்மை அடுத்த இகர இறுதியும்*
*நம்மூர்ந்து வரூஉம் இகரஐ காரமும்*
*முறைமை சுட்டா மகனும் மகளும்*
*மாந்தர் மக்கள் என்னும் பெயரும்*
*ஆடூஉ மகடூஉ ஆயிரு கிளவியும்*
*சுட்டுமுத லாகிய அன்னும் ஆனும்*
*அவைமுத லாகிய பெண்டென் கிளவியும்*
*ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ*
*அப்பதி னைந்தும் அவற்றோ ரன்ன.*

*பொருள்:* ஆண்மகன், பெண்மகள், பெண்டாட்டி, நம்பி, நங்கை, மகன்மகள் ('மகனின் மகள்' எனும் முறைமைப் பெயர் அல்ல, மகனே மகள் போன்று அடங்கி இருப்பவன்), மாந்தர், மக்கள், ஆடூஉ, மகடூஉ, அன்னான், அன்னாள், பொன்னன்னான், பொன்னன்னாள், பொன்னன்னார் ஆகிய பதினைந்து சொற்களும்

மேற்கூறியவற்றைப் போன்று, உயர்திணைப் பால்களான, ஆண்பால், பெண்பால், பொதுப்பால் ஆகிய மூன்றில் ஒன்றைக் குறிக்கும்.

**விளக்கம்:**

ஆண்மகன், நம்பி, மகன்மகள், ஆடூஉ, அன்னான், பொன்னன்னான் – ஆண்பால்.

பெண்மகள், பெண்டாட்டி, நங்கை, மகடூஉ, அன்னாள், பொன்னன்னாள் – பெண்பால்.

மாந்தர், மக்கள், பொன்னன்னார் – பொதுப்பால்.

'பெண்மகன்' எனக் கூறும் ஆசிரியர், 'ஆண்மகள்' எனக் கூறாமல், 'மகன்மகள்' எனக் கூறுகின்றார்.

பெண் என்பது தனித்து வந்தே பெண்பாலையும், பெண்மகளையும் குறிக்கும். ஆண் என்பது ஆண்பாலை மட்டுமே குறிக்கும் என்பதாலா?

'என்பெண்' என்றால், 'என்மகள்' எனப் பொருள் வரும்.

'என்ஆண்' என்றால், 'என்மகன்' எனப் பொருள் வராது.

எனவே, 'ஆண்மகள்' என வந்தால், 'மகன்' எனும் பொருள் உள்வராமல் 'மகன், மகளைப் போன்றவன்' எனும் பொருள் வராமல், 'ஆணைப்போன்ற மகள்' எனும் பொருள் மிஞ்சும். பொருள் குழப்பம் வரலாம். எனவே தவிர்க்கப்பட்டது போலும்.

## இதுவுமது

***161. எல்லாரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்***
***எல்லீரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்***
***பெண்மை அடுத்த மகனென் கிளவியும்***
***அன்ன இயல என்மனார் புலவர்.***

**பொருள்:** எல்லார், எல்லீர், பெண்மகன் என்னும் சொற்களும், அத்தகைய இயல்புடையன. அதாவது, உயர்திணைப் பால்களான, ஆண்பால், பெண்பால், பொதுப்பால் ஆகிய மூன்றில் ஒன்றைக் குறிக்கும்.

**விளக்கம்:**
'எல்லாரும்' என்பதன் நிலையான பெயர்ச்சொல், 'எல்லார்'.

*‘எல்லீரும்‘ என்பதன் நிலையான பெயர்ச்சொல், ‘எல்லீர்’.*

**எடுத்துக்காட்டு:**
*எல்லார், எல்லீர் – பொதுப்பால்.*
*பெண்மகன் – பெண்பால்.*

*அல்லது*

*‘பெண்மகன்’ என்பதற்கு, ‘மகளின் மகன்’ என்றோ, ‘மகளே, மகன் போன்று செயல்படுபவள்’ என்றோ, ஆண்பால், பெண்பால் ஆகிய இரண்டுக்கும் பொதுவாய், பொருண்மை தருவதால், பொதுப்பாலில் வைக்கப்படலாம்.*

**எடுத்துக்காட்டு:**

*எல்லார், எல்லீர், பெண்மகன் – பொதுப்பால்.*

**இதுவுமது**

***162.*** ***நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே***
***வினைப்பெயர் உடைப்பெயர் பண்புகொள் பெயரே***
***பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே***
***பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே***
***பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே***
***கூடிவரு வழக்கின் ஆடியற் பெயரே***
***இன்றிவ ரென்னும் எண்ணியற் பெயரொடு***
***அன்றி அனைத்தும் அவற்றியல் பினவே.***

***பொருள்:*** *நிலப்பெயர்ச்சொல், குடிப்பெயர்ச்சொல், குழுப் பெயர்ச்சொல், வினைப்பெயர்ச்சொல், உடைப்பெயர்ச்சொல், பண்புகொள் பெயர்ச்சொல், பலரைக் குறிக்கும் நிலையான முறைப் பெயர்ச்சொல், பலரைக்குறிக்கும் நிலையானசினைப்பெயர்ச்சொல், பலரைக் குறிக்கும் நிலையான திணைப்பெயர்ச்சொல், கூடிவரு கின்ற வழக்கமுடைய ஆடும் இயல்புடையவர் பெயர்ச்சொல், இவையன்றி, எண் இயல்புடைய பெயர்ச்சொல்லுடன், அவற்றைப் போன்ற பிற அனைத்தும் மேற்குறிய இயல்பை உடையன. அதாவது, உயர்திணைப் பால்களான, ஆண்பால், பெண்பால், பொதுப்பால் ஆகிய மூன்றில் ஒன்றைக் குறிக்கும்.*

**எடுத்துக்காட்டு:**

*நிலப்பெயர்ச்சொல்:*

மலையர், மலையார், மலைச்சர், மலைச்சார், மலைத்தர், மலைத்தார், மலையவர், மலைப்பர், மலைப்பார், மலையப்பர், முதலியன.

காட்டப்பர், காட்டியர்.

நாடர், நாட்டார்.

குடிப்பெயர்ச்சொல்:

எயினர், எயினார்.

உமணர், உமணார்.

வேடர், வேட்டுவர்.

சேரர், சேரன்மார், சோழர், சோழன்மார், பாண்டியர், பாண்டியன்மார், பல்லவர், பல்லவன்மார், களப்பிரர், களப்பிரன்மார்.

குழுவின் பெயர்ச்சொல்:

அவையர், அவையார்.

ஐம்பெருங்குழுவர்.

எண்பேராயத்தார்.

வினைப்பெயர்ச்சொல்:

தச்சர், கொல்லர், உழவர், மேய்ப்பர், காப்பர், காவலர்.

உடைப்பெயர்ச்சொல்:

தோப்புடையர், காடுடையர், ஆவுடையார், நீருடையர், தேருடையர், கோட்டையர், நாட்டையர், ஊருடையார், உறவுடையார். சோலையார். பொன்னுடையர், அருளுடையார், அன்புடையார்.

பண்புகொள் பெயர்ச்சொல்:

கரியர், கருப்பர், வெள்ளையர், பச்சையர், பச்சையப்பர், நீலர், சிவப்பர், குள்ளர்.

பலரைக் குறிக்கும் நிலையான முறைப்பெயர்ச்சொல்:

தாய்மார், தந்தையர், மாமன்மார், அக்காள்மார், அண்ணன்மார், மக்காள்.

பலரைக் குறிக்கும் நிலையான சினைப்பெயர்ச்சொல்:

வன்கண்ணார், நுண்செவியோர், செந்நாவார், நெடுங்கண்ணார், நன்கையார், பெருங்காலார்.

பலரைக் குறிக்கும் நிலையான திணைப்பெயர்ச்சொல்:

*குறிஞ்சியார், முல்லையார், மருதத்தார், நெய்தலார், பாலையார்.*

*கூடிவருகின்ற வழக்கமுடைய ஆடும் இயல்புடையவர் பெயர்ச்சொல்:*

*கூத்தர், பாணர், பறையர்.*

*எண் இயல்புடைய பெயர்ச்சொல்:*

*ஒருவர், இருவர், மூவர், நால்வர், ஐவர்.*

***புறனடை***

***163. அன்ன பிறவும் உயர்திணை மருங்கின்***
***பன்மையும் ஒருமையும் பாலறி வந்த***
***என்ன பெயரும் அத்திணை யவ்வே.***

***பொருள்:*** *அவற்றைப் போன்ற பிற பெயர்ச்சொற்களும், உயர்திணை இடத்தில், பன்மை மற்றும் ஒருமைப் பொதுப்பால், ஆகியவற்றைக் குறிக்க வரும் மற்ற எந்தப் பெயர்ச்சொல்லும், அத்திணைக்குரியதே.*

***எடுத்துக்காட்டு:***

*மலைநாடர், காடுநாடர், மேட்டுநிலத்தார், சமணர், பஞ் சாயத்தார், குயவர், வண்ணார், கானுடையார், நிலமுடையார், பெரியார், பெரியோர், நெடுந்தோளர், அறுவர், அருவர்.*

***அஃறிணைப் பெயர்கள்***

***164. அதுஇது உதுவென வரூஉம் பெயரும்***
***அவைமுத லாகிய ஆய்தப் பெயரும்***
***அவையிவை உவையென வரூஉம் பெயரும்***
***அவைமுத லாகிய வகரப் பெயரும்***
***யாதுயா யாவை என்னும் பெயரும்***
***ஆவயின் மூன்றோ டப்பதினைந்தும்***
***பாலறி வந்த அஃறிணைப் பெயரே.***

***பொருள்:*** *அது, இது, உது, அஃது, இஃது, உஃது, அவை, இவை, உவை, அவ், இவ், உவ், யாது, யா, யாவை என அம்மூன்று இடங்களில் வரும், அப்பதினைந்து சொற்களும், ஒன்றன்பால்,*

*பலவின்பால் ஆகியவற்றைத் தெரிவிக்கும் அஃறிணைப் பெயர்ச் சொற்களாகும்.*

*எடுத்துக்காட்டு:*

*அது, இது, உது, அஃது, இஃது, உஃது, அவ், இவ், உவ், யாது – ஒன்றன்பால்*

*அவை, இவை, உவை, யா, யாவை – பலவின்பால்.*

இதுவுமது

**165** **பல்ல பலசில என்னும் பெயரும்**
**உள்ள இல்ல என்னும் பெயரும்**
**வினைப்பெயர்க் கிளவியும் பண்புகொள் பெயரும்**
**இனைத்தெனக் கிளக்கும் எண்ணுக்குறிப் பெயரும்**
**ஒப்பி னாகிய பெயர்நிலை உளப்பட**
**அப்பால் ஒன்பதும் அவற்றோ ரன்ன.**

*பொருள்: 'பல்ல, பல, சில, உள்ள, இல்ல' என்னும் பெயர்ச்சொற்களும், 'வருவது, செல்வன' போன்ற வினைப்பெயர்ச் சொற்களும், 'கரியது, கரியன, கரிய, கரியவை' போன்ற பண்புகொள் பெயர்ச்சொற்களும், 'ஒன்று, பத்து' போன்ற இத்தனை என வரும் எண்ணைக் குறிக்கும் பெயர்ச்சொற்களும், 'பொன்னன்னது, பொன் னன்ன' என ஒப்பிட்டுக் கூறும் பெயர்ச்சொற்கள் உட்பட அந்த ஒன்பது வகையும், ஒன்றன்பால், பலவின்பால் ஆகியவற்றைத் தெரிவிக்கும் அஃறிணைப் பெயர்ச்சொற்களாகும்.*

*எடுத்துக்காட்டு:*

*1. வருவது – வினைப் பெயர்ச்சொல் – ஒன்றன்பால்.*

*2. கரியது – பண்புகொள் பெயர்ச்சொல் – ஒன்றன்பால்.*

*3. ஒன்று – எண்ணைக்குறிக்கும் பெயர்ச்சொல் – ஒன்றன்பால்.*

*4. பொன்னன்னது – ஒப்பிட்டுக் கூறும் பெயர்ச்சொல் – ஒன்றன்பால்*

*5. பல்ல, பல, சில, உள்ள, இல்ல – பலவின்பால்*

*6. செல்வன – வினைப் பெயர்ச்சொல் – பலவின்பால்*

*7. கரியன, கரிய, கரியவை – வினைப் பெயர்ச்சொல் – பலவின்பால்*

*8. பத்து – எண்ணைக் குறிக்கும் பெயர்ச்சொல் – பலவின்பால்*

*9. பொன்னன்ன – ஒப்பிட்டுக் கூறும் பெயர்ச்சொல் – பலவின்*

*பால்*

## *அஃறிணை இயற்பெயர்*

***166.* கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே**
**கொள்வழி உடைய பலஅறி சொற்கே.**

**பொருள்:**'கள்' எனும் இறுதியுடன் சேரும் இயல்புடைய அந்தப் பெயர்ச்சொற்கள், பலவின்பாலை அறிவதற்குரிய வழியைக்கொண்டுள்ளன.

**எடுத்துக்காட்டு:**
ஆக்கள்.
மாக்கள்.
ஆடுகள்.
குதிரைகள்.

## *புறனடை*

***167.* அன்ன பிறவும் அஃறிணை மருங்கின்**
**பன்மையும் ஒருமையும் பாலறி வந்த**
**என்ன பெயரும் அத்திணை யவ்வே.**

**பொருள்:** அவற்றைப் போன்ற பிற பெயர்ச்சொற்களும், அஃறிணை இடத்தில், பலவின்பாலையும், ஒன்றன்பாலையும் குறிக்க வரும் மற்ற எந்தப் பெயர்ச்சொல்லும், அத்திணைக்குரியதே.

## *பாலுணர்த்தும் அஃறிணை இயற்பெயர்*

***168.* தெரிநிலை யுடைய அஃறிணை இயற்பெயர்**
**ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே.**

**பொருள்:** ஒருமையையும், பன்மையையும் குறிக்கும் எழுத்துகள், வினையுடன் வந்தால், அதைப் பொறுத்து, அஃறிணை இயல்புப் பெயர்ச்சொல், பாலைக் குறிக்கும் நிலையைக் கொள்ளும்.

**எடுத்துக்காட்டு:**

'ஆ வந்தது' – 'வந்தது' எனும் வினைச்சொல்லில், 'அது' எனும் இறுதிஒருமையைக் குறிப்பதால், 'ஆ' எனும் அஃறிணை

இயல்புப் பெயர்ச்சொல், ஒன்றன்பாலைக் குறிக்கும் நிலையைக் கொள்கின்றது.

'ஆ வந்தன' – 'வந்தன' எனும் வினைச்சொல்லில், 'ன' எனும் இறுதிபன்மையைக் குறிப்பதால், 'ஆ' எனும் அஃறிணை இயல்புப் பெயர்ச்சொல், பலவின்பாலைக் குறிக்கும் நிலையைக் கொள்கின்றது.

### பாலுணர்த்தும் விரவுப்பெயர்

**169.** ***இருதிணைச் சொற்கு மோரன்ன உரிமையின்***
***திரிபுவேறு படூஉம் எல்லாப் பெயரும்***
***நினையுங் காலைத் தத்தம் மரபின்***
***வினையோ டல்லது பால்தெரி பிலவே.***

***பொருள்:*** அஃறிணை, உயர்திணை ஆகிய இரண்டு திணைக்கும், சமமான பொருளில், விரவுப்பெயராக வரும் எல்லாப் பெயர்ச் சொற்களும், ஆராய்ந்து பார்க்கையில், தங்களுடன் வழக்கமாக வரும் வினைச்சொல் இல்லாமல், இத்திணை, இப்பால் என அறிய முடியாது.

***எடுத்துக்காட்டு:***
குருடு வந்தான் – உயர்திணை ஆண்பால்.
குருடு வந்தாள் – உயர்திணை பெண்பால்.
குருடு வந்தார் – உயர்திணை ஒருமைப் பொதுப்பால்.
குருடு வந்தனர் – உயர்திணை பன்மைப் பொதுப்பால்.
குருடு வந்தது – அஃறிணை ஒன்றன்பால்.
குருடு வந்தன – அஃறிணை பலவின்பால்.

### ஒருசொல், உயர்திணையின் இருபாலை உணர்த்துதல்

**170.** ***நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியின்***
***உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே***
***அன்ன மரபின் வினைவயி னான.***

நிகழூஉ நின்ற = நிகழா நின்ற. நிலைக்காத.

பலர்வரை கிளவி = பலரைக் குறிக்கும் சொல், அனேகர்.

***பொருள்:*** நிலைபெறாத பலரைக் குறிக்கும் சொல்லான

*'அனேகர்' என்பதில், அதற்கு ஒத்த வழக்கமான வினைச்சொல் வந்தால், உயர்திணை ஒருமைப் பொதுப்பால் குறிக்கப்படுவதும் உண்டு.*

**எடுத்துக்காட்டு:**

*அனேகர் வந்தார். (பலர் வந்தார்) – உயர்திணைப் பன்மைப் பொதுப்பால்.*

*அனேகர் (அனேகன் = அன் + ஏகன். ஒருவன் அல்லாதவன். அனேகன் ஒருவனையே குறிக்கின்றது. அனேகர் என்பதும் ஒருவரையே குறிக்கும்) வந்தார் – உயர்திணை ஒருமைப் பொதுப்பால்.*

*அல்லது*
*அனேகர் வந்தனர் – உயர்திணை பன்மைப் பொதுப்பால்.*
*அனேகர் வந்தனர் – உயர்திணை ஒருமைப் பொதுப்பால்.*

*உயர்ந்த மதிப்பின் காரணத்தால், ஒருமைப் பெயருக்கு, பன்மை வினை வருகின்றது.*

### விரவுப் பெயரும் முறையும் தொகையும்

**171. இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே**
**முறைப்பெயர்க் கிளவி தாமே தானே**
**எல்லாம் நீயிர் நீயெனக் கிளந்து**
**சொல்லிய அல்ல பிறவும் ஆஅங்கு**
**அன்னவை தோன்றின் அவற்றொடுங் கொளலே.**

**பொருள்:** *இயற்பெயர், உறுப்புப்பெயர், உறுப்புப்பெயருடன் முதல்பெயர், உறவுமுறைப்பெயர்ச்சொல், தாம், தான், எல்லாம், நீயிர், நீ என வெளிப்படுத்திய சொற்கள் மட்டும் அல்லாமல், பிற சொற்களும், அங்கே அவற்றிற்கு ஒத்த வினைச்சொற்களுடன் தோன்றினால், பலரைக் குறிக்கும் சொல்லிலேயே, ஒருவரைக் குறிப்பதும் கொள்ள முடியும்.*

**எடுத்துக்காட்டு:**
1. *சாத்தர் வந்தனர் – இயற்பெயர்.*
2. *காலர் வந்தனர் – உறுப்புப்பெயர்.*
3. *சீத்தலைச் சாத்தனார் வந்தனர் – உறுப்புப் பெயருடன் முதல்பெயர்.*

*4. தம்பியர், தங்கையர் வந்தனர் – உறவுமுறைப்பெயர்.*

*5. அவர்தாம் வந்தனர்.*

*6. அவர்தான் வந்தனர்.*

*7. எல்லாம் வந்தனர்.*

*8. நீயிர் வாருங்கள்.*

*9. நீ வாரும்.*

*பன்மையைக் குறிக்கும் வினைச்சொல் வந்த போதும், மரியாதை அல்லது முக்கியத்துவம் குறித்து, குறிப்பிட்ட சிறப்பான இடங்களில், பன்மையைக் குறிக்கும் பெயர்ச்சொல் ஒருமையையும் குறிக்கும்.*

*உயர்திணைப் பன்மைப்பெயர், உயர்திணை ஒருமைக்கு விரவி வந்தது.*

### விரவுப்பெயர் இவையெனல்

***172. அவற்றுள்,***
***நான்கே இயற்பெயர் நான்கே சினைப்பெயர்***
***நான்கென மொழிமனார் சினைமுதற் பெயரே***
***முறைப்பெயர்க் கிளவி இரண்டா கும்மே***
***ஏனைப் பெயரே தத்தம் மரபின.***

*பொருள்:* *மேற்கூறியவற்றுள், இயற்பெயர் நான்கு, உறுப்புப் பெயர் நான்கு, உறுப்புடன்கூடிய முதல்பெயர் நான்கு, முறைப் பெயர்ச் சொற்கள் இரண்டு, மற்றைய பெயர்களான, எல்லாம், தாம், தான், நீயிர், நீ ஆகியவை தங்களுடைய வழக்கங்களைக் கொண்டுள்ளன.*

*எடுத்துக்காட்டு:*

*1. சாத்தன், சாத்தி, சாத்தர், சாத்தார் – இயற்பெயர் நான்கு.*

*2. காலன், காலி, காலர், காலார் – உறுப்புப்பெயர் நான்கு.*

*3. சீத்தலைச் சாத்தன், சீத்தலைச் சாத்தி, சீத்தலைச் சாத்தர், சீத்த லைச் சாத்தார் – உறுப்புடன்கூடிய முதல்பெயர் நான்கு.*

*4. தங்கையர், தம்பியர் – பெண்பால், ஆண்பால் உறவுமுறைப் பெயர் இரண்டு.*

*5. எல்லாம், தாம், தான், நீயிர், நீ ஆகியவை பயன்பாட்டு வழக் கத்தைப் பொறுத்தன.*

### இயற்பெயரும் முறையும்

*173.* ***அவைதாம்,***
***பெண்மை இயற்பெயர் ஆண்மை இயற்பெயர்***
***பன்மை இயற்பெயர் ஒருமைஇயற் பெயரென்று***
***அந்நான் கென்ப இயற்பெயர் நிலையே.***

***பொருள்:*** *இயற்பெயர் நான்கு வகையில் நிலைபெறும். அவை, பெண்பால் இயற்பெயர், ஆண்பால் இயற்பெயர், பன்மைப் பொதுப்பால் இயற்பெயர், ஒருமைப் பொதுப்பால் இயற்பெயர் ஆகும்.*

***எடுத்துக்காட்டு:***
*சாத்தி – பெண்பால் இயற்பெயர்*
*சாத்தன் – ஆண்பால் இயற்பெயர்.*
*சாத்தார் – பன்மைப் பொதுப்பால் இயற்பெயர்.*
*சாத்தர் – ஒருமைப் பொதுப்பால் இயற்பெயர்.*

### சினைப்பெயரும் முறையும்

*174.* ***பெண்மைச் சினைப்பெயர் ஆண்மைச் சினைப்பெயர்***
***பன்மைச் சினைப்பெயர் ஒருமைச்சினைப் பெயரென்று***
***அந்நான் கென்ப சினைப்பெயர் நிலையே.***

***பொருள்:*** *உறுப்புப்பெயர் நான்கு வகையில் நிலைபெறும். அவை, பெண்பாலைக் குறிக்கும் உறுப்புப்பெயர், ஆண்பாலைக் குறிக்கும் உறுப்புப்பெயர், பன்மைப் பொதுப்பாலைக் குறிக்கும் உறுப்புப்பெயர், ஒருமைப் பொதுப்பாலைக் குறிக்கும் உறுப்புப் பெயர் ஆகும்.*

***எடுத்துக்காட்டு:***
*காலி – பெண்பாலைக் குறிக்கும் உறுப்புப்பெயர்.*
*காலன் – ஆண்பாலைக் குறிக்கும் உறுப்புப்பெயர்*
*காலார்– பன்மைப் பொதுப்பாலைக் குறிக்கும் உறுப்புப்பெயர்.*
*காலர் – ஒருமைப் பொதுப்பாலைக் குறிக்கும் உறுப்புப்பெயர்.*

### சினைமுதற்பெயரும் முறையும்

*175.* ***பெண்மை சுட்டிய சினைமுதற் பெயரே***
***ஆண்மை சுட்டிய சினைமுதற் பெயரே***

*பன்மை சுட்டிய சினைமுதற் பெயரே*
*ஒருமை சுட்டிய சினைமுதற் பெயரென்று*
*அந்நான் கென்ப சினைமுதற் பெயரே.*

*பொருள்:* பெண்பாலைக் குறிக்கும் உறுப்புடன்கூடிய முதல் பெயர், ஆண்பாலைக் குறிக்கும் உறுப்புடன்கூடிய முதல்பெயர், பன்மைப் பொதுப்பாலைக் குறிக்கும் உறுப்புடன்கூடிய முதல் பெயர், ஒருமைப் பொதுப்பாலைக் குறிக்கும் உறுப்புடன்கூடிய முதல்பெயர் எனும் நான்கும் உறுப்புடன்கூடிய முதல்பெயர் ஆகும்.

**எடுத்துக்காட்டு:**

சீத்தலைச் சாத்தி – பெண்பாலைக் குறிக்கும் உறுப்புடன்கூடிய முதல்பெயர்.

சீத்தலைச் சாத்தன் – ஆண்பாலைக் குறிக்கும் உறுப்புடன்கூடிய முதல்பெயர்.

சீத்தலைச் சாத்தார் – பன்மைப் பொதுப்பாலைக் குறிக்கும் உறுப்புடன்கூடிய முதல்பெயர்.

சீத்தலைச் சாத்தர் – ஒருமைப் பொதுப்பாலைக் குறிக்கும் உறுப்புடன்கூடிய முதல்பெயர்.

## முறைப்பெயரும் முறையும்

**176.** *பெண்மை முறைப்பெயர் ஆன்மைமுறைப் பெயரென்று*
*ஆயிரண் டென்ப முறைப்பெயர் நிலையே.*

*பொருள்:* பெண்பாலைக் குறிக்கும் உறவுமுறைப் பெயர், ஆண் பாலைக் குறிக்கும் உறவுமுறைப் பெயர் என இரண்டு வகையில் உறவுமுறைப்பெயர் நிலைபெறும்.

**எடுத்துக்காட்டு:**

தங்கை, தாய், அத்தை, தாய்மார் – பெண்பாலைக் குறிக்கும் உறவுமுறைப் பெயர்.

அண்ணன், தந்தை, மாமன், தந்தைமார் – ஆண்பாலைக் குறிக்கும் உறவுமுறைப் பெயர்.

எல்லா உறவுமுறைப் பெயர்களும், பெண்பால் அல்லது

ஆண்பாலைக் குறிப்பனவாக உள்ளன. உறவுமுறைப்பெயர்கள், பன்மைப் பொதுப்பாலையோ, ஒருமைப் பொதுப்பாலையோ குறிக்காது.

## பெண்மை சுட்டிய பெயர்

**177. பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருத்திக்கும் ஒன்றிய நிலையே.**

**பொருள்:** பெண்மையைக் குறிக்கும் எல்லாப் பெயர்ச் சொற்களும், அஃறிணை ஒன்றன் பாலுக்கும், உயர்திணைப் பெண் பாலுக்கும் ஒரே பொருளில் பொருந்தும்.

**எடுத்துக்காட்டு:**

*சாத்தி வந்தது. (அஃறிணை ஒன்றன்பால்)*
*சாத்தி வந்தாள். (உயர்திணைப் பெண்பால்)*

## ஆண்மை சுட்டிய பெயர்

**178. ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே.**

**பொருள்:** ஆண்மையைக் குறிக்கும் எல்லாப் பெயர்ச் சொற்களும், அஃறிணை ஒன்றன் பாலுக்கும், உயர்திணை ஆண்பாலுக்கும் ஒரே பொருளில் பொருந்தும்.

**எடுத்துக்காட்டு:**

*சாத்தன் வந்தது. (அஃறிணை ஒன்றன்பால்)*
*சாத்தன் வந்தான். (உயர்திணை ஆண்பால்)*

## பன்மை சுட்டிய பெயர்

**179. பன்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றே பலவே ஒருவர் என்னும்
என்றிப் பாற்கும் ஓரன் னவ்வே.**

**பொருள்:** பன்மையைக் குறிக்கும் எல்லாப் பெயர்ச் சொற்களும், அஃறிணை ஒன்றன் பாலுக்கும், பலவின் பாலுக்கும், உயர்திணை

ஒருமைப் பொதுப்பாலுக்கும், ஒரே பொருளில் பொருந்தும்.

**விளக்கம்:** இறுதி வரியில் உள்ள, 'என்றிப்' என்பது 'ஒன்றிப்' என வருமா? 'ஒருவர் என்னும் ஒன்றிய பாலுக்கும்' என வருமா? 'ஒருவர்' என்பது ஆண்பால், பெண்பால் என இரண்டு பாலுக்கும் பொதுவாய் இருப்பதால், அவை 'ஒன்றியதாய்' கருதலாமா?

*எடுத்துக்காட்டு:*
*சாத்தார் வந்தது. (அஃறிணை ஒன்றன்பால்)*
*சாத்தார் வந்தன. (அஃறிணைப் பலவின்பால்)*
*சாத்தார் வந்தார். (உயர்திணை ஒருமைப் பொதுப்பால்)*

### ஒருமை சுட்டிய பெயர்

***180. ஒருமை சுட்டிய எல்லாப் பெயரும்***
***ஒன்றற்கும் ஒருவர்க்கும் ஒன்றிய நிலையே.***

*பொருள்:* ஒருமையைக் குறிக்கும் எல்லாப் பெயர்ச் சொற்களும், அஃறிணை ஒன்றன் பாலுக்கும், உயர்திணை ஒருமைப் பொதுப் பாலுக்கும், ஒரே பொருளில் பொருந்தும்.

*எடுத்துக்காட்டு:*
*சாத்தர் வந்தது. (அஃறிணை ஒன்றன்பால்)*
*சாத்தர் வந்தார். (உயர்திணை ஒருமைப் பொதுப்பால்)*

### தாம் என்னும் விரவுப்பெயர்

***181. தாம்என் கிளவி பன்மைக் குரித்தே.***

*பொருள்:* 'தாம்' எனும் சொல், உயர்திணைப் பன்மைப் பொதுப் பாலுக்கு உரியது.

*எடுத்துக்காட்டு:*

*தாம் வந்தனர். (உயர்திணைப் பன்மைப் பொதுப்பால்)*

### தான் என்னும் சொல்

***182. தான்என் கிளவி ஒருமைக் குரித்தே.***

*பொருள்:* 'தான்' எனும் சொல், உயர்திணை ஒருமைப் பொதுப்

*பாலுக்கு உரியது.*

***எடுத்துக்காட்டு:***

*தான் வந்தார். (உயர்திணை ஒருமைப் பொதுப்பால்)*

### எல்லாம் என்னுஞ் சொல் இருதிணையில்

***183. எல்லாம் என்னும் பெயர்நிலைக் கிளவி***
***பல்வழி நுதலிய நிலைத்தா கும்மே.***

***பொருள்:*** *'எல்லாம்' என்னும் பெயர்ச்சொல் கூறிய பலபால்களில் வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*உயர்திணை:*

*தன்னிலை கேள்வி:*

*யான் வந்தேனா? யாம் வந்தோமா?*

*பதில்:*
*எல்லாம் வந்தேன். (தன்னிலை உயர்திணை ஒருமைப் பொதுப் பால்)*
*எல்லாம் வந்தோம். (தன்னிலை உயர்திணைப் பன்மைப் பொதுப் பால்)*

*முன்னிலை கேள்வி:*

*நான் / நாம் – வந்தேனா? வந்தோமா?*

*பதில்:*
*எல்லாம் வந்தாய். (முன்னிலை உயர்திணை ஒருமைப் பொதுப் பால்)*
*எல்லாம் வந்தீர். (முன்னிலை உயர்திணைப் பன்மைப் பொதுப் பால்)*

*படர்க்கை கேள்வி:*

*அவன் / அவள் / அவர் / அவர்கள் – வந்தானா / வந்தாளா? வந்தாரா? வந்தனரா?*

*பதில்:*

*எல்லாம் வந்தான். (உயர்திணை ஆண்பால்)*

*எல்லாம் வந்தாள். (உயர்திணை ப்பெண்பால்)*
*எல்லாம் வந்தார். (உயர்திணை ஒருமைப் பொதுப்பால்)*
*எல்லாம் வந்தனர். (உயர்திணைப் பன்மைப் பொதுப்பால்)*

*அஃறிணை:*

*கேள்வி:*

*அது வந்ததா? அவை வந்தனவா?*

*பதில்:*

*எல்லாம் வந்தது. (அஃறிணை ஒன்றன்பால்)*
*எல்லாம் வந்தன. (அஃறிணைப் பலவின்பால்)*

***எல்லாம் என்னுஞ் சொல் உயர்திணை மருங்கில்***

***184. தன்னுள் உறுத்த பன்மைக் கல்லது***
***உயர்திணை மருங்கின் ஆக்கம் இல்லை.***

***பொருள்:*** *'யாம்' எனும் தன்மைப் பன்மையைத் தவிர, மற்ற உயர்திணை முன்னிலை படர்க்கை இடங்களில், 'எல்லாம்' எனும் சொல்லிற்குப் பொருளில்லை. அசைச்சொல்லாய் மட்டுமே வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*யாம் எல்லாம் வந்தோம். (இங்கு, 'எல்லாம்' என்பது 'அனைவரும்' எனும் பொருளில் வரும்.*

*'நீ எல்லாம் வந்தாய்', 'நீவிர் எல்லாம் வந்தீர்', 'அவன் எல்லாம் வந்தான்', 'அவள் எல்லாம் வந்தாள்', 'அவர் எல்லாம் வந்தார்', 'அவர்கள் எல்லாம் வந்தனர்', 'அது எல்லாம் வந்தது', 'அவை எல்லாம் வந்தன' என்பனவற்றில், 'எல்லாம்' எனும் சொல்லிற்குப் பொருள் இல்லை.*

***நீயிர், நீ திணை உணர்த்தா***

***185. நீயிர் நீயென வரூஉங் கிளவி***
***பால்தெரி பிலவே உடன்மொழிப் பொருள.***

***பொருள்:*** *'நீயிர்', 'நீ' என வரும் சொற்கள், பாலைத் தெரிவிக்காது. அச்சொற்களுடன், சேர்ந்து வரும் சொற்களால், பாலை அறியலாம்.*

***விளக்கம்:*** *சொல்லப்படுகின்றவர்களைப் பொறுத்து பால் மாறும்.*

***எடுத்துக்காட்டு:***

*நீ ஆண் மகவை ஈன்றாய். (உயர்திணை ஒருமை பெண்பால்)*
*நீ தந்தை ஆனாய். (உயர்திணை ஒருமை ஆண்பால்)*
*நீ புல் மேய்ந்தாய். (அஃறிணை ஒன்றன்பால்)*
*நீயிர் பெண்கள் (உயர்திணைப் பன்மை பெண்பால்)*
*நீயிர் ஆண்கள் (உயர்திணைப் பன்மை ஆண்பால்)*
*நீயிர் புல் மேய்ந்தீர். (அஃறிணைப் பலவின்பால்)*

### *நீ என்பது ஒருமைக்கே உரித்தாதல்*

***186. அவற்றுள்,***
***நீயென் கிளவி ஒருமைக் குரித்தே.***

***பொருள்:*** *மேற்கூறியவற்றுள், 'நீ' எனும் சொல், உயர்திணை ஒருமைப் பொதுப்பாலுக்கு உரியது. விரவி, அஃறிணை ஒன்றன் பாலுக்கும் வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*நீ ஆண் மகவை ஈன்றாய். (உயர்திணை ஒருமை பெண்பால்)*
*நீ தந்தை ஆனாய். (உயர்திணை ஒருமை ஆண்பால்)*
*நீ புல் மேய்ந்தாய். (அஃறிணை ஒன்றன்பால்)*

### *நீயிர் என்பது பன்மைக்கு உரித்தாதல்*

***187. ஏனைக் கிளவி பன்மைக் குரித்தே.***

***பொருள்:*** *மற்றைய சொல்லான, 'நீயிர்', உயர்திணைப் பன்மைப் பொதுப்பாலுக்கு உரியது. விரவி, அஃறிணைப் பலவின்பாலுக்கும் வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*நீயிர் பெண்கள் (உயர்திணைப் பன்மை பெண்பால்)*
*நீயிர் ஆண்கள் (உயர்திணைப் பன்மை ஆண்பால்)*
*நீயிர் புல் மேய்ந்தீர். (அஃறிணைப் பலவின்பால்)*

**ஒருவர் என்பது ஆண்பாற்கும் பெண்பாற்கும்**

***188.* ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி**
**இருபாற்கும் உரித்தே தெரியுங் காலை.**

***பொருள்:*** ஆராய்ந்து பார்க்கையில், 'ஒருவர்' என்னும் பெயர்ச் சொல், ஆண்பால், பெண்பால் ஆகிய இரண்டு பாலுக்கும் உரியது.

*எடுத்துக்காட்டு:*

ஒருவர் வந்தார். அது ஆண்.
ஒருவர் வந்தார். அது பெண்.

**ஒருவர் என்பது பலர்பாற்கு உரித்தாதல்**

***189.* தன்மை சுட்டின் பன்மைக் கேற்கும்.**

***பொருள்:*** 'ஒருவர்' என்னும் பெயர்ச்சொல், தன்மை அல்லது தன்னிலையைச்சுட்டினால், உயர்திணைப் பன்மை பொதுப்பாலைக் குறிக்கும்.

*எடுத்துக்காட்டு:*

*யாம் ஒருவர்.*
*நாம் ஒருவர்.*
*தாம் ஒருவர்.*

**ஆன்பால் – பெண்பால் – பலர்பால் உணர்த்துதல்**

***190.* இன்ன பெயரே இவையெனல் வேண்டின்**
**முன்னம் சேர்த்தி முறையின் உணர்தல்.**

***பொருள்:*** இந்தப் பெயர்கள், இப்பாலைக் குறிக்கின்றன எனக் கூற வேண்டுமானால், அப்பெயர்களை அடுத்து சேர்க்கும் சொற்களால் உணர்த்தலாம்.

*எடுத்துக்காட்டு:*

*யாம் மகளிர்.*
*நாம் பெண்டிர்.*
*தாம் ஆண்கள்.*

மகளிர் யாம், பெண்டிர் நாம், ஆண்கள் தாம் எனவும் உரைக்கலாம்.

### பெண்மகன் பெண்பாற்கு உரித்தாதல்

***191.*** ***மகடூஉ மருங்கின் பால்திரி கிளவி***
***மகடூஉ இயற்கை தொழில்வயி னான.***

***பொருள்:*** 'பெண்' எனும் சொல்லின் பக்கத்தில், பால் மாறிய கிளவியான 'மகன்', விரவி வந்தால், வினையின் இடத்தில், பெண்பால் இயல்புடைய சொல் வரும்.

***எடுத்துக்காட்டு:***

பெண்மகன் வந்தாள்.

ஆண்மகனைப் போன்று, பொது இடத்தில் விளையாடும் இளவயதுப் பெண், 'பெண்மகன்' என அழைக்கப்பட்டாளாம்.

### செய்யுளில் ஆகாரம் ஓகாரமாதல்

***192.*** ***ஆஓ ஆகும் பெயருமா ருளவே***
***ஆயிடன் அறிதல் செய்யுள் உள்ளே.***

***பொருள்:*** ஆகாரம் ஓகாரமாய் மாறும் பெயர்களும் உள்ளன. அத்தகைய இடங்களை, செய்யுளில் காணலாம்.

***எடுத்துக்காட்டு:***

"வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்
யார்கொல் லளியர் தாமே". (குறுந்.7)

என வரும்.

### விரவுப்பெயர் செய்யுளில் வருதல்

***193.*** ***இறைச்சிப் பொருள்வயின் செய்யுளுள் கிளக்கும்***
***இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா***
***நிலத்துவழி மருங்கின் தோன்ற லான.***

*இறைச்சி = ஒரு நிலத்தின் எலும்பும் சதையும் இரத்தமும் போன்ற கருப்பொருட்கள். விலங்கு, உணவு, செயல், பறை, யாழ் போன்றவை கருப்பொருட்கள். அவற்றின் அடிப்படையிலேயே, அங்கு வாழும் மக்களின் அகவாழ்வும், புறவாழ்வும் அமையும்.*

***பொருள்:*** *செய்யுளில், கருப்பொருள் இடங்களில் வரும் இயற்பெயர்ச் சொற்கள், தோற்றத்தில் உயர்திணைக்கு உரியது போல் தோன்றினும், அவை உயர்திணையைக் குறிக்காது. ஏனெனில், அவை, அந்நிலத்திற்குரிய அஃறிணைப் பொருட்களைப் பற்றியதாகவே உள்ளன.*

***எடுத்துக்காட்டு:***

*'கொடுவரி வென்ற வருத்தமொடு நெடுவரை மருங்கின் துஞ்சும் யானை'. (குறிஞ்சிக்கலி–13.) (நன்றி: பாவலரேறு ச.பாலசுந்தரம்)*

*இதில் உயர்திணைப் பண்புகளை ஏற்றிக் கூறிடினும், அஃறிணையையே சுட்டப்படுகின்றது.*

### *எய்தியது விலக்கல்*

***194. திணையொடு பழகிய பெயரலங் கடையே.***

***பொருள்:*** *திணையுடன் வழங்கும் பெயராக இல்லாமல் இருந் தால், உயர்திணையைச் சுட்டாது.*

*திணையுடன் வழங்கும் பெயராக இருந்தால், உயர்திணையைச் சுட்டும்.*

***எடுத்துக்காட்டு:***

*காளை வந்தான்.*
*அன்னம் வந்தாள்.*

*காளை, விடலை, யானை, சிங்கம், மயில், அன்னம் போன்றவை அஃறிணை மற்றும் உயர்திணை ஆகிய இரண்டுக்கும் வரும்.*

# 6. வினையியல்

*வினையியல் = வினை + இயல். வினைச்சொல்லின் இயல்பு.*

**வினைச்சொல் இன்னதென்பது**

***195.*** ***வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது***
***நினையுங் காலைக் காலமொடு தோன்றும்.***

***பொருள்:*** *வினைச்சொல் என்பது, வேற்றுமை உருபுகளான ஐ, ஒடு, கு, இன், அது, கண் ஆகியவற்றை ஏற்காது. அதாவது, அவற்றுடன் சேர்ந்து வராது. ஆராய்ந்து பார்க்கையில், காலத்துடன் தோன்றும், அதாவது, வினைச்சொல் காலத்தை உணர்த்தும்.*

***விளக்கம்:*** *உண்டானை = உண்டான் + ஐ. 'உண்டான்' எனும் சொல்லுடன், 'ஐ' எனும் வேற்றுமை உருபு, சேர்ந்து வருகின்றது. இங்கு, 'உண்டான்' என்பது வினையாகுபெயர்ச்சொல், வினைச் சொல் அல்ல.*

***எடுத்துக்காட்டு:***

*'அவன் உணவு உண்டான்'. இங்கு, 'உண்டான்' எனும் வினைச்சொல், இறந்த காலத்தை உணர்த்துகின்றது.*

**மூன்று காலங்கள்**

***196.*** ***காலந் தாமே மூன்றென மொழிப.***

***பொருள்:*** *காலங்கள் மூன்று என சொல்லுவர், அறிஞர்.*

*விளக்கம்:* இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என, காலங்கள் மூன்று.

### காலத்தின் – பெயர் – முறை – தொகை

**197. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா**
**அம்முக் காலமும் குறிப்பொடும் கொள்ளும்**
**மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே.**

*பொருள்:* இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் எனும் முக்காலங்களும், தாமாகவும், குறிப்புவினைச்சொல் தோன்றுகின்ற விதங்களைப் பொறுத்தும், தம்நிலையைக் கொள்ளுகின்றன.

*எடுத்துக்காட்டு:*

உண்டான், உண்கிறான், உண்பான் – இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம்.

உடையன் வந்தான், உடையன் வருகிறான், உடையன் வருவான் – இவற்றில், ‘உடைமையைக் கொண்டவன்’ எனும் பொருள் உடைய, ‘உடையன்’ எனும் குறிப்புவினைச்சொல், அதனை அடுத்து வரும் வினைச்சொல்லைப் பொறுத்து, இறந்த காலம்,நிகழ் காலம், எதிர் காலம் ஆகியவற்றைக் கொள்கின்றது.

### வினைச்சொற்கள் இவையெனல்

**198. குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்**
**காலமொடு வரூஉம் வினைச்சொல் எல்லாம்**
**உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்**
**ஆயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையும்**
**அம்மூ வுருபின தோன்ற லாறே.**

*பொருள்:* ஒழுங்கு முறையாக, குறிப்பிலும், வினையிலும், காலத்துடன் தோன்றும் எல்லா வினைச்சொற்களும், உயர்திணைக்கு உடையவை என்றும், அஃறிணைக்கு உடையவை என்றும், அந்த இரண்டு திணைகளுக்கும் சமமாக உடையவை என்றும், அந்த மூன்று வடிவங்களில் தோன்றும் தன்மையை உடையன.

*உயர்திணைத் தன்மைப் பன்மை வினைமுற்று*

*199. அவைதாம்,*
*அம்ஆம் எம்ஏம் என்னும் கிளவியும்*
*உம்மொடு வரூஉம் கடதற என்னும்*
*அந்நாற் கிளவியோ டாயெண் கிளவியும்*
*பன்மை யுரைக்குந் தன்மைச் சொல்லே.*

**பொருள்:** அவை யாவை என்றால், அம், ஆம், எம், ஏம் ஆகியவற்றை இறுதியில் கொண்ட சொற்களும், கும், டும், தும், றும் ஆகியவற்றை இறுதியில் கொண்ட சொற்களுடன் சேர்ந்து, அந்த எட்டுவகை சொற்களும், உயர்திணைப் பன்மை உரைக்கும் தன்மைச் சொற்களாம்.

**எடுத்துக்காட்டு:**

அம் – *யாம் உண்டனம், யாம் உண்கிறம், யாம் உண்குவம். (உண்டம், உண்கின்றம், உண்பம்).*

ஆம் – *யாம் உண்டாம், யாம் உண்கிறாம், யாம் உண்பாம். (உண்டனாம், உண்கின்றாம், உண்குவாம்).*

எம் – *யாம் உண்டனெம், யாம் உண்கிறெம், யாம் உண்குவெம். (உண்டெம், உண்கின்றெம், உண்பெம்).*

ஏம் – *யாம் உண்டேம், யாம் உண்கிறேம், யாம் உண்பேம். (உண்டனேம், உண்கின்றேம், உண்குவேம்).*

கும் – *யாம் உண்கும்.*

டும் – *யாம் உண்டும்.*

தும் – *யாம் வருதும்.*

றும் – *யாம் பதறும்.*

*தன்மை ஒருமை வினைமுற்று*

*200. கடதற என்னும்*
*அந்நான் கூர்ந்த குன்றிய லுகரமோடு*
*என்ஏன் அல்லென வரூஉம் ஏழும்*
*தன்வினை உரைக்குந் தன்மைச் சொல்லே.*

*பொருள்:* 'க்', 'ட்', 'த்', 'ற்' ஆகிய நான்கு எழுத்துகளும், குற்றியலு கரமுடன் சேர்ந்து, 'கு', 'டு', 'து', 'று' என்று ஆனதுடன், 'என்', 'ஏன்', 'அல்' ஆகிய மூன்றும் சேர்ந்து, மொத்தம் ஏழினையும், இறுதியில் கொண்டு வரும் சொற்கள், ஒருமை உணர்த்தும் தன்மைச்சொற்களாம்.

*எடுத்துக்காட்டு:*
கு – தான் உண்கு.
டு – தான் உண்டு.
து – தான் வருது.
று – தான் சென்று.

என் – தான் உண்டனென், தான் உண்கிறென், தான் உண்குவென். (உண்டென், உண்கின்றென், உண்பென்).

ஏன் – தான் உண்டேன், தான் உண்கிறேன், தான் உண்பேன். (உண்டனேன், உண்கின்றேன், உண்குவேன்)

அல் / அன் – தான் உண்பல், தான் தின்பல் / தான் உண்பன், தான் தின்பன்.

### 'செய்கு' என்னுஞ் சொல், வினைகொண்டு முடிதல்

**201.** அவற்றுள்,
செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியா வென்மனார் புலவர்.

*பொருள்:* மேற்கூறியவற்றுள், 'செய்கு' எனும் சொல், வினைச் சொல்லுடன் முடிந்தாலும், அதன் இயல்பு மாறாது என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.

*விளக்கம்:* இது பன்மைத் தன்மைக்கும், ஒருமைத் தன்மைக்கும் பொருந்தும்.

*எடுத்துக்காட்டு:*

யாம் செய்கும் வந்தேம். தான் செய்கு வந்தேன்.
செய்கும் யாம். செய்கு யான்.

### உயர்திணைப் படர்க்கை ஒருமை வினைமுற்று

**202.** அன்ஆன் அள்ஆள் என்னும் நான்கும்
ஒருவர் மருங்கின் படர்க்கைச் சொல்லே.

*பொருள்:* 'அன்', 'ஆன்', 'அள்', 'ஆள்' ஆகிய நான்கை இறுதியாகக் கொண்ட சொற்கள், ஒருமைப்பாலை (ஆண்பால், பெண்பால்) உணர்த்தும் படர்க்கைச் சொற்களாம்.

*எடுத்துக்காட்டு:*

*அன் – அவன் உண்டனன், அவன் உண்கிறன், அவன் உண்குவன் (உண்கின்றன், உண்பன்).*

*ஆன் – அவன் உண்டான், அவன் உண்கிறான், அவன் உண்பான் (உண்கின்றான், உண்குவான், உண்ணுவான்).*

*அள் – அவள் உண்டனள், அவள் உண்கிறள், உண்குவள் (உண்கின்றள், உண்பள்).*

*ஆள் – அவள் உண்டாள், அவள் உண்கிறாள், அவள் உண்பாள் (உண்கின்றாள்,உண்குவாள், உண்ணுவாள்).*

### உயர்திணைப் படர்க்கைப் பன்மை வினைமுற்று

**203. அர்ஆர் பஎன வரூஉம் மூன்றும்**
**பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே.**

*பொருள்:* 'அர்', 'ஆர்', 'ப' ஆகிய மூன்றை இறுதியாகக் கொண்ட சொற்கள், பலர்பாலை உணர்த்தும் படர்க்கைச் சொற்களாம்.

*எடுத்துக்காட்டு:*

*அர் – அவர்கள் உண்டனர், அவர்கள் உண்கின்றனர், அவர்கள் உண்குவர் (உண்பர்).*

*ஆர் – அவர்கள் உண்டார், அவர்கள் உண்கின்றார், அவர்கள் உண்பார். (உண்குவார்)*

*ப – அவர்கள் உண்ப, அவர்கள் தின்ப.*

### மார் என்னுஞ் சொல் உயர்திணைப் படர்க்கைப் பன்மை வினைக்கு உரித்தாதல்

**204. மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை**
**காலக் கிளவியொடு முடியும் என்ப.**

*பொருள்:* 'மார்' என்பதை இறுதியாய்க் கொண்ட (பெயர்ச்) சொல்லும், பலர்பாலை உணர்த்தும் படர்க்கை வினைச்சொற்களைக் கொண்டு முடியும் என்பர், அறிஞர். அதாவது, 'அர்', 'ஆர்', 'ப' ஆகிய மூன்றை இறுதியாகக் கொண்ட வினைச்சொற்களுடன்

முடியும்.

*எடுத்துக்காட்டு:*

*தாய்மார் உண்டனர், தாய்மார் உண்கின்றனர், தாய்மார் உண்குவர் (உண்பர்).*

*தாய்மார் உண்டார், தாய்மார் உண்கின்றார், தாய்மார் உண்பார்.*

*தாய்மார் உண்ப, தாய்மார் தின்ப.*

### பன்மைப் பாலும் ஒருமைப் பாலும்

***205.** **பன்மையும் ஒருமையும் பாலறி வந்த***
***அந்நா லைந்தும் மூன்றுதலை யிட்ட***
***முன்னுறக் கிளந்த உயர்திணை யவ்வே.***

முன்னுறக் கிளந்த = முன்பு பிரித்துக் கூறிய.

**பொருள்:** பன்மைப்பாலும் ஒருமைப்பாலும் தோன்றும்படி வந்த, இருபத்து மூன்று இறுதியும்தான், முன்பு பிரித்துக் கூறிய உயர்திணைக்குரியன.

**விளக்கம்:** அம், ஆம், எம், ஏம், கும், டும், தும், றும், கு, டு, து, று, என், ஏன், அல், செய்கு, அன், ஆன், அள், ஆள், அர், ஆர், ப ஆகிய இருபத்து மூன்று இறுதிகளைக் கொண்ட வினைச்சொற்கள்தான் உயர்திணைக்குரியன.

### வினைமுற்றின் திரிபு

***206** **அவற்றுள்,***
***பன்மை உரைக்குந் தன்மைக் கிளவி***
***எண்ணியல் மருங்கின் திரிபவை உளவே.***

**பொருள்:** மேலே கூறியவற்றுள், பன்மை உரைக்கும் தன்மைச் சொற்களான எட்டினுள், பொருள் மாறுபவை உள்ளன.

**விளக்கம்:** தன்மைப் பன்மை உரைக்கும் வினைச்சொற்களின் எட்டு இறுதிகள், அம், ஆம், எம், ஏம், கும், டும், தும், றும் ஆகியன.

*எடுத்துக்காட்டு:*

'அம்', 'ஆம்' எனும் இறுதிகளைக் கொண்ட வினைச்சொற்கள், தன்னிலை பன்மை மட்டுமின்றி, முன்னிலையையும் சேர்த்துக்

குறிக்கும்.

*நாம் உண்டனம், நாம் உண்டாம். நீவிர் உண்டனம். நீவீர் உண்டாம்.*

'எம்', 'ஏம்' எனும் இறுதிகளைக் கொண்ட வினைச்சொற்கள், தன்னிலைப் பன்மை மட்டுமின்றி, படர்க்கையையும் சேர்த்துக் குறிக்கும்.

*நாம் உண்டனெம், நாம் உண்டேம். அவர்கள் உண்டனெம். அவர்கள் உண்டேம்.*

'கும்', 'டும்', 'தும்', 'றும்' எனும் இறுதிகளைக் கொண்ட வினைச்சொற்கள், தன்னிலைப் பன்மை மட்டுமின்றி, முன்னிலையையும் படர்க்கையையும் சேர்த்துக் குறிக்கும்.

*யாம் / நாம் உண்கும், நாம் உண்டும், நாம் வருதும், நாம் பதறும். நீர் உண்கும். அவர்கள் வருதும்.*

## யார் என்னும் குறிப்பு முற்று

**207. யாஅர் என்னும் வினாவின் கிளவி**
**அத்திணை மருங்கின் முப்பாற்கும் உரித்தே.**

**பொருள்:** 'யார்' என்னும் வினாச்சொல், உயர்திணையின் மூன்று பால்களுக்கும் உரியது.

**எடுத்துக்காட்டு:**

*யார் அவன்?, யார் அவள்?, யார் அவர்?.*

## ஆன், ஆள், ஆர் இவற்றினது ஆகாரம் ஓகாரமாகும் செய்யுளுள்ளே

**208. பாலறி மரபின் அம்மூ வீற்றும்**
**ஆஓ ஆகுஞ் செய்யு ளுள்ளே.**

**பொருள்:** பாலைத் தெரிவிக்கின்ற வழக்கமுடைய, அந்த மூன்று இறுதிகளின் 'ஆ', செய்யுளில் 'ஓ' ஆகும் .

**விளக்கம்:** பாலைத் தெரிவிக்கின்ற வழக்கமுடைய, அந்த மூன்று இறுதிகள், 'ஆன்', 'ஆள்', 'ஆர்'.

**எடுத்துக்காட்டு:**

‘வினவிநிற் றந்தான்’ என்பது, ‘வினவி நிற்றந்தோன்’ என வந்தது. *(அகம். 48)*

‘நகூஉப் பெயர்ந்தாள்’ என்பது, ‘நகூஉப் பெயர்ந்தோள்’ என வந்தது. *(அகம். 248)*

‘சென்றா ரன்பிலர்’ என்பது, ‘சென்றோ ரன்பிலர்’ என வந்தது. *(அகம். 31)*

### ஆய் என்பதுவும் ஓய் ஆகும் செய்யுளில்

***209. ஆய்என் கிளவியும் அவற்றொடு கொள்ளும்.***

***பொருள்:*** ‘ஆய்’ எனும் இறுதியைக் கொண்ட வினைச்சொல்லும், மேற்கூறியவை போல், ‘ஓய்’ என, செய்யுளில் ஆகும் .

***எடுத்துக்காட்டு:***

‘வந்தாய் மன்ற தண்கடற் சேர்ப்ப’ என்பது, ‘வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப’ என வந்தது. *(அகம். 80)*

### உயர்திணைக் குறிப்பு வினைமுற்றுச் சொற்கள்

***210. அதுச்சொல் வேற்றுமை உடைமை யானும்***
***கண்ணென் வேற்றுமை நிலத்தி னானும்***
***ஒப்பி னானும் பண்பி னானுமென்று***
***அப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும்***
***அன்மையின் இன்மையின் உண்மையின் வன்மையின்***
***அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும்***
***என்ன கிளவியுங் குறிப்பே காலம்.***

***பொருள்:*** அது எனும் சொல் வேற்றுமைப்படுத்தும் உடைமைச் சொற்களும், கண் எனும் சொல் வேற்றுமைப்படுத்தும், நிலத்தைப் பற்றிய சொற்களும், ஒப்புமைச்சொற்களும், பண்புச்சொற்களும், உயர்திணைப் பாலையும் காலத்தையும் குறிக்கும்.

அன்மைச்சொல், இன்மைச்சொல், உண்மைச்சொல், வன்மைச் சொல் மற்றும் அவை போன்ற சொற்களை, அடுத்து வரும் சொற்களே காலத்தைக் குறிக்கும்.

**எடுத்துக்காட்டு:**

*உடைமை:*

*உடையான், உடையாள், உடையார் (பால், இறந்தகாலம்)*
*உடையன், உடையள், உடையர் (பால், நிகழ்காலம்)*
*உடையவான், உடையவாள், உடையவார் (பால், எதிர்காலம்)*

*நிலம்:*

*குறிஞ்சியான், குறிஞ்சியாள், குறிஞ்சியார் (பால், இறந்தகாலம்)*
*குறிஞ்சியன், குறிஞ்சியள், குறிஞ்சியர் (பால், நிகழ்காலம்)*
*குறிஞ்சியவான், குறிஞ்சியவாள், குறிஞ்சியவார் (பால், எதிர்காலம்)*

*ஒப்புமை:*
*பொன்னன்னான், பொன்னன்னாள், பொன்னன்னார் (பால், இறந்தகாலம்)*
*பொன்னன்னன், பொன்னன்னள், பொன்னன்னர் (பால், நிகழ்காலம்)*
*பொன்னன்னுவன், பொன்னன்னுவள், பொன்னன்னுவர் (பால், எதிர்காலம்)*

*பண்பு:*

*கரியான், கரியாள், கரியார் (பால், இறந்தகாலம்)*
*கரியன், கரியள், கரியர் (பால், நிகழ்காலம்)*
*கரியவான், கரியவாள், கரியவார் (பால், எதிர்காலம்)*

*அன்மை:*

*அல்லன், அல்லள், அல்லர் (பால் உண்டு, காலம் இல்லை)*
*அல்லன் வந்தான், அல்லள் வருகிறாள், அல்லர் வருவார். (அடுத்து வந்த சொல் காலத்தைக் குறிக்கின்றது)*
*அல்லன், அல்லள், அல்லர் ஆகியவை எல்லாக் காலத்திற்கும் வரும் பொதுச்சொல். அல்லான், அல்லாள், அல்லார் என்று வந்து இறந்த காலத்தைக் குறிக்காது, எல்லாக் காலத்திற்கும் வரும். அல்லவான், அல்லவாள், அல்லவார் என வராது.*

*இன்மை:*

*இல்லன், இல்லள், இல்லர் (பால் உண்டு, காலம் இல்லை)*
*இல்லன் வந்தான், இல்லள் வருகிறாள், இல்லர் வருவார். (அடுத்து வந்த சொல் காலத்தைக் குறிக்கின்றது)*

*உண்மை:*

*உளன், உளள், உளர் (பால் உண்டு, காலம் இல்லை)*

*உளன் வந்தான், உளள் வருகிறாள், உளர் வருவார். (அடுத்து வந்த சொல் காலத்தைக் குறிக்கின்றது)*

*உள்ளன், உள்ளள், உள்ளர் என வந்தால், பொருண்மை மாறும்.*

*வன்மை:*

*வல்லன், வல்லள், வல்லர் (பால் உண்டு, காலம் இல்லை)*

*வல்லன் வந்தான், வல்லள் வருகிறாள், வல்லர் வருவார். (அடுத்து வந்த சொல் காலத்தைக் குறிக்கின்றது)*

**உயர்திணைக் குறிப்புடன் காலக்கிளவி**

***211.*** **பன்மையும் ஒருமையும் பாலறி வந்த**
**அன்ன மரபின் குறிப்பொடு வரூஉங்**
**காலக் கிளவி உயர்திணை மருங்கின்**
**மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.**

*பொருள்:* பலர்பாலையும், ஒருவர்பாலையும் தெரிவிக்கின்ற வகையில் வந்த, 'வல்லர், வல்லன், வல்லள்', போன்ற சொற்களுடன் வந்த, 'வந்தார், வந்தான், வந்தாள்', போன்ற காலத்தைக் குறிக்கும் சொற்கள், உயர்திணையில், மேலே கூறிய 'உடையான், குறிஞ்சியன், கரியவான்', போன்ற (பாலையும் காலத்தையும் குறிக்கும்) சொற்களோடு வரும்போதும் மாறாது.

*எடுத்துக்காட்டு:*

*வல்லன் வந்தான்.*

*உடையான் வந்தான். குறிஞ்சியன் வந்தான். கரியவான் வந்தான்.*

**அஃறிணைப் பன்மைப் பாற்சொல்லை உணர்த்துதல்**

***212.*** **அஆ வஎன வரூஉம் இறுதி**
**அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை.**

*பொருள்:* 'அ', 'ஆ', 'வ' எனும் மூன்றுவகையான இறுதியைக் கொண்ட சொற்களே, அஃறிணைப் பலவின்பாலைக் குறிக்கும்.

*எடுத்துக்காட்டு:*

*அ – உண்டன, உண்கின்றன, உண்பன.*
*ஆ – உண்ணா, உண்கின்றா, உண்பா.*
*வ – உண்வ.*

### அஃறிணை ஒருமைப் பாலுக்குரிய சொல்லை உணர்த்துதல்

**213. ஒன்றன் படர்க்கை தடற ஊர்ந்த**
**குன்றிய லுகரத் திறுதி யாகும்.**

*பொருள்:* 'த்', 'ட்', 'ற்', ஆகியவற்றுடன் சேர்ந்த குற்றியலுகர (து, டு, று) இறுதியைக் கொண்ட சொற்கள், ஒன்றன்பாலைக் குறிக்கும்.

*எடுத்துக்காட்டு:*
*து – உண்டது, உண்கிறது, உண்ணுமது. (இறந்தகாலம், நிகழ் காலம், எதிர் காலம்).*
*டு – உண்டு. கண்டு. (இறந்தகாலம்)*
*று – சென்று. தின்று. (இறந்தகாலம்)*

### அஃறிணைப் பன்மை – ஒருமை உணர்த்தும் இறுதிகள்

**214. பன்மையும் ஒருமையும் பாலறி வந்த**
**அம்மூ விரண்டும் அஃறிணை யவ்வே.**

*பொருள்:* பலவின் பாலையும், ஒன்றன் பாலையும் தெரிவிக்க வந்த, 'அ, ஆ, வ, து, டு, று', ஆகிய ஆறு இறுதிகளும், அஃறிணைக்கே உரியன.

### எவன் – அஃறிணை இருபாற்கும் உரித்தாதல்

**215. அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்**
**ஒக்கும் என்ப எவன் என் வினாவே.**

எவன் = எங்கு

*பொருள்:* அஃறிணையில், 'எவன்' எனும் வினாச்சொல், பலவின் பால் மற்றும் ஒன்றன்பால் சொற்களுக்கு, சமமாய் பொருந்தும்.

*எடுத்துக்காட்டு:*

*எவன் உண்டன?*
*எவன் உண்டது?*

***அஃறிணை வினைக்குறிப்பை உணர்த்துதல்***

***216.** இன்றில உடைய என்னுங் கிளவியும்*
*அன்றுடைத் தல்ல என்னுங் கிளவியும்*
*பண்புகொள் கிளவியும் உளஎன் கிளவியும்*
*பண்பின் ஆகிய சினைமுதற் கிளவியும்*
*ஒப்பொடு வரூஉங் கிளவியொடு தொகைஇ*
*அப்பாற் பத்துங் குறிப்பொடு கொள்ளும்*
*பன்மையும் ஒருமையும் பாலறி வந்த*
*அன்ன மரபின் குறிப்பொடு வரூஉங்*
*காலக் கிளவி அஃறிணை மருங்கின்*
*மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.*

*பொருள்:* இன்று, இல, உடைய, அன்று, உடைத்து, அல்ல, கரி, உள, குறுங்கண்மாடு, பொன்னன்ன எனும் சொல்லொடு சேர்த்து, அந்த பத்து வகையான குறிப்புகளையும் அடுத்து வரும், பலவின்பாலையும், ஒன்றன்பாலையும் வழக்கமாகக் குறிப்பதுடன், காலத்தையும் குறிக்கும் சொற்கள், அஃறிணையில், மேலே கூறிய ‘எவன்’ எனும் சொல்லுடன் மாறுபடாது.

*எடுத்துக்காட்டு:*

இன்று – கொம்பின்றி வந்தது. கொம்பின்றி வந்தன.
இல – கொம்பில போகிறது. கொம்பில போகின்றன.
உடைய – மணியுடைய தின்னுது. மணியுடைய தின்கின்றன.
அன்று – வந்தது நரியன்று. வந்தன மாடன்று.
உடைத்து – வாலுடைத்து சென்றது. வாலுடைத்து சென்றன.
அல்ல – மேய்ந்தது அல்ல (இம்மாடு). மேய்ந்தன அல்ல (இம்மாடுகள்).
கரி – கரி வந்தது. வெள்ளை வந்தன.
உள – பட்டியில் உள வருகின்றது. பட்டியில் உள வருகின்றன.
குறுங்கண்மாடு – குறுங்கண்மாடு உண்டு. குறுங்கண்மாடு உண்ணா.
பொன்னன்ன – பொன்னன்ன வந்தது. பொன்னன்ன வந்தன.
எவன் வந்தது / வந்தன / போகிறது / போகின்றன / தின்னுது

/ தின்கின்றன / சென்றது / சென்றன / மேய்ந்தது / மேய்ந்தன / வருகின்றது / வருகின்றன / உண்டு / உண்ணா என வரும்.

### விரவுவினை பெயர் முறை தொகை

*217. முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யுஞ் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆயெண் கிளவியும்
பிரிபுவேறு படூஉஞ் செய்திய வாகி
இருதிணைச் சொற்குமோ ரன்ன உரிமைய.*

**பொருள்:** முன்னிலை, கட்டளை, வினையெச்சச் சொல், இல்லை எனச் சொல்லுதல், 'வேறு' எனும் சொல், 'செய்ம்மன', 'செய்யும்', 'செய்த', என்று முறையே எதிர்காலம், நிகழ்காலம், இறந்தகாலம் குறிக்கும் சொற்கள், ஆகிய எட்டு சொற்களும், இரண்டு திணைகளுக்கும் சம உரிமையுடன், அவற்றிற்குரிய வெவ்வேறு பொருண்மையைத் தருவதாய், உள்ளன.

### முன்னிலை ஒருமை வினைமுற்று

*218. அவற்றுள்,
முன்னிலைக் கிளவி
இஐ ஆயென வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்.*

**பொருள்:** மேற்கூறியவற்றுள், முன்னிலைச்சொற்கள், இறுதியில், 'இ', 'ஐ', 'ஆய்' என மூன்று எழுத்துகளைக் கொண்டு, ஒருவர் பாலுக்கும், ஒன்றன்பாலுக்கும், ஒன்று போல வரும்.

எடுத்துக்காட்டு:

இ – தின்னி, உண்ணி.
ஐ – தின்னை, உண்ணை, உண்டனை, உண்கின்றனை, உண்குவை.
ஆய் – தின்றாய், உண்டாய், உண்டாய், உண்கின்றாய், உண்பாய்.

### முன்னிலைப் பன்மை வினைமுற்றுச் சொற்களை உணர்த்துதல்

*219. இர்ஈர் மின்னென வரூஉம் மூன்றும்*

பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய என்மனார் புலவர்.

***பொருள்:*** *முன்னிலைச்சொற்கள், 'இர்', 'ஈர்', 'மின்' ஆகிய இறுதிகளைக் கொண்டு, பலர்பாலுக்கும், பலவின்பாலுக்கும், ஒத்த சொற்களாய் வரும், என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.*

***எடுத்துக்காட்டு:***

*இர் – உண்டிர், உண்கின்றிர், உண்பிர்.*

*ஈர் – உண்டீர், உண்கின்றீர், உண்பீர்.*

*மின் – உண்மின், கேள்மின், சொல்மின், காண்மின், செய்மின்.*

## ஒழிந்த ஏனைய வினைகள்

***220.*** **எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி**
**ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே.**

***பொருள்:*** *மேற்கூறிய எட்டு வகையான சொற்களுள், தனி யாய் விரித்துக் கூறப்படாத மீதமுள்ள சொற்கள், இரண்டு திணைகளுடனும் சேர்ந்து, ஐந்து பாலுக்கும் வரும்.*

***விளக்கம்:*** *இல்லை எனச் சொல்லுதல், 'வேறு' எனும் சொல், 'செய்ம்மன' என்பன, முன் நூற்பாக்களிலும் வரும் நூற்பாக்களிலும், தனியாய் விரித்துக் கூறப்படாத மீதமுள்ள சொற்கள்.*

***எடுத்துக்காட்டு:***

*செய்ம்மன = செய்ய விரும்புபவை. கொய்ம்மன = கொய்ய விரும்புவவை. சொன்ம்மன = சொல்ல விரும்புபவை. கொண்ம்மன = கொள்ள விரும்புபவை.*

*இல்லை – நானில்லை, யாமில்லை, நீயில்லை, அவனில்லை, அவளில்லை, அவரில்லை, அதுவில்லை, அவையில்லை.*

*வேறு – யான் வேறு, யாம்வேறு, நீவேறு, அவன்வேறு, அவள்வேறு, அவர்வேறு, அதுவேறு, அவைவேறு.*

*செய்ம்மன – யான் செய்ம்மன, யாம் செய்ம்மன, நீ செய்ம்மன, அவன் செய்ம்மன, அவள் செய்ம்மன, அவர் செய்ம்மன, அது செய்ம்மன, அவை செய்ம்மன.*

### தன்மையிலும் முன்னிலையிலும் வியங்கோள் வாராது

**221.** *அவற்றுள்,*
***முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடும்***
***மன்னா தாகும் வியங்கோட் கிளவி.***

**பொருள்:** மேற்கூறியவற்றுள், கட்டளைச்சொல், முன்னிலை தன்மை ஆகிய இரண்டு இடங்களிலும், சேராது. மற்ற இடங்களில் சேரும்.

**எடுத்துக்காட்டு:**
'நீ செல்க', 'நீவிர் செல்க' என்பதைவிட, 'செல்க' என்பதே இயல்பு.
'யான் செல்க', 'யாம் செல்க' என வராது.
அவன் செல்க, அவள் வருக, அவர் அமர்க, அது போக, அவை வருக.

### செய்யும் என்னும் முற்று, பொருந்தாத இடம்

**222.** ***பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை***
***அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்***
***செய்யு மென்னுங் கிளவியொடு கொள்ளா.***

**பொருள்:** உயர்திணைப் பன்மை, முன்னிலை, தன்மை ஆகிய மூன்று இடங்களில், நிகழ்காலத்துப் பொருண்மையில், 'செய்யும்' எனும் சொல் வராது.

**எடுத்துக்காட்டு:**
'அவர் செய்யும்', 'நீ செய்யும்', 'நீவிர் செய்யும்', 'யான் செய்யும்', 'யாம் செய்யும்' என வராது.
ஆனால், ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால் ஆகிய இடங்களில், நிகழ்காலத்துப் பொருண்மையில், 'செய்யும்' எனும் சொல் வரும்.

**எடுத்துக்காட்டு:**

'அவன் செய்யும்', 'அவள் உண்ணும்', 'அது தின்னும்', 'அவை செய்யும்'.

**வினையெச்சங்களுக்குரிய வாய்பாடு**

***223.*** ***செய்து செய்யூச் செய்பு செய்தெனச்***
***செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென***
***அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி.***

***பொருள்:*** *செய்து, செய்யூ, செய்பு, செய்த, செய்யியர், செய்–யிய, செயின், செயற்கு ஆகிய ஒன்பது வகையும் வினையெச்சச் சொற்களாகும்.*

*எடுத்துக்காட்டு:*

*செய்து – அவன் தொழில் செய்து வந்தான்.*
*செய்யூ – அவர் வணிகம் செய்யூ நின்றான். (செய்யூ = செய்யாமல்)*
*செய்பு – அவள் கவிதையைச் செய்பு வந்தாள். (செய்பு = சிந்தனையில் செய்து)*
*செய்த – அவன் செய்த காரியம் தவறு.*
*செய்யியர் – செய்யியர் சேவைகள் பல உள்ளன. (செய்யியர் = செய்யும் இயல்புடையவர் / செய்யும் இயல்புடைய)*
*செய்யிய – செய்யிய செய். (செய்யிய = செய்யும் இயல்புடையவை)*
*செயின் – வினை செயின், விளைவு உண்டு. (செயின் = செய்தால்)*
*செய – வினை செய முயன்றான். (செய = செய்ய)*
*செயற்கு – கொலை செயற்கு மறுத்தான். (செயற்கு = செய்வதற்கு)*

**இதுவுமது**

***224.*** ***பின்முன் கால்கடை வழியிடத் தென்னும்***
***அன்ன மரபிற் காலங் கண்ணிய***
***என்ன கிளவியும் அவற்றியல் பினவே.***

***பொருள்:*** *பின், முன், கால், கடை, வழி, இடம் என்பவையும், அத்தகைய வழக்கத்தையுடைய, காலத்துடன் பிணைந்த, எல்லாச்*

சொற்களும், வினையெச்ச இயல்புடையனவே.

**எடுத்துக்காட்டு:**

பின் – உண்டப்பின் வந்தான்.
முன் – உறங்கும் முன் போனான்.
கால் – அவன் வந்தக்கால், இவன் போனான்.
கடை – அவள் சென்றக்கடை, இவன் போனான்.
வழி – அது வருவழி, இது வரும்.
இடம் – அவை வரும் இடம், இவை வராது.
'பிறகு', 'முன்பு', 'பொழுது', 'போது' போன்றவைகளும் வினையெச்சங்களே.

### மூன்றெச்சத்திற்கும் முடிபு கூறுதல்

**225. அவற்றுள்,**
**முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின.**

**பொருள்:** மேற்குறியவற்றுள், முதலில் உள்ள மூன்றும், வினை செய்தவரைக் கொண்டு முடியும்.

**விளக்கம்:** 'செய்து', 'செய்யூ', 'செய்பு', ஆகிய மூன்றும் வினைசெய்தவரைக் கொண்டு முடியும்.

**எடுத்துக்காட்டு:**

செய்து – தொழில் செய்து வந்தான், அவன்.
செய்யூ – வணிகம் செய்யூ நின்றார், அவர். (செய்யூ = செய்யாமல்)
செய்பு – கவிதையைச் செய்பு வந்தாள், அவள். (செய்பு = சிந்தனையில் செய்து?)

### மூன்றெச்சத்திற்கும் முடிபு வேற்றுமை

**226. அம்முக் கிளவியும் சினைவினை தோன்றின்**
**சினையொடு முடியா முதலொடு முடியினும்**
**வினையோ ரனைய வென்மனார் புலவர்.**

**பொருள்:** அந்த மூன்று சொற்களும், உடல் உறுப்பின் செயலுடன் தோன்றி, சினையொடு முடியாமல், சினையின் முதலுடன் முடிந்தாலும், விளையும் பொருண்மை ஒன்றுதான் என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.

*எடுத்துக்காட்டு:*

*காலிற்று வீழ்ந்தது. காலிற்று வீழ்ந்தான்.*
*காலிறா வீழ்ந்தது. காலிறா வீழ்ந்தான்.*
*காலிறுபு வீழ்ந்தது. காலிறுபு வீழ்ந்தான்.*

**ஒழிந்த வினையெச்சங்கள் இருவினை கொண்டு முடியும்**

***227. ஏனை எச்சம் வினைமுத லானும்***
***ஆன்வந் தியையும் வினைநிலை யானுந்***
***தாமியல் மருங்கின் முடியும் என்ப.***

***பொருள்:*** பிற வினையெச்சங்கள், வினைசெய்தவரைக் கொண் டும், 'ஆன்' உடன் வந்து சேர்ந்த வினைச்சொல்லைக் கொண்டும், தம் இயல்பின் இடத்தில் முடியும்.

***விளக்கம்:*** பிற வினையெச்சங்களான *'செய்த', 'செய்யியர்', 'செய்யிய', 'செயின்', 'செயற்கு',* வினைசெய்தவரைக் கொண்டு முடியும்.

*'பின்', 'முன்', 'கால்', 'கடை', 'வழி', 'இடம்'* ஆகிய மற்ற வினையெச்சங்கள், *'ஆல்'* வந்து சேர்ந்த பின் வினைச்சொல்லைக் கொண்டு முடியும்.

*எடுத்துக்காட்டு:*

வினைசெய்தவரைக் கொண்டு முடிதல்*:*

செய்த – செய்த அதை நிறுத்தினான், அவன்.
செய்யியர் – செய்யியர் நினைத்தார், அவர்.
செய்யிய – செய்யிய முடித்தாள், அவள்.
செயற்கு – சேவை செயற்கு வந்தான், அவன்.

*'ஆல்'* உடன் வினைச்சொல்லைக் கொண்டு முடிதல்*:*

*பின் – என் பின்னால் வருவான்.*
*முன் – அவள் முன்னால் போனாள்.*
*கால் – அவள் வந்த காலால், இவன் வருகிறான்.*
*கடை – அதன் கடையால், இவை வீழும்.*
*வழி – வழியால் நன்மை வந்தது.*
*இடம் – அது இவ்விடத்தால் வருவது.*

### வினையெச்சங்கள் அடுக்கி முடிதல்

*228. பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி*
*சொன்முறை முடியாது அடுக்குந வரினும்*
*முன்னது முடிய முடியுமன் பொருளே.*

*பொருள்:* பலமுறை, வினையெச்சச் சொற்கள், சொல் அமைப்பில் முடியாமல், தொடர்ந்து வந்தாலும், கடைசியாக வரும் வினைசொல்லைக் கொண்டு, பொருண்மை, மனத்தில் முழுமை பெறும்.

*எடுத்துக்காட்டு:*

விவசாயி எழுந்து, உழுது, உழன்று, வளர்த்து, இழந்து மடிந்து போனான்.

### செய்யும், செய்த என்னும் இரண்டு பெயரெச்சத்திற்கும் முடிபு கூறுதல்

*229. நிலனும் பொருளும் காலமும் கருவியும்*
*வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட*
*அவ்வறு பொருட்குமோ ரன்ன உரிமைய*
*செய்யுஞ் செய்த என்னுஞ் சொல்லே.*

*பொருள்:* நிலம், பொருள், காலம், கருவி, வினைசெய்பவர், வினைச்சொல் உட்பட அந்த ஆறு பொருண்மைக்கும், 'செய்யும்', 'செய்த' எனும் சொற்கள் சமமான உரிமையுடையவை.

*எடுத்துக்காட்டு:*

நிலம் – அவன் வாழும் குறிஞ்சி. அவன் வாழ்ந்த குறிஞ்சி.
பொருள் – அவன் நெய்யும் ஆடை. அவன் நெய்த ஆடை.
காலம் – அவள் கொய்யும் நேரம். அவள் கொய்த நேரம்.
கருவி – அவன் எறியுங் கல். அவன் எறிந்த கல்.
வினைசெய்பவர் – உழும் கந்தன். உழுத கந்தன்.
வினை – உண்ணும் செயல். உண்ட செயல்.

### செய்யும் என்பதற்கு வேறு முடிபு

*230. அவற்றொடு வருவழிச் செய்யும்என் கிளவி*
*முதற்கண் வரைந்த மூவீற்றும் உரித்தே.*

*பொருள்:* நிலம், பொருள், காலம், கருவி, வினைசெய்பவர், வினைச்சொல் ஆகியவற்றுடன், 'செய்யும்' எனும் சொல், முதலில் கூறப்பட்ட, பலர்பால், தன்னிலை, முன்னிலை ஆகிய மூன்று இடங்களுக்கும் உரியது.

**எடுத்துக்காட்டு:**

*நிலம் – யான் வாழும் குறிஞ்சி. (தன்னிலை)*
*பொருள் – யாம் நெய்யும் ஆடை. (தன்னிலை)*
*காலம் – நீ கொய்யும் நேரம். (முன்னிலை)*
*கருவி – நீவிர் எறியுங் கல். (முன்னிலை)*
*வினைசெய்பவர் – உழும் அவர். (பலர்பால்)*
*வினை – அவர்கள் உண்ணும் செயல். (பலர்பால்)*

### பெயரெச்சத்திற்கும் வினையெச்சத்திற்கும் சிறப்பு விதி

**231. பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்**
**எதிர்மறுத்து மொழியினும் பொருள்நிலை திரியா.**

*பொருள்:* பெயரெச்சச்சொல்லும், வினையெச்சச்சொல்லும் எதிர் மறையாய்க் கூறினாலும் பொருண்மை மாறாது.

**எடுத்துக்காட்டு:**

*பெயரெச்சம்: உண்ணும் சாத்தன். உண்ணாச் சாத்தன்.*
*வினையெச்சம்: உண்டு வந்தான். உண்ணாது வந்தான்.*

***விளக்கம்:*** நேர்மறை மற்றும் எதிர்மறைக் கூற்றுகள் இரண்டிலும் குறிக்கும் நபர் ஒருவராகவே இருக்கிறார்.

### எச்சங்களின் முடிபு வேற்றுமை

**232. தத்தம் எச்சமொடு சிவணும் குறிப்பின்**
**எச்சொல் லாயினும் இடைநிலை வரையார்.**

*பொருள்:* பெயரெச்சம், வினையெச்சம் ஆகியவற்றைப் பற்றி வந்து சேரும் சொற்கள் எதுவாயினும், எல்லைகளை விதிக்க மாட்டார்கள், அறிஞர்கள்.

**எடுத்துக்காட்டு:**

*பெயரெச்சம்: உண்ணும் சின்ன நல்ல பேரூர் சாத்தன்.*

*வினையெச்சம்: உண்டு உருண்டு எழுந்து நடந்து கடந்து வந்தான்.*

### செய்யும் பெயரெச்சம் ஈற்றயல் கெடுதல்

**233.** *அவற்றுள்,*
**செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு**
**மெய்யொடுங் கெடுமே ஈற்றுமிசை உகரம்**
**அவ்விடன் அறிதல் என்மனார் புலவர்.**

**பொருள்:** மேற்கூறியவற்றுள், 'செய்யும்' என்னும் பெயரெச்சச் சொல்லின் இறுதிக்கு முன்னால் உள்ள உகரம், தான் சேர்ந்த மெய்யுடன் (உம்) கழியும் இடங்களை அறிதல் அவசியம், என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

*உண்ம் சாத்தன். (உண்ணும் சாத்தன்)*
*சொன்ம் சாந்தன். (சொல்லும் சாந்தன்)*
*தேன் என்ம் மொழி. (தேன் என்னும் மொழி)*

### இறந்தகால வினையெச்சம் எதிர்காலச் சொல்லொடும் இயைதல்

**234. செய்தென் எச்சத் திறந்த காலம்**
**எய்திடன் உடைத்தே வாராக் காலம்.**

**பொருள்:** இறந்த காலத்தைக் குறிக்கும்' 'செய்த' எனும் வினை யெச்சம், எதிர்காலத்தைக் குறிக்கும் இடமும் உள்ளது.

**எடுத்துக்காட்டு:**

*'சாதனை செய்த மனிதன் என பெயர் பெறுக'.*

### நிகழ்காலச் சொல் மற்ற இரு காலங்களையும் உணர்த்துதல்

**235.** முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை
**எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து**
**மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்.**

**பொருள்:** மூன்று காலங்களிலும் தோன்றும் இயல்புடை யனவற் றைக் குறிக்கும் எவ்வகையான சொல்லும், மூன்று காலத்திற்கும்

பொதுவாக வர, நிகழ்கால வடிவத்தில் தோன்ற வேண்டும்.

*எடுத்துக்காட்டு:*

சூரியன் கிழக்கில் உதிக்கும். சூரியன் மேற்கில் மறையும்.

**விரைவுப் பொருளில் எதிர்காலச் சொல்லையும் நிகழ்காலச் சொல்லையும் இறந்த காலத்திற் கூறுதல்**

**236. வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்**
**ஓராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி**
**இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்**
**விரைந்த பொருள என்மனார் புலவர்.**

*பொருள்:* எதிர்காலத்திற்கும், நிகழ்காலத்திற்கும் ஒன்றுபோல் வரும் வினைச்சொல், விரைவைக் குறிப்பதற்காக, இறந்தகாலத்தின் பொருண்மையுடன் வருகின்றது, என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.

*எடுத்துக்காட்டு:*

இன்னுமா சாப்பிடவில்லை?
இதோ சாப்பிட்டேன். (சாப்பிடப்போகிறேன் – எதிர்காலம்)
இன்னுமா சாப்பிடவில்லை?
இதோ சாப்பிட்டேன். (சாப்பிடுகின்றேன் – நிகழ்காலம்)

**சிறப்புக் கருதியுங் காலம் மயங்குதல்**

**237. மிக்கதன் மருங்கின் வினைச்சொல் சுட்டி**
**அப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி**
**செய்வ தில்வழி நிகழுங் காலத்து**
**மெய்பெறத் தோன்றும் பொருட்டா கும்மே.**

வினைமுதல் = கருத்தா. வினைக்கு முதலானவன். வினையாற்றுபவன்.

*பொருள்:* மிகையை அடுத்து வரும், வினைச்சொல்லின் பண்பைக் குறிக்கும் கருத்தாச் சொல், தனக்கு பொருந்தாத வகையில், நிகழ்காலத்து வினைச்சொல்லைக் கொண்டு, பொருண்மை பெறும்.

***எடுத்துக்காட்டு:***

*அயராது உழைப்பவன் வெற்றி பெறுகிறான்.*
*அயராது உழைத்தவன் வெற்றி பெறுகிறான்.*

***விளக்கம்:*** *செய்வதில்வழி = செய்வது இல் வழி. பொருந்தாத வகையில். 'அயராது உழைப்பவன் வெற்றி பெறுவான்' எனும், சாத்தியத்தைக் குறிக்கும் எதிர்கால வினைச்சொல்லுக்குப் பதில், 'அயராது உழைத்தவன் வெற்றி பெற்றான்' எனும் நிகழ்வைக் குறிக்கும் இறந்தகால வினைச்சொல்லுக்குப் பதில், 'அயராது உழைப்பவன் / உழைத்தவன் வெற்றி பெறுகிறான்' எனும் நிகழ்கால வினைச்சொல், உறுதியைக் காட்ட வருகின்றது.*

### *முற்றுச் சொல்லின் முறைமை உணர்த்துதல்*

***238. இதுசெயல் வேண்டும் என்னுங் கிளவி***
***இருவயின் நிலையும் பொருட்டா கும்மே***
***தன்பா லானும் பிறன்பா லானும்.***

***பொருள்:*** *'இதைச் செய்ய வேண்டும்', என்னும் சொற்றொடர், தன்மை மற்றும் பிறன்பால், ஆகிய இரண்டு இடங்களில் நின்று, பொருண்மை பெறும்.*

***எடுத்துக்காட்டு:***

*தன்மைப்பால்:*
*யான் படிக்க வேண்டும்.*
*யாம் நடிக்க வேண்டும்.*
*பிறன்பால்:*
*நீ இடிக்க வேண்டும்.*
*நீவிர் புடைக்க வேண்டும்.*
*அவன் குடிக்க வேண்டும்.*
*அவள் அடிக்க வேண்டும்.*
*அவர் துடிக்க வேண்டும்.*
*அது சிரிக்க வேண்டும்.*
*அவை அழ வேண்டும்.*

### *வினாச்சொல் எதிர்மறையாதல்*

***239. வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்***

**எதிர்மறுத் துணர்த்தற் குரிமையும் உடைத்தே.**

***பொருள்:*** *வலிமையாக வெளிப்படும் வினாவுடனான வினைச் சொல், கூறியதை மறுத்து உணர்த்தும் தன்மையையும் உடையது. கூறியதை ஒப்பும் தன்மையும் உடையது.*

***எடுத்துக்காட்டு:***

*நான் உன்னை அடித்து விட்டேனா? சும்மா தட்டினேன்.*
*அப்பா, செல்லத்தைத் திட்டுவேனோ? உரக்கப் பேசினேன்.*

## இயற்கையிலும் தெளிவிலும் காலம் மயங்குதல்

***240.*** **வாராக் காலத்து வினைச்சொற் கிளவி**
**இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும்**
**இயற்கையும் தெளிவும் கிளக்குங் காலை.**

***பொருள்:*** *இயல்பையும் உறுதியையும் வெளிப்படுத்தும் சமயத் தில், எதிர்கால வினைச்சொல்லுடன், இறந்தகாலம் மற்றும் நிகழ்கால வினைச்சொல், சிறப்புப் பொருளில் தோன்றும்.*

***எடுத்துக்காட்டு:***
*நீ இங்கே வந்தால் (எதிர்காலம்), மவனே செத்தாய்! (இறந்தகாலம்) (பகைமையின் உறுதி)*
*பாதுகாப்பின்றிச் செவ்வாய் கிரகம் சென்றால் (எதிர்காலம்), நீ சாகிறாய்! (நிகழ்காலம்) (இயற்கை)*

## செயப்படுபொருள் வினைமுதல்போல வருதல்

***241.*** **செயப்படு பொருளைச் செய்தது போலத்**
**தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே.**

***பொருள்:*** *செயப்படுபொருளை வினைசெய்தவர்போல, செயல் வெளிப்பட கூறுதலும், பாரம்பரிய வழக்கம்.*

***எடுத்துக்காட்டு:***

*வீடு மெழுகிற்று.*
*சோறு வடிந்தது.*
*குழம்பு ஆகியது.*

### இறந்த காலமும் எதிர்காலமும் மயங்கல்

**242. இறப்பே எதிர்வே ஆயிரு காலமும்**
**சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி.**

**பொருள்:** மயங்கும் சொல்வெளிப்பாட்டில், இறந்தகாலமும், எதிர்காலமும், சிறப்புப் பொருளில் தோன்றும்.

**எடுத்துக்காட்டு:**

*இளமையில் (இறந்தகாலம்) இங்குதான் (நிகழ்காலம்) விளையாடுவேன் (எதிர்காலம்).*

### நிகழ்காலம் மற்ற காலங்களொடு மயங்குதல்

**243. ஏனைக் காலமும் மயங்குதல் வரையார்.**

**பொருள்:** மற்ற காலமான, நிகழ்காலமும் மயங்குவதற்குத் தடை விதிப்பதில்லை, அறிஞர்.

**விளக்கம்:** நிகழ்காலம், எதிர்காலத்துடனும், இறந்தகாலத்துடனும் மயங்கும்.

**எடுத்துக்காட்டு:**

*கேள்வி:*

*உண்டாயா?*

*பதில்:*

*உம், உண்கிறேன் (நிகழ்காலம்) இரு. (எதிர்கால நிகழ்வைக் குறிப்பது)*

*உக்கும், இன்னொரு முறை (நிகழ்காலம்) உண்கிறேன். (ஒருமுறை முன்பே உண்டேன் எனும் இறந்தகால நிகழ்வைக் குறிப்பது).*

# 7. இடையியல்

*இடையியல் = இடை + இயல். இடைச்சொல்லின் இயல்பு. சொற்களின் இடையில் வரும் சொல்லின் தன்மை.*

**இடைச்சொல் இன்னதென்பது**

***244.*** **இடைஎனப் படுப பெயரொடும் வினையொடும்**
**நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே.**

***பொருள்:*** *இடைச்சொற்கள், பெயர்ச்சொல்லுடனும், வினைச் சொல்லுடனும், சேர்ந்து வருபவை. தனித்து வரும் இயல் பில்லாதவை.*

***எடுத்துக்காட்டு:***

*அது மன். (பெயர்ச்சொல்லுடன்)*
*வருகதில் அம்ம எம் சேரி சேர. (வினைச்சொல்லுடன்)*
*இடைச்சொற்களுக்கு பொருண்மை இருப்பினும், அவை, தனித்து வரும் வழக்கம் இல்லை.*

**இடைச்சொற்களின் பாகுபாட்டை உணர்த்துதல்**

***245.*** ***அவைதாம்,***
**புணரியல் நிலையிடைப் பொருணிலைக் குதவுநவும்**
**வினைசெயல் மருங்கின் காலமொடு வருநவும்**
**வேற்றுமைப் பொருள்வயின் உருபா குநவும்**
**அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்**

**இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்**
**தத்தம் குறிப்பின் பொருள்செய் குநவும்**
**ஒப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்று**
**அப்பண் பினவே நுவலுங் காலை.**

**பொருள்:** புணர்ச்சியில், நிலைமொழியான பெயர்ச்சொற்களை அடுத்து வந்து, பொருண்மை உறுதிபெற, தெளிவுபெற உதவுவனவும்; வினைச்சொல்லின் பக்கத்தில், காலத்தைக் குறிப்பதாய் வருபனவும்; வேற்றுமைப் பொருள் இடத்தில் உருபுகளாகியும்; பிற சொற்களை அசைத்து, தான் நிலையாய் நிற்கும், அசைநிலைச் சொற்களாகி வருவனவும்; தங்களுடைய அடிப்படையான பொருண்மையைக் கொண்டு, வரும் இடங்களுக்கு ஏற்றவாறு, பல பொருண்மைகளை உருவாக்குவனவும்; உவமை இல்லாமல், வேறு வகையாய், பொருண்மையை உணர்த்துவனவும் என, இப்பண்புகளைக் கொண்டவையே, இடைச்சொற்கள் எனலாம்.

**எடுத்துக்காட்டு:**

*பெயர்ச்சொல்லை அடுத்து:*
*கந்தனின் வேல்.*

*வினைச்சொல்லை அடுத்து:*
*வந்தனன், வருகிறாள், வருவார்.*

*வேற்றுமை உருபுகள்:*
*அவனை, அவளொடு, அவர்க்கு, கந்தனின், கந்தனது, கந்தன்கண், கந்தா.*

*அசைநிலை:*
*கேண்மியா*

*இசைநிறை:*
*'நீயேஎ கொண்டாய்'. 'ஓஒ பெரியன்'.*

*குறிப்பு:*
*நன்றே, தீதே.*

*ஒப்பில்லாமல்:*
*'மங்கலம் என்பதோர் ஊருண்டு போலும் மழநாட்டில்'.*

**இடைச்சொல்லின் இடமும் வேறுபாடும்**

***246.*** ***அவைதாம்,***
***முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்***
***தம்ஈறு திரிதலும் பிறிதவண் நிலையலும்***
***அன்னவை எல்லாம் உரிய என்ப.***

***பொருள்:*** *சொற்களுக்கு முன்பும், பின்பும், தம்முடைய இறுதி மாறியும், தம்மை அடுத்து வேறொன்றுடனும், வருவன எல்லாம் இடைச்சொல்லாவதற்கு உரியன என்பர், அறிஞர்.*

***எடுத்துக்காட்டு:***

*சொல்லுக்கு முன்:*
*கொன்னூர்.*

*சொல்லுக்குப் பின்:*
*அதுமன்.*

*தன் இறுதி மாறி:*
*அவனை.*

*தன்னை அடுத்து வேறொன்றுடன்:*
*'வருகதில் அம்ம எம் சேரி சேர'.*

**'மன்' என்னும் இடைச்சொல்**

***247.*** ***கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்று***
***அம்மூன் றென்ப மன்னைச் சொல்லே.***

***பொருள்:*** *மன் எனும் சொல், 'கழிவு', 'ஆக்கம்', 'ஒழியிசை' எனும் மூன்று பொருளில் வரும்.*

***விளக்கம்:*** *'மன்' எனும் சொல், 'மனம்' எனும் சொல்லிற்கு அடிப்படை. மனம் = மன் + அம். மன் = ம் + அன் / அல். கொண்டு மூடியதன் அலைபோன்ற இயக்கம். தலைக்குள் அலைபோன்ற இயக்கம்.*

*மனத்தால்தான், கழிவு எனும் இரக்கம், ஆக்கம் எனும் சிந்தனை, ஒழியிசை எனும் எண்ணத்தை நிலைநிறுத்தல் ஆகியவை நடைபெறுகின்றன.*

*'மன்' எனும் சொல், கதைசொல்லியின் நுணுக்கமாக, கதைக்கு*

ஏற்ற வெவ்வேறு எதிர்வினை கேட்பவரின் மனதில் நிகழ வேண்டி, கூறப்பட்டதாய் இருக்கலாம்.

**எடுத்துக்காட்டு:**

*கழிவு:*
*'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே'.*

*ஆக்கம்:*
*'பண்டு காடுமன், இனிக் கயல் பிறழும் வயலாயிற்று'.*

*ஒழியிசை:*
*'கூரியதோர் வாள்மன்'.*

## *'தில்' என்னும் இடைச்சொல்*

***248.** விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்று*
*அம்மூன் றென்ப தில்லைச் சொல்லே.*

**பொருள்:** 'தில்' எனும் சொல், 'விழைவு', 'காலம்', 'ஒழியிசை' எனும் மூன்று பொருளில் வரும்.

**விளக்கம்:** தில் = த் + இல். தேகம் இருத்தல். தேகத்தில். தேகத்தின் வீடு. தேகம் இன்மை.

**எடுத்துக்காட்டு:**

*விழைவு:*
*'வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப்*
*பெறுகதில் லம்ம யானே'.*

*காலம்:*
*'பெற்றாங் கறிகதில் லம்மவிவ் வூரே'.*

*ஒழியிசை:*
*'வருகதில் லம்மவெஞ் சேரி சேர'.*

## *'கொன்' என்னும் இடைச்சொல்*

***249.** அச்சம் பயமிலி காலம் பெருமையென்று*
*அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே.*

**பொருள்:** 'கொன்' எனும் சொல், 'அச்சம்', 'பயமின்மை',

'காலம்', 'பெருமை' எனும் நான்கு வகைப் பொருளில் வரும்.

**விளக்கம்:** 'கொன்' எனும் சொல், 'கொல்' எனும் சொல்லின் திரிபு. கொல் = க் + ஒல். மெய்யின் முழுமையான அதிர்வு / இயக்கம்.

அச்சத்தாலும் உடல் நடுங்கும், பயமற்ற வீரத்தாலும் உடல் அதிரும். உடலின் அதிர்வில் காலம் நிலைக்கும், மெய்யின் அதிர்வில் ஞானம் உணர்வாகும்.

**எடுத்துக்காட்டு:**

*அச்சம்:*
'கொன்முனை யிரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே'.

*பயமிலி:*
'கொன்னே வந்து
கொன்னே போயினார்'.

*காலம்:*
'கொன்வரல் வாடை நினதெனக் கொண்டேனோ'.

*பெருமை:*
'கொன்னூர் துஞ்சினு மியாந்துஞ் சலமே'.

### 'உம்' என்னும் இடைச்சொல்

**250. எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்று
அப்பா லெட்டே உம்மைச் சொல்லே.**

**பொருள்:** 'உம்' எனும் சொல், 'எச்சம்', 'சிறப்பு', 'ஐயம்', 'எதிர்மறை', 'முற்று', 'எண்', 'தெரிநிலை', 'ஆக்கம்' எனும் எட்டு வகைப் பொருளில் வரும்.

**விளக்கம்:** உம் = உ + ம். புறத்தில் கொண்டு மூடியது. புற இருப்பு.

அகத்துள் வராத புற இருப்பு, எனவே எச்சம். அகம், புற இருப்புடன் சேர்ந்து முழுமையாவது, ஞானம், சிறப்பு. அகத்துள் பொருந்துமா புற இருப்பு எனும் ஐயம். மறுப்பதால் விளையும் எதிர்மறை. ஒப்புக் கொள்வதால், முற்று. ஒன்றை அடுத்து

தொடர்புடைய மற்றொன்று வருவது, எண். ஏற்கனவே அறிந்த ஒன்றை ஒப்பும்போது, தெரிநிலை. புறத்தில் வெளிப்படுத்துவது, ஆக்கம்.

சொல் வழக்கிலும், 'உம்' எனும் சொல், தொனியாலும், குறுக்கத்தாலும், நீட்டத்தாலும், இடத்திற்கு ஏற்றாற்போல், மேற்கூறிய பொருட்களில் வருகின்றது.

'உம் அடுத்து' – எச்சம்.
அம் + உம் = ஓம் – சிறப்பு.
உ...ம் அப்படியா – ஐயம்.
உம் உம் இருக்காது – எதிர்மறை.
உம் – முற்று.
ஒன்று.. உம், இரண்டு..உம் – எண்.
உம் உம் தெரியும் எனக்கு – தெரிநிலை.
உம் சொல்லு – ஆக்கம்.

*எடுத்துக்காட்டு:*

*எச்சம்:*
'சாத்தனும் வந்தான்'.

*சிறப்பு:*
'தேவரே தின்னினும் வேம்பு கைக்கும்'.

*ஐயம்:*
'பத்தானும் எட்டானும்'.

*எதிர்மறை:*
'கொற்றன் வராமலும் இருப்பான்'.

*முற்று:*
'தமிழ்நாட்டு மூவரும் வந்தார்'.

*எண்:*
'நிலனும் நீரும், தீயும், வளியும்'.

*தெரிநிலை:*
'நன்றும் அன்று, தீதும் அன்று, இடைநிகர்த்தாயிற்று'.

*ஆக்கம்:*
'நெடியனும் வலியனும் ஆனான்'.

**ஓ என்னும் இடைச்சொல்**

***251.*** ***பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை***
***தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ***
***இருமூன் றென்ப ஓகா ரம்மே.***

***பொருள்:*** *'ஓ' எனும் சொல், 'பிரிநிலை', 'வினா', 'எதிர்மறை', 'ஒழியிசை', 'தெரிநிலை', 'சிறப்பு' எனும் ஆறு பொருளில் வரும்.*

***விளக்கம்:*** சொல் வழக்கிலும், 'ஓ' எனும் சொல், தொனியாலும், குறுக்கத்தாலும், நீட்டத்தாலும், இடத்திற்கு ஏற்றாற்போல், மேற்கூறிய பொருட்களில் வருகின்றது.

கதை கேட்பவரின் எதிர்வினைகளாய் இவை வருவன போலும்.
ஓ (அடுத்து) – பிரிநிலை.
அவனோ – வினா.
ஓ.., (மறுத்தல், இருக்காது) – எதிர்மறை.
செய்தான் ஓ.. – ஒழியிசை.
ஓ... (தெரியும்) – தெரிநிலை.
அவனுமோ – சிறப்பு.

***எடுத்துக்காட்டு:***

*பிரிநிலை:*
*'இவருள் அவனோ கொன்டான்'.*

*வினா:*
*'அவன் இல்லையோ'.*

*எதிர்மறை:*
*'யானோ கொண்டேன்'.*

*ஒழியிசை:*
*'கொளலோ கொண்டான்'.*

*தெரிநிலை:*
*'நன்றோ அன்று, தீதோ அன்று, இடைநிலை நிகர்த்ததாயிற்று'.*

*சிறப்பு:*
*'அவனுமோ வந்தான்'.*

‘ஏ’ என்னும் இடைச்சொல்

**252.** **தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே**
**ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே.**

**பொருள்:** ‘ஏ’ எனும் சொல், ‘தேற்றம்‘, ‘வினா’, ‘பிரிநிலை’, ‘எண்’, ‘இறுதி அசை’ எனும் ஐந்து பொருளில்தான் வரும்.

**எடுத்துக்காட்டு:**

*தேற்றம்:*
*அவனே வந்தான்.*

*வினா:*
*நீயே போனாய்?*

*பிரிநிலை:*

*அவர்களுள் அவனே செய்தவன்.*

*எண்:*
*ஒன்றே, இரண்டே..*
*நிலனே, நீரே, வளியே, தீயே, விண்ணே (உயர்வதால் எண்ணா?)*

*ஈற்றசை:*
*ஙஃகா னொற்றே யாடூஉ வறிசொல்.*

‘என’ என்னும் இடைச்சொல்

**253.** **வினையே குறிப்பே இசையே பண்பே**
**எண்ணே பெயரே டவ்வறு கிளவியும்**
**கண்ணிய நிலைத்தே எனவெனக் கிளவி.**

**பொருள்:** ‘வினை’, குறிப்பு’, ‘இசை’, ‘பண்பு’, ‘எண்’, பெயர்’, எனும் ஆறு பொருட்களுடனும் சேர்ந்து வருவது, ‘என’ எனும் சொல்.

**எடுத்துக்காட்டு:**

*வினை:*
*உண்ணென உண்டான்.*

*குறிப்பு:*
*துண்ணென துடித்தது.*

*இசை:*
*கொல்லென சிரித்தாள்.*

*பண்பு:*
*கன்னங் கரேலென இருண்டது.*
*பச்சைப் பசேலென வளர்ந்தது.*

*எண்:*
*ஒன்றென, இரண்டென.*
*நிலமென, நீரென, வளியென.*

*பெயர்:*
*ஊரெனப்படுவது சோழமூர்.*
*கந்தனென வந்தான்.*

## 'என்று' என்னும் இடைச்சொல்

***254. என்றென் கிளவியும் அதனோ ரற்றே.***

**பொருள்:** 'என்று' எனும் சொல்லும், 'என' எனும் சொல்லைப் போன்றதே.

**எடுத்துக்காட்டு:**

*வினை:*
*உண்ணென்று உண்டான்.*

*குறிப்பு:*
*துண்ணென்று துடித்தது.*

*இசை:*
*கொல்லென்று சிரித்தாள்.*

*பண்பு:*
*கன்னங் கரேலென்று இருண்டது.*
*பச்சைப் பசேலென்று வளர்ந்தது.*

*எண்:*
*ஒன்றென்று, இரண்டென்று.*
*நிலமென்று, நீரென்று, வளியென்று.*

*பெயர்:*
*ஊரென்று சொல்வது சோழமூர்.*
*கந்தனென்று வந்தான்.*

### 'தில்' என்னும் இடைச்சொல்லிற்கு புறனடை

**255. விழைவின் தில்லை தன்னிடத் தியலும்.**

**பொருள்:** 'விழைவை'க் குறிக்கும் 'தில்' எனும் சொல், தன்மையில் வரும் இயல்புடையது.

**எடுத்துக்காட்டு:**

'பெறுகதில் லம்ம யானே'.

### 'ஏ', 'ஓ' என்னும் இடைச்சொற்களுக்கு புறனடை

**256. தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும்**
**அளபின் எடுத்த இசைய என்ப.**

**பொருள்:** தெளிவைக் குறிக்க 'ஏ'வும், சிறப்பைக் குறிக்க 'ஓ'வும் அளபெடையாக ஒலிக்கும் என்பர், அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

தெளிவுக்கு:
நீயேஎ தந்தாய்.

சிறப்புக்கு:
ஓஒ பெரியவன்.

### 'மற்று' என்னும் இடைச்சொல்

**257. மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை**
**அப்பால் இரண்டென மொழிமனார் புலவர்.**

**பொருள்:** 'மற்று' எனும் சொல், 'வினைமாற்றம்', 'அசைநிலை' ஆகிய இரண்டு வகைகளில் வரும் எனச் சொல்லுவர், அறிஞர்.

**விளக்கம்:** மற்று = ம் + அற்று. கொண்டு மூடியதை விடுத்து. மற்றொன்று.

**எடுத்துக்காட்டு:**

வினைமாற்றம்:
மற்று செய்.

*அசைநிலை:*
*மற்று (சொல்)*

**‘எற்று’ என்னும் இடைச்சொல்லின் பொருள்**

***258.*** **எற்றென் கிளவி இறந்த பொருட்டே.**

**பொருள்:** ‘எற்று’ எனும் சொல், இறந்தகாலப் பொருளில்தான் வரும்.

**விளக்கம்:** எல் + து = எற்று. உயர்ந்த அதிர்வானது தேகம். உயர்ந்த அதிர்வாகி வெளிப்பட்டது தேகம்.

**எடுத்துக்காட்டு:**

‘எற்றென் னுடம்பி னெழிநலம்‘.

**‘மற்றையது’ என்னும் இடைச்சொல்**

***259.*** **மற்றைய தென்னுங் கிளவி தானே**
**சுட்டுநிலை ஒழிய இனங்குறித் தன்றே.**

**பொருள்:** ‘மற்றையது’ என்னும் சொல், சுட்டிய ஒன்றை மட்டும் குறிக்கும். அதைப்போன்ற பிற அனைத்தையும், மொத்தமாய்க் குறிக்காது.

**எடுத்துக்காட்டு:**

‘அந்தப் புத்தகம் எடுத்து வா’.
‘இதுவா?’
‘மற்றையது. ஆம், அதுதான்’.

**‘மன்ற’ என்னும் இடைச்சொல்**

***260.*** **மன்றஎன் கிளவி தேற்றம் செய்யும்.**

**பொருள்:** ‘மன்ற’ எனும் சொல், தெளிவைக் குறிக்கும்.

**விளக்கம்:** ‘மன்றம்‘ எனும் சொல்லில் இருந்து, ‘மன்ற’ எனும் சொல் வந்திருக்க வேண்டும். மன்றம் = மன் + ற் + அம். மனம் பிரிந்த தன்மை. வெளிப்படை. தெளிவு.

**எடுத்துக்காட்டு:**

*'கார்மன்ற என்பவள் கண்ணுள்ளே காதலர்*
*தேர்மன்றத் தோன்றிய'.*

**'தஞ்சம்' என்னும் இடைச்சொல்**

**261. தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே.**

**பொருள்:** 'தஞ்சம்' எனும் சொல், சிறுமைப் பொருளில்தான் வரும்.

**விளக்கம்:** தஞ்சம் = தன் + ச் + அம். தன் இயக்கமாகும் தன்மை. பயமின்மை.

எண்மை = எள் + மை. சிறிய தன்மை. சிறுமை.

**எடுத்துக்காட்டு:**

*'ஏனோரோ தஞ்சம் இருபிறப்பி னோர்வெகுளின்*
*வானோர்க்கும் வாழ்தல் அரிது'.*

**'அந்தில்' என்னும் இடைச்சொல்**

**262. அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்று**
**ஆயிரண் டாகும் இயற்கைய என்ப.**

**பொருள்:** 'அந்தில்' எனும் சொல், 'ஆங்க', 'அசைநிலை' ஆகிய இரண்டு பொருட்களில் வரும் இயல்புடையது, என்பர் அறிஞர்.

விளக்கம்: அந்தில் = அல் + தில். தேகமின்மை. வெளி. இடம்.

நாடகத்திலும், கூத்திலும், இத்தகைய இடைச்சொற்கள், கருத்தோட்ட இடைவெளியை நிரப்பி, அனுபவத்தை முழுமையாக்கும் போலும்.

**எடுத்துக்காட்டு:**

*இடம்:*
*'வருமே சேயிழை யந்திற், கொழுநற் காணிய'.*

*அசைநிலை:*
*'அந்தில் கச்சினன் கழலினன்'.*

### ‘கொல்’ என்னும் இடைச்சொல்

***263. கொல்லே ஐயம்.***

***பொருள்:*** ‘கொல்’ எனும் சொல், ‘ஐயத்தை’க் குறிக்கும்.

***விளக்கம்:*** கொல் = க் + ஒல். மெய்யின் முழுமையான அதிர்வு. மெய்யின் ஒலி.

உதாரணமாக, காட்டில் எழுகின்ற ஒரு ஒலியை வைத்து மட்டுமே, அதை எழுப்பியது விலங்கா, மனிதனா, வேறு எதுவுமா என அறிந்திட முடியாது. பலவும் அவ்வொலியை எழுப்பக் கூடும். ஆதலால், எதுவென ஐயம் எழுகின்றது.

இடைச்சொற்கள், சாரத்தில் மிகப் பழமையானவை. பல சொற்களுக்கு அடிப்படையாகவும், வேராகவும் இருக்கின்றன.

***எடுத்துக்காட்டு:***

‘நாய் கொல்லோ, நரி கொல்லோ’.

### ‘எல்’ என்னும் இடைச்சொல்

***264. எல்லே விளக்கம்.***

***பொருள்:*** ‘எல்’ எனும் சொல், ‘விளக்கத்’தைக் குறிக்கும்.

***விளக்கம்:*** எல் = எ + ல். உயர்ந்த அதிர்வு. எழுகின்ற அசைவு. வெளிப்படுதல். தெளிவு. ஐயம் விலகி, விளக்கம் வருகின்றது.

அதே காட்டில், புதரில் ஏற்படும் சத்தம், ஐயத்தை உருவாக்குகின்றது. பாம்பா? விலங்கா? பறவையா? சத்தமிட்டது தலையை உயர்த்தியதும், ஐயம் நீங்குகின்றது. விளக்கம் வருகின்றது.

புற்றா? வளையா?

***எடுத்துக்காட்டு:***

‘எல்வளை’. (அட, வளை)

### ‘ஆர்’ என்னும் இடைச்சொல்

**265. இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பெயர்க்குரி எழுத்தின் வினையொடு முடிமே.**

***பொருள்:*** இயற்பெயரை அடுத்து, ‘ஆர்’ எனும் சொல் வந்தால், அப்பெயர்க்குரிய எழுத்தைக்கொண்டு, வினைச்சொல்லை முடிக்க வேண்டும்.

***விளக்கம்:*** இயற்பெயர் ஆண்பாலை / பெண்பாலைக் குறித்து, மதிப்பு மரியாதைக்காக, ‘ஆர்’ எனும் சொல்லைச் சேர்த்தால், வினைச்சொல்லும் அதற்கு ஏற்றாற்போல், ஒருவர்பாலில், வரவேண்டும்.

**எடுத்துக்காட்டு:**

கந்தன் வந்தான் –> கந்தனார் வந்தார்.
‘கந்தனார் வந்தான்’ என கூறுதல் கூடாது.

### ‘ஆர்’ என்பதற்கு மேலும் ஒரு விதி

**266. அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல்.**

***பொருள்:*** ‘ஆர்’ எனும் சொல், ‘அசைநிலை’ ஆகும் விதத்தை அறிதல் வேண்டும்.

**எடுத்துக்காட்டு:**

‘செல்ல மன்னார் நெடுந்தகை’.

### ‘ஏ’, ‘குரை’ என்னும் இடைச்சொற்கள்

**267. ஏவுங் குரையு மிசைநிறை யசைநிலை
ஆயிரண் டாகும் இயற்கைய என்ப.**

***பொருள்:*** ‘ஏ’ எனும் சொல், ‘இசைநிறை’, ‘குரை’ எனும் சொல், ‘அசைநிலை’, ஆகிய இரண்டாகும் இயல்புடையன, என்பர் அறிஞர்.

***விளக்கம்:*** குரை = க் + உரை. மெய் உரை. உடல் கூறுவது. எளிய, மெலிந்த உடலே துன்பத்தைக் கூறும்.

*எடுத்துக்காட்டு:*

*இசைநிறை:*
*'ஏஎ வம்பல் மொழிந்தனம் யாமே'.*

*அசைநிலை:*
*'பல்குரைத் துன்பங்கள் சென்று படும்'.*

### *'மா'* என்னும் இடைச்சொல்

***268. மாஎன் கிளவி வியங்கோள் அசைச்சொல்.***

***பொருள்:*** *'மா'* எனும் சொல், வியங்கோளில் அசைச்சொல்லாக வரும்.

***விளக்கம்:*** வாழ்த்துதல், வைதல், விதித்தல், வேண்டுதல் எனும் பொருளில், வியங்கோள் வரும்.

***எடுத்துக்காட்டு:***

*'மாயக் கடவுட் குயர்கமா வலனே'.*

### *முன்னிலை அசைச் சொற்கள்*

***269. மியாயிக மோமதி இகும்சின் என்னும்***
***ஆவயின் ஆறும் முன்னிலை யசைச்சொல்.***

***பொருள்:*** *'மியா', 'இக', 'மோ', 'மதி', 'இகும்', 'சின்'* எனும் ஆறு அசைச்சொற்களும், முன்னிலை இடத்தில் வரும்.

***விளக்கம்:***

*மியா = ம் + இய(ம்) + ஆ. அமைதியான இயல்பாகி.*

*இக = இ + க. இருத்தல் மெய் அமைதியுடன்.*

*மோ = ம் + ஓ. மனம் வெளிப்படுதல்.*

*மதி = ம் + அதி. மௌனம் மிகையாய். கொண்டு மூடியதன் மிகை. பூமியின் மிகை, நிலவு.*

*இகும் = இ + க் + உம். இருக்கும் மெய் வெளிப்படுத்தல்.*

*சின் = சில். சிறிய.*

***எடுத்துக்காட்டு:***

*மியா:* கேண்மியா = கேள் + மியா. கேள் அமைதியாக.

*இக:* 'தண்டுறை யூரயாங் கண்டிக'.

*மோ:*'காமஞ் செப்பாது கண்டது மொழிமோ'.

*மதி:* 'சென்மதி பெரும'. சென்மதி = செல் + மதி.

*இகும்:* 'மெல்லம் புலம்ப கண்டிகும் யாமே'.

*சின்:* 'காப்பும் பூண்டிசிற் கடையும் போகலை'.

**'இகும்', 'சின்' என்னும் சொற்கள்**

**270. அவற்றுள்,**
**இகுமும் சின்னும் ஏனை இடத்தொடுந்**
**தகுநிலை உடைய என்மனார் புலவர்.**

**பொருள்:** மேற்கூறியவற்றுள், 'இகும்' மும், 'சின்' னும், பிற இடங்களிலும், அதாவது, தன்மையிலும் படர்க்கையிலும், வந்து நிற்கும் தகுதியை உடையன, என்பர் அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

*இகும்:*
*தன்மை:* 'கண்டிகு மல்லமோ கொண்க'.
*படர்க்கை:* 'புகழ்ந்திகு மல்லரோ பெரிதே'.

*சின்:*
*தன்மை:* 'கண்ணும் படுமோ வென்றிசின் யானே'.
*படர்க்கை:* 'யாரஃதறிந்திசி னோரே'.

**'அம்ம' என்னும் இடைச்சொல்**

**271. அம்ம கேட்பிக்கும்.**

**பொருள்:** 'அம்ம' எனும் சொல், சொல்லப் போவதைக் கவனமுடன் கேட்கச் செய்யும்.

**எடுத்துக்காட்டு:**

'அம்ம வாழி தோழி'.

*‘ஆங்க’ என்னும் உரையசை*

**272. ஆங்க உரையசை.**

**பொருள்:** ‘ஆங்க’ எனும் சொல், உரையசைப் பொருளில் வரும். அதாவது, பேச்சை இயக்கும் விதமாய் வரும்.

**விளக்கம்:** ‘ஆங்க’ என்பது, ‘அங்கே’ எனும் இடத்தைக் குறிக்கின்ற பொருளில் வந்தாலும், அது நினைவில் நிற்காமல், பிற பொருளும், உயிரும் நிகழ்வும் நினைவில் நிற்கும்.

**எடுத்துக்காட்டு:**

‘ஆங்கக்
குயிலு மயிலுங் காட்டிக்
கேள்வனை விடுத்துப் போக்கி யோளே’.

*ஒப்பில் போலி இன்னதென்பது*

**273. ஒப்பில் போலியும் அப்பொருட் டாகும்.**

**பொருள்:** ஒப்புமை அற்ற போலியும், உரையசை ஆகும்.

**எடுத்துக்காட்டு:**

‘அவர் வந்தார் போலும்‘.

*அசைநிலைச் சொற்கள்*

**274. யாகா
பிறபிறக்கு அரோபோ மாதென வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி.**

**பொருள்:** ‘யா’, ‘கா’, ‘பிற’, ‘பிறக்கு’, ‘அரோ’, ‘போ’, ‘மாது’ என வருகின்ற, அந்த ஏழு சொற்களும், அசைநிலைச் சொற்கள். அதாவது, தாம் நிலையாய்ப் பொருண்மை வெளிப்படாது இருந்து, பேச்சு இயங்க உதவும் சொற்கள்.

**விளக்கம்:**

யா = இஆ. இருந்து ஆனவர். இருக்கின்றவர்.

கா = க் + ஆ. மெய்யான.

*பிற = மற்ற.*

*பிறக்கு = மற்றதற்கு.*

*அரோ = அர் + ஓ. பிரிந்து வெளிப்படு.*

போ = ப் + ஓ. கொண்டு வெளிப்படு. கேட்காதே. கேட்டால் வருந்துவாய். ஆர்வத்தைத் தூண்டுவது.

*மாது = ம் + ஆத் + உ. அமைதியாகு.*

**எடுத்துக்காட்டு:**

*யா:* 'யா பன்னிருவர் உளர்போலும் மாணாக்கர்
அகத்தியனார்க்கு'.
*கா:* 'இவண் காண்டிகா பிறை நுதல் பசப்பு
ஊரப் பெரு விதுப்பு...'
*பிற:* 'அதுபிற'.
*பிறக்கு:* 'அது பிறக்கு'.
*அரோ:* 'நோதக இருங்குயில் ஆலும் அரோ'.
*போ:* 'என்னத்தைச் சொல்வது போ'. 'என்னக்கா என்ன ஆச்சு?'.
*மாது:* 'விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் நெஞ்சே'.

## பிரிவில் அசைநிலைச் சொற்கள்

**275. ஆக வாக லென்ப தென்னும்
ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை.**

**பொருள்:** 'ஆக', 'ஆகல்', 'என்பது' என்னும் மூன்று சொற்களும், வரும் இடங்களில், உடன் வரும் சொற்களில் இருந்து பிரியாமல் சேர்ந்திருந்து, அசைநிலையாய் வரும்.

**விளக்கம்:** மேலே, நூற்பா.274–ல் கூறிய சில இடைச்சொற்கள், பிற சொற்களில் இருந்து பிரிந்து தனித்தே வந்தன. 'யா', 'அரோ', 'போ' போன்றவை.

இங்கு, 'ஆக', 'ஆகல்', 'என்பது' என்னும் மூன்று சொற்களும், பிற சொற்களுடன் சேர்ந்தே வரும்.

**எடுத்துக்காட்டு:**

*ஆக:*
*அவன் கண்டதாகச் சொன்னான்.*

*ஆகல்:*
*செய்தாகல் வேண்டும்.*

*என்பது:*
*ஊடலென்பது பொய்க்கோபம்.*

### 'ஔ' என்னும் இடைச்சொல்

**276.** **ஈரள பிசைக்கும் இறுதியி லுயிரே**
**ஆயியல் நிலையுங் காலத் தானும்**
**அளபெடை நிலையுங் காலத் தானும்**
**அளபெடை யின்றித் தான்வருங் காலையும்**
**உளவென மொழிப பொருள்வேறு படுதல்**
**குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும்.**

**பொருள்:** இரண்டு மாத்திரை அளவு ஒலிக்கும் கடைசி உயிரெழுத்தான, 'ஔ', மேற்கூறிய இயல்பான, சொல்லுடன் சேர்ந்து வரும்போதும், அளபெடையுடன் வரும்போதும், அளபெடை இல்லாமல் தனித்து வரும்போதும், அதன் பொருளில் வேறுபாடுகள் உள்ளன எனக் கூறுவர், அறிஞர்.

அவ்வேறுபாடுகள், இவ்வெழுத்தின் வெவ்வேறு ஒலிப்பு முறைப்படி தோன்றும்.

*சொல்லுடன் சேர்ந்து:*
*அப்படியௌ. (ஐயத்தொனி)*

*அளபெடையாய்:*
*ஔஉ அப்படியா? (கழிவிரக்கத்தொனி)*

*இயல்பாய்:*
*ஔ அப்படியா? (வியப்புத்தொனி)*

இன்றைய ஈழத்தமிழர்களின் வியப்பு வெளிப்பாடுகளிலும், இதைக் காணலாம்.

### குறிப்பான் உணர்த்துஞ் சொற்கள்

**277.** **நன்றீற் றேயும் அன்றீற் றேயும்**
**அந்தீற் றோவும் அன்னீற் றோவும்**
**அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும்.**

*பொருள்:* 'நன்று' வின் இறுதி 'ஏ'யையும், 'அன்று' வின் இறுதி 'ஏ'யையும், 'அந்த' வின் இறுதி 'ஓ'யையும், 'அன்ன' வின் இறுதி 'ஓ' வையும், இவை போன்ற பிறவும், இடைச்சொற்களைச் சேர்த்து வரும்.

**எடுத்துக்காட்டு:**

*நன்று + ஏ = நன்றே.*
*அன்று + ஏ = அன்றே.*
*அந்த + ஓ = அந்தோ.*
*அன்ன + ஓ = அன்னோ.*
*நன்று ஏ, அன்று ஏ, அந்த ஓ, அன்ன ஓ என வராது.*

இடைச்சொற்களான 'ஏ' மற்றும் 'ஓ', 'நல்லதே', 'இன்றே', 'இந்தோ', 'எந்தோ', 'இன்னோ', 'என்னோ' என, பிற சொற்களுடனும் சேர்ந்தே வரும்.

### 'உம்' என்னுஞ் சொற்கு மேலும் ஒரு முடிபு

**278. எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும்**
**தத்தமுள் மயங்கும் உடனிலை யிலவே.**

*பொருள்:* எச்ச உம்மையும், எதிர்மறை உம்மையும், ஒன்றுடன் மற்றொன்று, சேர்ந்து வரும் நிலையில்லை.

**எடுத்துக்காட்டு:**

*1. இவனும் வந்தான் – பெயர் எச்ச உம்மை.*

*2. அவளின்றியும் வந்தான். – எதிர்மறைப் பெயர் எச்ச உம்மை.*

*3. அவள் வந்தும் இவன் வந்தான் – வினை எச்ச உம்மை.*

*4. அவன் வராமலும் இவன் வந்தான் – எதிர்மறை வினை எச்ச உம்மை.*

*1+2:* 'இவனும் அவளின்றியும் வந்தான்', எனவோ, *2+1:* 'அவளின்றியும் இவனும் வந்தான்', எனவோ வராது.

*3+4:* 'அவள் வந்தும் அவன் வராமலும் இவன் வந்தான்' எனவோ,

*4+3:* 'அவன் வராமலும் அவள் வந்தும் இவன் வந்தான்' எனவோ வராது.

**விளக்கம்:**

மேற்கூறிய நான்கு கூற்றுகளும், பொருண்மைக் கருத்தாக்கத்தில் உள்முரண்படுகின்றன. இயல்பான கருத்தோட்டம் இல்லை.

'இவனும் அவளின்றி வந்தான்' என்றோ, 'அவளின்றியும் இவன் வந்தான்' என்றோ வரும்.

'அவள் வந்தும் அவன் வராமல் இவன் வந்தான்' என்றோ, 'அவன் வராமலும் அவள் வந்து இவன் வந்தான்' என்றோ வரும்.

### எச்ச உம்மை நிற்றற்குரிய இடம்

**279. எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயின்**
**பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.**

**பொருள்:** கூற வேண்டிய பொருண்மைச் சொல், செம்மையான சொல்லாய் இருப்பின், பின்பு சொல்ல மாட்டார்கள், அறிஞர்கள். முதலில் சொல்ல வேண்டும்.

செஞ்சொல் = 'உம்' அற்றச் சொல்.

**எடுத்துக்காட்டு:**

'சிறுவர்கள் வந்தனர். பெரியோர்களும் வந்தனர்', என வரும்.
'அறிஞர்கள் வந்தனர். பெரியோர்களும் வந்தனர்', என வரும்.
'பெரியோர்களும் வந்தனர். சிறுவர்கள் வந்தனர்', என வராது.
'பெரியோர்களும் வந்தனர். அறிஞர்கள் வந்தனர்', என வராது.

### முற்றும்மை அடுத்து எச்ச உம்மை

**280. முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்**
**எச்சக் கிளவி உரித்தும் ஆகும்.**

**பொருள்:** முற்று உம்மையான தொகைச்சொல்லை அடுத்து, எச்ச உம்மைச்சொல் வருவதும் உள்ளது.

**எடுத்துக்காட்டு:**

'எல்லாருக்கும், பெரியவர்களுக்கும், தாய்மாருக்கும், சிறியவர்களுக்கும் வணக்கம்'.

**விளக்கம்:**

எல்லாருக்கும் – முற்றும்மை.

பெரியவர்களுக்கும், தாய்மாருக்கும், சிறியவர்களுக்கும் – எச்சவும்மைகள்.

**'ஏ' என்னும் ஈற்றசைக்கு மேலும் ஒரு முடிபு**

**281. ஈற்றுநின் றிசைக்கும் ஏயெ னிறுதி**
**கூற்றுவயின் ஓரள பாகலும் உரித்தே.**

**பொருள்:** சொல்லின் இறுதியில் நின்று ஒலிக்கும் 'ஏ' எனும் இறுதி, அயற்கூற்றில், ஒரு மாத்திரையாவதும் உள்ளது.

**எடுத்துக்காட்டு:**

''நன்றே'', எனச் சொன்னார் –> நன்றெனச் சொன்னார்.

**எண்ணின்கண் வரும் உம், என என்பன**

**282. உம்மை எண்ணும் எனவென் எண்ணுந்**
**தம்வயின் தொகுதி கடப்பா டிலவே.**

**பொருள்:** 'உம்' சேர்ந்த எண்ணும், 'என' சேர்ந்த எண்ணும், தம் இடங்களில், ஒன்றுடன் மற்றொன்று சேர்ந்து வருவதில், தடை–யில்லை.

**எடுத்துகாட்டு:**

ஒன்றும், இரண்டும் மூன்றென வரும்.
விண்ணும், தீயும், வளியென, நீரென நிலமென ஆகும்.

**ஏகாரம் எண்ணில் வருதல்**

**283. எண்ஏ காரம் இடையிட்டுக் கொளினும்**
**எண்ணுக்குறித் தியலும் என்மனார் புலவர்.**

**பொருள்:** எண், 'ஏ' வை இடையில் சேர்த்துக் கொண்டாலும், எண்ணைக் குறிக்கும் இயல்புடையதாகும் என்னும் கருத்துடை யவர்கள், அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

*‘தோற்ற மிசையே நாற்றஞ் சுவையே*
*உறலோ டாங்கைம் புலனென மொழிப’.*

**‘எனா’, ‘என்றா’ இவை எண்ணில் வருதல்**

***284.*** ***உம்மை தொக்க எனாவென் கிளவியும்***
***ஆவீறாகிய என்றென் கிளவியும்***
***ஆவிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன.***

***பொருள்:*** *‘உம்‘ வராமல், ‘உம்‘ மின் பொருளில் வரும், ‘எனா’* எனும் சொல்லும், ‘ஆ’ வை இறுதியாகக் கொண்ட ‘என்றா’ எனும் சொல்லும், ஆகிய இரண்டு சொற்களும், எண்ணைக் குறிப்பன.

***விளக்கம்:***

*எனா = என் + ஆ. என்று ஆனது / ஆனவர்.*

*என்றா = என்று + ஆ. என்று ஆனது / ஆனவர்.*

***எடுத்துக்காட்டு:***

*எனா:*
*‘நிலனெனா, நீரெனா, தீயெனா, காளெனா, விண்ணெனா’.*

*என்றா:*
*‘நிலனென்றா, நீரென்றா, தீயென்றா, காளென்றா, விண்ணென்றா’.*

**தொகை பெற்று முடியும் எண்ணிடைச் சொற்கள்**

***285.*** ***அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்***
***பெயர்க்குரி மரபின் செவ்வெண் இறுதியும்***
***ஏயி னாகிய எண்ணின் இறுதியும்***
***யாவயின் வரினுந் தொகையின் றியலா.***

***பொருள்:*** *‘எனா’, ‘என்றா’ என்பவற்றுடன் வரும் எண்ணின் இறுதியும், பெயர்க்குரிய வழக்கத்தின்படி செவ்வெண் இறுதியும், ‘ஏ’ காரத்தைக் கொண்ட எண்ணின் இறுதியும், அவ்விடம் வந்தாலும், கூட்டுத் தொகையைக் குறிக்காமல் வராது.*

***எடுத்துக்காட்டு:***

*எனா:*

*நிலனெனா, நீரெனா அவ்விரண்டும்.*

*என்றா:*
*நிலனென்றா, நீரென்றா அவ்விரண்டும்.*

*செவ்வெண்:*
*நிலன், நீர் என இரண்டு பூதங்கள் ஆயின.*
*முருகன், கந்தன், வேலன் என மூவரும் வந்தனர்.*

*ஏகாரம்:*
*நிலனே, நீரே என இரண்டும் பூதங்கள்.*

**எண்ணில் வரும் 'உம்' மிற்கு மேலும் ஒரு முடிபு**

***286. உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார்.***

**பொருள்:** *எண்ணில், 'உம்' தொக்கி வருவதற்கு, வடிவங்களை வரையறுக்கவில்லை, அறிஞர்.*

**எடுத்துக்காட்டு:**

*போரில், யானை, குதிரை, ஆளைக் கொன்றான்.*

*(போரில், யானையையும், குதிரையையும், ஆளையும் கொன்றான்)*

**'உம்', 'உந்' ஆதல்**

***287. உம்உந் தாகும் இடனுமா ருண்டே.***

**பொருள்:** *'உம்' எனும் சொல், 'உந்' ஆக மாறும் இடமும் உள்ளது.*

**எடுத்துக்காட்டு:**

*யானையும் தேரும் –> யானையுந் தேரும்.*

**வினையொடு வரும் எண்ணிடைச் சொற்கள்**

***288. வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா***
***நினையல் வேண்டும் அவற்றவற் றியல்பே.***

**பொருள்:** *இடைச்சொற்கள், வினைச்சொல்லுடன் வந்தாலும்,*

எண்ணுடன் வந்த, அவ்வவற்றின், தன்மையில் இருந்து மாற்றாமல், பொருத்த வேண்டும்.

**எடுத்துக்காட்டு:**

*உம்:*
*அறுத்தும், அடித்தும், புடைத்தும், கட்டியும் வந்தான்.*

*ஏ:*
*அறுத்தே, அடித்தே, புடைத்தே, கட்டியே வந்தான்.*

*செஞ்சொல்:*
*அறுப்பு, அடிப்பு, புடைப்பு, கட்டுதல் என நான்கும் செய்தான்.*

*எனா:*
*அறுப்பெனா, அடிப்பெனா, புடைப்பெனா, கட்டுதலெனா நான்கும் செய்தான்.*

*என்றா:*
*அறுப்பென்றா, அடிப்பென்றா, புடைப்பென்றா, கட்டுதலென்றா நான்கும் செய்தான்.*

*உம்மைத்தொகை:*
*அறுத்து, அடித்து, புடைத்து, கட்டி வந்தான்.*

### எண்ணிடைச் சொற்கள் பிரிந்து சென்று ஒன்றுதல்

**289. என்றும் எனவும் ஒடுவுந் தோன்றி**
**யொன்றுவழி உடைய எண்ணினுட் பிரிந்தே.**

**பொருள்:** 'என்று', 'என', 'ஒடு' ஆகியன, எண்ணில் பிரிந்து வந்து, ஒன்றுப்படுத்தும் இயல்புடையன.

**எடுத்துக்காட்டு:**

*என்று:*
*'உயர்திணைப் பெயரே யஃறிணைப் பெயரென்*
*றாயிரண் டென்ப'.*

*என:*
*நொடியென வவ்வே மாத்திரை'.*

*ஒடு:*
*'பொருள் கருவி காலம் வினையிடனோடு ஐந்தும்'.*

இடைச் சொற்களின் பொருளறிதல்

**290.** **அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென**
**மெய்பெறக் கிளந்த இயல வாயினும்**
**வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்**
**திரிந்துவேறு வரினுந் தெரிந்தனர் கொளலே.**

**பொருள்:** அந்த அந்தச் சொல்லுக்கு, அவை அவை பொருளென, சொல்லின் அமைப்பால் அறியக்கூடிய இயல்பிருப்பினும், வினைச்சொல்லோடும், பெயர்ச்சொல்லோடும் சேர்ந்து வரும் இடைச்சொற்கள், பொருள் மாறி வந்தாலும், அப்பொருளை அறிவர், அறிஞர்கள்.

புறனடை

**291.** **கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங்**
**கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே.**

**பொருள்:** மேற்கூறியவை அல்லாமல், வேறுபிற வந்தாலும், மேற்கூறியவற்றின் அடிப்படையில் ஆராய்ந்து, அறிஞர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

# 8. உரியியல்

*உரியியல் = உரி + இயல். உரிச்சொல்லின் இயல்பு.*

*ஜென் புத்த மத தியானத்திற்குப் பயன்படும் 'கோன்'களைப் போல் உள்ளன, உரிச்சொற்களும் அவற்றின் பொருண்மைகளும். 'வய வலியாகும்'. 'வய' எனும் சொல்லைத் தியானித்து, வலிமையை உணர வேண்டும்.*

**உரிச்சொல்லின் இயல்பு**

***292.*** ***உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை***
***இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்***
***பெயரினும் வினையினு மெய்தடு மாறி***
***ஒருசொல் பல்பொருட் குரிமை தோன்றினும்***
***பலசொல் லொருபொருட் குரிமை தோன்றினும்***
***பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்***
***தத்தம் மரபின் சென்றுநிலை மருங்கின்***
***எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்.***

***பொருள்:*** *உரிச்சொல் தோற்றத்தை விவரிக்க வேண்டும் என்றால், உரிச்சொற்கள் இசையிலும், குறிப்பிலும், பண்பிலும் தோன்றுகின்றன; பெயர்ச்சொல்லுடனும் வினைச்சொல்லுடனும், உரிச்சொற்கள் தம் வடிவத்தை மாற்றி வந்து சேர்கின்றன; ஒரு உரிச்சொல்லே, பல பொருட்களுக்கு உரியதாய் வருகின்றது; பல உரிச்சொற்கள், ஒரு பொருளுக்கு உரியதாய் வருகின்றன; வழக்கில் இல்லாத உரிச்சொற்கள், வழக்கில் உள்ளவற்றுடன் சேர்த்து வரவைக்கப்பட்டு, பொருள் பெறப்படுகின்றன; தங்கள்*

தங்களுடைய வழக்கப்படி, நிலைச்சொல்லின் முன் எந்த உரிச்சொல் வந்தாலும், அது வேறுபொருளை வெளிப்படுத்தும்.

### உரிச்சொல் இன்னதெனல்

**293.** ***வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா***
***வெளிப்பட வாரா உரிச்சொல் மேன.***

**பொருள்:** பொருளைத் தாமாகவே வெளிப்படுத்தும் உரிச் சொற்களைப் பற்றிக் கூறாமல், வெளிப்படையாகப் பொருள் தராத உரிச்சொற்களைப் பற்றி, இனி, கூறுவோம்.

**விளக்கம்:** உரிச்சொற்கள் ஏராளமாய் உள்ளதாலும், பல உரிச் சொற்களின் பொருள் வெளிப்படையாய்த் தெரிவதாலும், வெளிப் படையாகப் பொருள் தராத உரிச்சொற்களைப் பற்றி மட்டுமே, இங்கு கூறப்படுகின்றது.

### உறு, தவ, நனி என்னும் உரிச்சொற்கள்

**294.** ***அவைதாம்,***
***உறுதவ நனிஎன வரூஉம் மூன்றும்***
***மிகுதி செய்யும் பொருள என்ப.***

**பொருள்:** அவை யாவை என்றால், ‘உறு’, ‘தவ’, ‘நனி’ என வருகின்ற உரிச்சொற்கள், ‘மிகுதி’ எனும் பொருளைக் குறிக்கும் என்பர், அறிஞர்.

**விளக்கம்:** ‘உறு’ எனும் உரிச்சொல், ‘உறுமை’ எனும் சொல்லில் இருந்து உருவாக்கப்பட்டது. புலி, சிங்கம் போன்றவற்றின் மிகையான சத்தமே, உறுமை. ஒலி, சத்தம், இசையின் மிகையே, உறுமை. ‘உறு’, இசையின் பொருளில் வந்துள்ளது.

‘தவ’ எனும் உரிச்சொல், ‘தவம்‘ எனும் சொல்லில் இருந்து உருவாக்கப்பட்டுள்ளது. தேகத்தின் புலன்களும், செயலாற்றும் உறுப்புகளும், ஐந்து புலன்களின் உள்ளீடுகளால் உருவான மனமும் அமைதியாய் இருக்கும்போது, உணர்வுநிலை மிகும். ‘தவ’, குறிப்புப் பொருளில் வந்துள்ளது.

‘நனி’ எனும் உரிச்சொல், ‘நன்மை’ எனும் பண்பைக் குறிக்கும் சொல்லில் இருந்து திரிந்து வந்தது. எந்த நன்மையும், அன்பை,

வளத்தை, இன்பத்தை மிகுதியாக்கும். 'நனி', பண்புப் பொருளில் வந்தது.

இவ்வாறு, உரிச்சொற்கள், இசை, குறிப்பு, பண்பு ஆகியவற்றில் இருந்து தோன்றுகின்றன என்பதும், பல உரிச்சொற்கள் ஒரு பொருளைக் குறிக்கும் என்பதும், பெறப்படும்.

***எடுத்துக்காட்டு:***

*உறுபுனல் – மிகுந்த இரைச்சலிடும் புனல்.*
*தவப்பலவே – மிகப்பலவே.*
*நனி வருந்தினை – மிக வருந்தினாய்.*

### உரு, புரை என்பவை

***295. உருஉட் காகும் புரைஉயர் பாகும்.***

***பொருள்:*** 'உரு' எனும் உரிச்சொல், 'உட்கு' எனும் பொருள் தரும். 'புரை' எனும் உரிச்சொல், 'உயர்பு' எனும் பொருள் தரும்.

***விளக்கம்:*** 'உரு' எனும் உரிச்சொல், 'உரும்' எனும் இசைச் சொல்லில் இருந்து வருகின்றது. 'உரும்' என்பது 'இடி'யைக் குறிக்கும். இடி அச்சத்தை உருவாக்கும். மெய், உள்பக்கமாய்ச் சுருங்கும், உள்கும், உட்கும்.

'புரை' எனும் உரிச்சொல், 'புரை' எனும் சொல்லில் இருந்தே வந்திருக்கலாம். புரை என்பது, குறிப்பாக, உண்ணும்போதோ, பருகும்போதோ, உணவுப்பொருள் தவறுதலாக மூச்சுக்குழலில் சென்றுவிட்டால், அதை வெளியேற்ற நுரையீரலின் காற்று உயரும். புரை ஏறுதல், 'உயர்வை'க் குறிக்கும். புரை, குறிப்புப் பொருளில் வருகின்றது.

***எடுத்துக்காட்டு:***

*உருவக் குதிரை – இடிபோல் சத்தமிட்டு அச்சுறுத்தும் குதிரை.*

*புரைய மன்ற புரையோர் கேண்மை – உயர்ந்த மன்றத்தின் உயர்ந்தோர் நட்பு.*

### குரு, கெழு என்பவை

***296. குருவுங் கெழுவும் நிறன்ஆ கும்மே.***

***பொருள்:*** 'குரு' வும், 'கெழு' வும் நிறத்தைக் குறிக்கும்.

***விளக்கம்:*** 'குரு' எனும் உரிச்சொல், 'குருமை' எனும் பண்புச்சொல்லில் இருந்து வந்திருக்கலாம். குரு = க் + உரு. மெய்யின் வடிவம். அகக்கண்ணில் நம் மெய்யின் உருவம், முதலில் கருமையாயும், முடிவில் ஒளிர்மையாயும் தோன்றும். 'குரு' எனும் ஆசானும், மாயை எனும் இருள் அகல, உண்மை ஒளியைப் பாய்ச்சுகிறார்.

'கெழு' எனும் உரிச்சொல், 'கெழுமை' எனும் பண்புச்சொல்லில் இருந்து வந்திருக்கலாம். கெழுமை = க் + எழு + மை. வளமை. வளமையால் வெளிப்படும் ஒளி.

'குரு' வும், 'கெழு' வும், பண்புப் பொருளில் வருகின்றன.

***எடுத்துக்காட்டு:***

குருத்துளி பொழிந்தது – ஒளிரும் துளி பொழிந்தது.

செங்கேழ் மென்கொடி – செந்நிற மெல்லிய கொடி.

## சொல்லல், இன்னல் என்பவை

***297. செல்லல் இன்னல் இன்னா மையே.***

***பொருள்:*** 'செல்லல்', 'இன்னல்' எனும் உரிச்சொற்கள், துன்பம் எனும் 'இன்னாமையை'க் குறிக்கும்.

***விளக்கம்:*** செல்லல் = ச் + எல் + அல். இயக்கம் உயர்ந்த அதிர்வாதல். நோயால் உடலின் இயக்கம் மிகுதல். துன்பம்.

இன்னல் = இல்(ன்) + அல். இல்லாமை. துன்பம்.

'செல்லல்', 'இன்னல்' ஆகிய இரண்டு உரிச்சொற்களும் குறிப்பால் வந்தன போலும்.

***எடுத்துக்காட்டு:***

'மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்'.

'வெயில் புறந்தரூஉம் இன்னல் இயக்கத்து'.

## மல்லல், ஏ என்பவற்றின் பொருள்

***298. மல்லல் வளனே ஏபெற் றாகும்.***

*பொருள்:* 'மல்லல்' எனும் உரிச்சொல் வளத்தையும், 'ஏ' எனும் உரிச்சொல், பெற்றையும் குறிக்கும்.

**விளக்கம்:** மல்லல் = ம் + அல் + அல். கொண்டு மூடியது இல்லாமல் இல்லை. குறையாத இருப்பு. வளம்.

ஏ = மிகுந்த உயர்வு. பெற்று = ப் + எல் + து. (தொல். எழுத்து. 367 & 370) கொண்டது உயர்ந்த அதிர்வுடைய தேகமாய் வெளிப்படுவது.

**எடுத்துக்காட்டு:**

'மல்லல் மாமலை'. வளமுடைய மாமலை.

'ஏகல டுக்கம்'. ஏகலடுக்கம் = ஏ + கல் + அடுக்கம். மிக உயர்ந்த மலை.

குறிப்பால் வந்தன.

### உகப்பு, உவப்பு உரிச்சொற்கள்

**299. உகப்பே உயர்தல் உவப்பே உவகை.**

*பொருள்:* 'உகப்பு' எனும் சொல் உயர்தலையும், 'உவப்பு' எனும் சொல் உவகையையும் குறிக்கும்.

**எடுத்துக்காட்டு:**

'விசும்புகந் தாடாது'. விண்ணில் உயர்ந்து பறவாமல்.

'உவந்துவந் தார்வ நெஞ்சமொடு'. மகிழ்ந்து மகிழ்ந்து ஆர்வமுள்ள நெஞ்சமுடன்.

*திரிபுகள்:*

உக, உகா, உகவு, உகவா, உகத்த.
உவ, உவா, உவக்க, உவத்த, உவத்து.

குறிப்பால் வந்தன போலும்.

### பயப்பு என்பதன் பொருள்

**300. பயப்பே பயனாம்.**

*பொருள்:* 'பயப்பு' எனும் சொல், பயனைக் குறிக்கும்.

**விளக்கம்:** பயன் + பு = பயம் + பு = பயப்பு. பயனைக் கொண்டு

வெளிப்படுதல்.

**எடுத்துக்காட்டு:**

'பயவாக் களரனையர் கல்லா தவர்'.

திரிபுகள்:

பயவு, பயக்கும், பயக்கா, பயந்து, பயத்த, பயத்து, பயப்பி.

குறிப்பால் வந்தன போலும்.

## பசப்பு என்பதன் பொருள்

**301.** பசப்பு நிறனாகும்.

**பொருள்:** 'பசப்பு' எனும் சொல், நிறத்தைக் குறிக்கும்.

**விளக்கம்:** பச்சை + அப்பு = பசப்பு. பச்சை இலை அரைப்பை அப்பிக் கொள்ளுதல். ஆதி சமூகங்களில், வண்ணங்களே எண்ணங்களைக் குறித்திருக்கும். பிற்காலத்தில், பச்சை அப்புதல் தவிர்க்கப்பட்டிருக்கும். எனவே, வெளிறுதலே பசலையாய்க் குறிக்கப்பட்டது போலும்.

**எடுத்துக்காட்டு:**

'மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே'. குற்றமில்லாத ஒளியுடைய முகத்தில், பசலை நிறம் பரவும்.

திரிபுகள்:

பசவு, பசவா, பசக்கும், பசக்கா, பசந்து, பசத்த, பசத்து, பசலை, பசப்பி.

பண்பால் வந்தது.

## இயைபு என்பது

**302.** இயைபே புணர்ச்சி.

**பொருள்:** 'இயைபு' எனும் சொல், புணர்ச்சியைக் குறிக்கும்.

**எடுத்துக்காட்டு:**

'இயைந்தொழுகும்'.

திரிபுகள்:

*இயை, இயையா, இயையும், இயைக்க, இயைத்த, இயைத்து.*

*குறிப்பால் வந்தது.*

**இசைப்பு என்பது**

***303.* இசைப்பிசை ஆகும்.**

***பொருள்:*** *'இசைப்பு' எனும் சொல், இசையைக் குறிக்கும்.*

***விளக்கம்:*** *இசைப்பு = இசை + ப் + உ. இசையைக் கொண்டு வெளிப்படுத்தல்.*

***எடுத்துக்காட்டு:***
*'இசைந்தொழுகும்'.*

*திரிபுகள்:*
*இசை, இசையா, இசைக்கும், இசைக்கா, இசைத்த, இசைத்து.*

*இசையால் வந்தது.*

**அலமரல் தெருமரல் என்பவை**

***304.* அலமரல் தெருமரல் ஆயிரண்டுஞ் சுழற்சி.**

***விளக்கம்:*** *அலமரல் = அல் + அம் + அரல். அலையாய் வரும் தன்மை அறுதல். நதியின் அலையோட்டம் அறுதல். சுழற்சி. சுழல்.*

*தெருமரல் = தெருள் + அரல். மனத்தெளிவு அறுதல். குழப்பம். சுழற்சி.*

***எடுத்துக்காட்டு:***

*'அலமர லாயம்'. சுழன்று வரும் ஆயம்.*

*'தெருமர லுள்ளம்'. குழம்பும் உள்ளம்.*

*குறிப்பால் வந்தன.*

**மழ, குழ என்பவை**

***305.* மழவுங் குழவும் இளமைப் பொருள.**

***பொருள்:*** *'மழ' வும், 'குழ' வும், இளமையைக் குறிக்கும்.*

**விளக்கம்:** 'மழ' எனும் உரிச்சொல், 'மழலை' எனும் சொல்லில் இருந்தும், 'குழ' எனும் உரிச்சொல், 'குழவி' எனும் சொல்லில் இருந்தும் திரிந்திருக்கும்.

**எடுத்துக்காட்டு:**
'மழகளிறு'.
'குழக்கன்று'.

குறிப்பால் வந்தன.

### சீர்த்தி என்பது

***306. சீர்த்தி மிகுபுகழ்.***

**பொருள்:** 'சீர்த்தி' எனும் சொல், மிகுந்த புகழைக் குறிக்கும்.

**எடுத்துக்காட்டு:**
'வயக்கஞ்சால் சீர்த்தி'.

குறிப்பால் வந்தது.

### மாலை என்பது

***307. மாலை இயல்பே.***

**பொருள்:** 'மாலை' எனும் சொல், இயல்பைக் குறிக்கும். குறிப்பால் வந்தது.

**எடுத்துக்காட்டு:**

'இரவரன் மாலையன்'. இரவில் வரும் இயல்புடையவன்.

### கூர்ப்பு, கழிவு என்பவை

***308. கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்.***

**பொருள்:** 'கூர்ப்பு', 'கழி' எனும் சொற்கள், சிறப்பை உண்டாக்கும்.

**விளக்கம்:** 'கூர்ப்பு', 'கழி' எனும் சொற்களில் இருந்து திரியும் உரிச்சொற்கள், தாம் சேரும் பெயரையும், வினையையும் சிறப்பிக்கும்.

***எடுத்துக்காட்டு:***

*'துனிகூர் எவ்வமொடு'.*
*'கழி கண்ணோட்டம்'.*

*திரிபுகள்:*

*கூர, கூரா, கூர்ந்த, கூர்த்த, கூர்ந்து, கூர்ப்ப.*
*கழிய, கழிவு, கழியா, கழிக்க, கழித்த, கழிந்த, கழித்து, கழிப்ப.*

*குறிப்பால் வந்தன.*

### கதழ்வு, துனைவு என்பவை

***309. கதழ்வும் துனைவும் விரைவின் பொருள.***

***பொருள்:*** *'கதழ்', 'துனை' எனும் சொற்கள், விரைவைக் குறிக்கும்.*

***விளக்கம்:*** *கதம் = க் + அத் + அம். மெய்யின் தேக உணர்வற்ற தன்மை. மெய்யின் விரைவான இயக்கம். ழ் = கீழ். கத + ழ் + உ = விரைவான இயக்கம் கீழ் புறம். கீழ்நோக்கிய விரைவான இயக்கம்.*

*த் + உலை (த் + உனை = துனை). தேகத்தின் புற அலை இயக்கம்.*

***எடுத்துக்காட்டு:***

*'கதழ் வீழ் அருவி'. விரைவாய் விழும் அருவி.*
*'துனைபரி'. விரைவான குதிரை.*

*குறிப்பால் வந்தன.*

### அதிர்வு, விதிர்ப்பு என்பவை

***310. அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும்.***

***பொருள்:*** *'அதிர்வு', 'விதிர்ப்பு' எனும் சொற்கள், நடுக்கத்தைக் குறிக்கும்.*

***விளக்கம்:*** *அதிர்வு = அத் + இர் + உ. தேக உணர்வற்ற இருப்பில், மெல்லிய அதிர்வு வெளிப்படுவதை உணரலாம்.*

*விதிர்ப்பு = வி + த் + இர் + ப் + உ. (மெய்யைக் கடந்து) அப்பால் தேக உணர்வு வெளியில் இருப்பினும் அதிர்வை உணரலாம்.*

நடுக்கம் = நடு + க் + அம். நடு அல்லது மைய உடலின் தன்மை.

**எடுத்துக்காட்டு:**

'அதிர்கண் முரசம்'.
'விதிர்ப்புற்று கண்ணிமையார்'.

திரிபுகள்:

அதிர, அதிரா, அதிரும், அதிர்ந்த, அதிர்ந்து.
விதிர்ப்ப, விதிர்ப்புறு.

குறிப்பால் வந்தன.

### வார்தல், போகல், ஒழுகல் என்பவை

**311. வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையுஞ் செய்யும் பொருள.**

**பொருள்:** 'வார்தல்', 'போகல்', 'ஒழுகல்' ஆகிய மூன்று சொற்களும், நேர்மை மற்றும் உயர்வைக் குறிக்கும்.

**விளக்கம்:**

வார்தல் = வ் + ஆர் + த் + அல். புறமும் அகமும் முழுமையாகிய தேக அதிர்வு.

போகல் = ப் + ஓ + க் + அல். வெளி முழுமையும் மெய்யின் அதிர்வு. மனவெளி முழுமையும் கல்போன்று அசையாமை.

ஒழுகல் = ஒ + ழ் + உ + க் + அல். முழுமையாக ஆழ்ந்து உள்ளே மெய்யின் அதிர்வு. முழுமையாக ஆழ்ந்து புறத்தே கல்போன்று அசையாமை.

இவை மூன்றும், யோகநிலைகள்போன்றுள்ளன. அந்நிலைகளில், இருப்பின், உயிர்ப்பின் மத்தியில், நேர்கோடாகவும், உயர்ந்தும் ஆற்றல் இயங்கும்.

**எடுத்துக்காட்டு:**

'வார் கயிற் றொழுகை'.

'போகு கொடி'.
'ஒழுகு கொடி'.

குறிப்பால் வந்தன.

**தீர்தல், தீர்த்தல் என்பவை**

***312.*** ***தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட் டாகும்.***

***பொருள்:*** *'தீர்தல்', 'தீர்த்தல்' எனும் சொற்கள், விடுவதைக் குறிக்கும்.*

***எடுத்துக்காட்டு:***

*'பசி தீர்ந்தான்'. பசி விட்டது.*
*'பேய் தீர்த்தான்'. பேயை விடுவித்தான்.*

*திரிபுகள்:*

*தீர, தீரா, தீரும், தீர்க்க, தீர்த்து.*

*குறிப்பால் வந்தன.*

**கெடவரல், பண்ணை என்பவை**

***313.*** ***கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு.***

***பொருள்:*** *'கெடவரல்', 'பண்ணை' ஆகிய இரண்டு சொற்களும், விளையாட்டைக் குறிக்கும்.*

***எடுத்துக்காட்டு:***

*'கெடவர லாயம்'*
*'பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்'.*

*குறிப்பால் வந்தன.*

**தட, கய, நளி என்பவை**

***314.*** ***தடவும் கயவும் நளியும் பெருமை.***

***பொருள்:*** *'தட', 'கய', 'நளி' ஆகிய உரிச்சொற்கள், பெருமையை / பெரிய தன்மையைக் குறிக்கும்.*

***விளக்கம்:*** *தடம் = த் + அட் + அம். தேக உணர்வை ஒட்டித் தொடரும் தன்மை. அது அக உணர்வில் பெருமை சேர்க்கும்.*

*கயம் = க் + அய் + அம். மெய்யாய் நிலைக்கும் தன்மை.*

இதுவும், அக உணர்வில் பெருமை சேர்க்கும்.

நண்மை = ந் + அள் + மை. நெருங்கிய மிகைத்தன்மை. வளமை. செழுமை.

**எடுத்துக்காட்டு:**

'தடந்தோள்'.
'கயவெள்ளருவி'.
'நளிமலை நாடன்'.

குறிப்பால் வந்தன.

### தட என்பது

**315. அவற்றுள்,
தடஎன் கிளவி கோட்டமும் செய்யும்.**

**பொருள்:** மேற்கூறியவற்றுள், 'தட' எனும் உரிச்சொல், எல்லையையும் குறிக்கும்.

**விளக்கம்:** ஒருவரின் கால்தடம், நிலத்தின் எல்லையைக் குறிக்கும்.

**எடுத்துக்காட்டு:**
தடக்கோடு.

குறிப்பால் வந்தது.

### கய என்பது

**316. கயஎன் கிளவி மென்மையும் செய்யும்.**

**பொருள்:** 'கய' எனும் உரிச்சொல், மென்மையையும் குறிக்கும்.

**விளக்கம்:** மெய்யாய் நிலைக்கையில், உடல், மனம், இருப்பே மென்மையாகும்.

**எடுத்துக்காட்டு:**

'கயந்தளிர்'.
'கயந்தலை மடப்பிடி'.

குறிப்பால் வந்தது.

*நளி என்பது*

***317.** **நளிஎன் கிளவி செறிவும் ஆகும்.***

***பொருள்:** 'நளி' எனும் உரிச்சொல், செறிவையும் குறிக்கும்.*

***விளக்கம்:** நண்மை = நள் + மை. நள் = ன் + அள். நெருக்கமான மிகை. அடர்த்தி. செறிவு.*

***எடுத்துக்காட்டு:***

*யுரேனியம் ஒரு நளி உலோகம்.*

*குறிப்பால் வந்தது.*

*பழுது என்பது*

***318.** **பழுதுபயம் இன்றே.***

***பொருள்:** 'பழுது' எனும் உரிச்சொல், பயனின்மையைக் குறிக்கும்.*

***விளக்கம்:** 'பழுப்பு' எனும் சொல்லில் இருந்து, 'பழுது' எனும் சொல் உருவாகி இருக்கலாம். செடிக்கு இலை பழுப்பானாலும், உடலுக்கு புண் பழுப்பானாலும், பயனில்லை.*

***எடுத்துக்காட்டு:***

*'பழுது இலை'.*
*'பழுது புண்'.*

*பண்பால் வந்தது.*

*சாயல் என்பது*

***319.** **சாயல் மென்மை.***

***பொருள்:** 'சாயல்' எனும் சொல், மென்மையைக் குறிக்கும்.*

***விளக்கம்:** சாயல் = ச் + ஆய் + அல். இயக்கமானஅதிர்வு. மெய்யின் இயக்கத்துடன் ஒன்றினால், உடல், மனம், இருப்பே மென்மையாகும்.*

***எடுத்துக்காட்டு:***

*'சார னாடன் சாயன் மார்பு'.*

*குறிப்பால் வந்தது.*

## *முழுது என்பது*

***320.** முழுது என்பது எஞ்சாப் பொருட்டே.*

***பொருள்:*** *'முழுது' எனும் உரிச்சொல், எஞ்சாமை அல்லது முழுமையைக் குறிக்கும்.*

***விளக்கம்:*** *'முழுமை' எனும் சொல்லில் இருந்து, 'முழுது' எனும்சொல் திரிந்திருக்கலாம்.*

*முழுமை = ம் + உ + ழ் + உ + மை. மனத்தின் உள்ளே ஆழ்ந்து உள்ள தன்மை. உடல் இயக்கமின்மையும், புலன் அடக்கமும், மனத்துள் ஆழ்த்தும். அகவெளி, உடலின் எல்லையற்று முழுமை பெறும். அகமும் புறமும் ஒன்றிய நிலை, முழுமை. முழுமைக்கு அப்பால் ஏதுமில்லை.*

***எடுத்துக்காட்டு:***

*'முழுதாய் வந்தார்'.*

*குறிப்பால் வந்தது.*

## *வம்பு என்பது*

***321.** வம்பு நிலை இன்மை.*

***பொருள்:*** *'வம்பு' எனும் சொல், நிலையின்மையைக் குறிக்கும்.*

***விளக்கம்:*** *வம்பு = வல் + ப் + உ. வலிமையான மன வெளிப்பாடு. அமைதியின்மை. தொடர்ச்சியான இயக்கம்.*

***எடுத்துக்காட்டு:***

*'வம்ப வடுகர்'.*

*குறிப்பால் வந்தது.*

*மாதர் என்பது*

***322.*** ***மாதர் காதல்.***

***பொருள்:*** 'மாதர்' எனும் சொல், காதலைக் குறிக்கும்.

***விளக்கம்:*** மாதர் = ம் + ஆத் + அர். மனம் ஆகின்றவர். மனத்தின் அமைதியாகின்றவர்.

காதல் = க் + ஆத் + அல். மெய்யாதல். மெய்யுணர்வாதல். அமைதியாதல்.

***எடுத்துக்காட்டு:***

'மாதர் வண்டொடு சுரும்பிசைத்தது'.

குறிப்பால் வந்தது.

*நம்பு, மே என்பவை*

***323.*** ***நம்பு மேவு நசையா கும்மே.***

***பொருள்:*** 'நம்பு', 'மே' எனும் சொற்கள், எதிர்பார்ப்பைக் குறிக்கும்.

***விளக்கம்:*** நம்பு = நன் + பு = நல் + ப் + உ. நெருங்கிய அதிர்வுடைய மன வெளிப்பாடு. எதிர்பார்ப்பு. ஆசை.

மே = ம் + ஏ. மனத்தின் மிகு உயர்வு. எதிர்பார்ப்பு.

***எடுத்துக்காட்டு:***

'உனை நம்பி இருக்கின்றேன்'. உனை எதிர்பார்த்து இருக்கின்றேன்.

'மேவற்க மென்மை பகைவரகத்து'. எதிர்பார்க்காதே மென்மையை பகைவரின் மனத்தில்.

குறிப்பால் வந்தன.

*ஓய்தல் முதலியவை*

***324.*** ***ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்***

**ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்.**

**பொருள்:** 'ஒய்தல்', 'ஆய்தல்', 'நிழத்தல்', 'சாஅய்' என வரும் அந்த இடங்கள் நான்கும், இருப்பதன் நுண்மையைக் குறிக்கும்.

**விளக்கம்:** ஓய்தல் = ஓய் + த் + அல். முழுமையாய் இருக்கும் தேக அதிர்வு.

ஆய்தல் = ஆய் + த் + அல் = ஆதல் தேக அதிர்வு. உடல் இயக்கமும், புலன் இயக்கமும் அடங்கல்.

நிழத்தல் = ன் + இழத்தல். நெருக்கம் இழத்தல். உடலுடனான நெருக்கம் இழத்தல்.

சாஅய் = ச் + ஆய். இயக்கம் ஆதல்.

இவை யாவும், மனம் அல்லது ஆன்ம நுணுக்கம்.

**எடுத்துக்காட்டு:**

'ஒய்கலை யொருத்தல்'.
'கையு மெய்யு மாய்ந் திருந்தார்'.
'நிழத்த யானை மேய்புலம் படர'.
'கயலற லெதிரக் கடும்புனற் சாஅய்'.

குறிப்பால் வந்தன.

## புலம்பு என்பதன் பொருள்

**325. புலம்பே தனிமை.**

**பொருள்:** 'புலம்பு' எனும் சொல், தனிமையைக் குறிக்கும்.

**விளக்கம்:** புலம்பு = புலம் + ப் + உ. புறத்தே மனத்தை வெளிப்படுத்தல்.

**எடுத்துக்காட்டு:**

'புலம்புவிட் டிருந்தார்'.

குறிப்பால் வந்தது.

## துவன்று என்பது

**326. துவன்று நிறைவாகும்.**

**பொருள்:** 'துவன்று' எனும் சொல், நிறைவைக் குறிக்கும்.

**விளக்கம்:** துவன்று = து + அன்று. து = த் + உ. தேகத்தின் வெளிப்பாடு. புலன், மன வெளிப்பாடு. துவன்று = தேக வெளிப்பாடு அற்ற நிலை. உடல் இயக்கமும், புலன் இயக்கமும் இல்லாமல் இருத்தல். அந்நிலை, உணர்வுநிலையில் முழுமை தரும்.

**எடுத்துக்காட்டு:**

'ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்'.

குறிப்பால் வந்தது.

## முரஞ்சல் என்பது

**327.** முரஞ்சல் முதிர்வே.

**பொருள்:** 'முரஞ்சல்' எனும் சொல், முதிர்வைக் குறிக்கும்.

**விளக்கம்:** முரஞ்சல் = முரல் + சல். முரல் = ம் + உர் + அல். கொண்டு மூடியது உயர இருந்து அதிர்தல். சல் = ச் + அல். இயக்க அதிர்வு. முரஞ்சல் = துள்ளி எழுந்து செல்லல்.

முதிர்வு = ம் + உதிர்வு. மனம் உதிர்தல். மனத்தின் ஓட்டத்தை எதிர்த்துப் பயணித்தால், மனத்தின் இயக்கமும், மூலமும், இடமும், வெளியும் புலப்படும், உணரப்படும். மனத்தின் ஓட்டம், உடலின் இயக்கத்தாலும், புலன்களின் உள்ளீடுகளாலும் தொடர்கின்றது. உடலும், புலன்களும் அசையாமையில் நிலைக்கும்போது, மனக்காலத்தில், அகவெளியில், பின்னோக்கிய பயணத்தில், மனம் நிலைப்படும், உதிரும்.

**எடுத்துக்காட்டு:**

'கோடுபல முரஞ்சிய கோளி யாலம்'.

குறிப்பால் வந்தது.

## வெம்மை என்பது

**328.** வெம்மை வேண்டல்.

**பொருள்:** 'வெம்மை' எனும் சொல், விரும்புதலைக் குறிக்கும்.

**விளக்கம்:** வெம்மை = வ் + எம் + மை. புறமும் அகமும் ஆனது எம்முடைய தன்மை, எம்முடையது. முழுமையாவது.

முழுமையாவதை விரும்ப வேண்டும்.

**எடுத்துக்காட்டு:**

'வெம்மையது ஞானம்'. விரும்பப்படுவது ஞானம்.

குறிப்பால் வந்தது.

## பொற்பு என்பது

***329.*** **பொற்பே பொலிவு.**

**பொருள்:** 'பொற்பு' எனும் சொல், பொலிவைக் குறிக்கும்.

**விளக்கம்:** பொற்பு = பொன் + பு = பொல் + பு. பொல் = ப் + ஒல். கொண்டது முழுமையாய் அதிர்தல். பொற்பு = கொண்டதன் முழுமையான அதிர்வு வெளிப்படல். முழுஒளி வெளிப்பாடு.

**எடுத்துக்காட்டு:**

'அணிகலம் பொற்ப'.

பண்பால் வந்தது.

## வறிது என்பது

***330.*** **வறிதுசிறி தாகும்.**

**பொருள்:** 'வறிது' எனும் உரிச்சொல், சிறிது எனும் பொருள்படும்.

**விளக்கம்:** 'வறுமை' எனும் சொல்லில் இருந்து, 'வறிது' எனும் சொல் உருவாகி இருக்கலாம். 'சிறுமை' எனும் சொல்லில் இருந்து, 'சிறிது' வந்திருக்க வேண்டும்.

வறுமை = வ் + அறு + மை. புறமும் அகமும் அறும் தன்மை. சிறியதாகும் தன்மை. பண்பால் வந்தது.

**எடுத்துக்காட்டு:**

'வறிது நெறியொரீஇ'. சிறுமை, நெறியை முழுவதுமாய்க் கைவிடுவது.

### ஏற்றம் என்பதன் பொருள்

***331. ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும்.***

**பொருள்:** 'ஏற்றம்' எனும் சொல், நினைவையும், துணிவையும் குறிக்கும்.

ஏற்றம் = ஏறு + அம். உயரும் தன்மை. நினைவு என்பது, ஞாபகத்தில் இருந்து தனித்து உயர்வது. உடல், நெஞ்சு, கண், பார்வை அனைத்தும் உயரும், துணியும்போது. குறிப்பால் வந்தன.

**எடுத்துக்காட்டு:**

'ஏற்றத் திருந்தார்'.

### பிணை, பேண் என்பவை

***332. பிணையும் பேணும் பெட்பின் பொருள.***

**பொருள்:** 'பிணை', 'பேண்' எனும் உரிச்சொற்கள், 'பெட்பு' எனும் பொருளைக் குறிக்கும்.

**விளக்கம்:** பிணைதல் எனும் சொல்லில் இருந்து, 'பிணை' எனும் சொல்லும், பேண்மை எனும் சொல்லில் இருந்து 'பேண்' எனும் சொல்லும் வந்திருக்கலாம்.

பிணை = ப் + இணை. கொண்ட இணை. பிணை = ப் + இள் + ஐ. கொண்டதில் இருக்கும் மிகை ஐக்கியமாவது.

பேண் = ப் + ஏண். கொண்டதை மிக உயர்த்தி நெருக்கமாக்கு.

பேண் = ப் + ஏள். கொண்டதில் மிக உயர்ந்த மிகை.

பெட்பு = ப் + எள் + பு. மனம் சிறியதாய் வெளிப்படுவது. மன அடக்கம். பணிவு. அன்பு. பாசம். மதிப்பு.

**எடுத்துக்காட்டு:**

'அரும்பிணை யகற்றி வேட்ட ஞாட்பினும்'.

'தந்தை தாய் பேண்'.

### பணை என்பது

***333. பணையே பிழைத்தல் பெருப்பும் ஆகும்.***

***பொருள்:*** *'பணை' எனும் உரிச்சொல், பிழைத்தல் மற்றும் பெருப்பு எனும் பொருட்களைக் குறிக்கும்.*

***விளக்கம்:*** *பணைதல் அல்லது பணைத்தல் எனும் சொல்லில் இருந்து, 'பணை' எனும் சொல் வந்திருக்கலாம்.*

*பணை = ப் + அணை. கொண்டது நெருக்கமாய் ஐக்கியமாவது.*

*பணை = ப் + அள் + ஐ. கொண்டதன் மிகை ஐக்கியமாவது, நெருக்கமாவது. (பனை எனும் சொல், 'பல் + ஐ' என்பதில் இருந்து வரும்.)*

*கொள்வது மிகையானால், ஒன்று பெருகும் அல்லது தவறும். ஒரு மரமே, மிகுதியாக நீரை உறிஞ்சினால் பெருக்கும், மேலும் உறிஞ்சினால், சாய்ந்துவிடும்.*

***எடுத்துக்காட்டு:***

*'பணைத்துப்போய் வீழ்ந்தது'. பிழைத்துப்போய் வீழ்ந்தது.*

*'பணைத்தோள்'. பெருந்தோள்.*

### *படர் என்பது*

***334. படரே உள்ளல் செலவும் ஆகும்.***

***பொருள்:*** *'படர்' எனும் உரிச்சொல், உள்ளல் மற்றும் செலவைக் குறிக்கும்.*

***விளக்கம்:*** *படர்தல் எனும் சொல்லில் இருந்து, 'படர்' எனும் சொல் வரும்.*

*படர் = ப் + அட் + அர். கொண்டதில் ஒட்டித் தொடர்ந்து இருப்பவை. மனதில் ஒட்டித் தொடர்பவை. எண்ணம். சிந்தனை.*

*படர் = ப் + அட் + அர். வெளியில் ஒட்டித் தொடர்ந்து பிரிவது. செலவு.*

***எடுத்துக்காட்டு:***

*'படர்மலி வெற்பர்'. உள்ளம்மலி வெற்பர்.*

*'ஆறு படர்ந்தார்'. வழி சென்றார்.*

### *பையுள், சிறுமை என்பவை*

***335. பையுளும் சிறுமையும் நோயின் பொருள.***

***பொருள்:*** *'பையுள்', 'சிறுமை' எனும் சொற்கள், நோயைக் குறிக்கும். பிறவியைக் குறிக்கும்.*

***விளக்கம்:*** *பையுள் = ப் + ஐ + உள். ஐக்கியமான வெளி உள். உள் ஐக்கியமான வெளி. கருமம். பிறப்பு எனும் நோய்.*

*சிறுமை = சிறு + மை. சிறிய தன்மை. அளவினும் சிறியது நோயைத் தரும். சிறுமை குணம், கருமம் சேர்க்கும். பிறப்பு எனும் நோய் வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*'பையு ணல்யாழ்'. பையுள் அல்யாழ் / பையுள் நல்யாழ். யாழின் இசையமைதியில் கருமமும் அழியும்.*

*'சிறுமை யுறுபவோ செய்பறி யலரே'. பிறவி அடைவரோ, செய்வது அறியாதவர்கள்.*

### *எய்யாமை என்பது*

***336. எய்யாமை அறியாமை.***

***பொருள்:*** *'எய்யாமை' எனும் சொல், அறியாமையைக் குறிக்கும்.*

***விளக்கம்:*** *எய் = உயர்ந்து இருத்தல். அறிவு என்பது, புலன்களால் கிடைக்கும் செய்திகள், ஒரு வடிவமைப்பில், இணைந்தவாறு மேலெழுதல் எனலாம்.*

***எடுத்துக்காட்டு:***

*'எய்யா மையலை'. அறியா மயக்கத்தை.*

### *நன்று என்பது*

***337. நன்று பெரிதாகும்.***

***பொருள்:*** *'நன்று' எனும் சொல், பெரியதைக் குறிக்கும்.*

***விளக்கம்:*** *நன்று = ன் + அன்று. நெருக்கம் இல்லாமை.*

உடலுடன் நெருக்கம் இல்லாமை, மனவெளியை விரிவாக்கும், பெரிதாக்கும்.

**எடுத்துக்காட்டு:**

'நன்று செய்தார்'.

குறிப்பால் வந்தது.

### தெவு என்பது

***338.*** **தெவுக்கொளற் பொருட்டே.**

**பொருள்:** 'தெவு' எனும் சொல், கொள்வதைக் குறிக்கும்.

**விளக்கம்:** தெவு = த் + எ + உ. தேகம் உயர்ந்து வெளிப்படுவது. பறிப்பது. கொள்ளுவது.

**எடுத்துக்காட்டு:**

'நீர்த்தெவு நிரைத்தொழுவர்'. நீரைக் கொள்ளும் உழவர்.

### தாவு என்பது

***339.*** **தாவே வலியும் வருத்தமும் ஆகும்.**

**பொருள்:** 'தாவு' எனும் சொல், வலிமையையும், வருத்தத்தையும் குறிக்கும்.

**விளக்கம்:** தாவல் எனும் சொல்லில் இருந்து, தாவு எனும் சொல் வந்திருக்கலாம்.

தாவல் = த் + ஆவ் + அல். தேக உணர்வாதல். அக வலிமையுடைமை. தேகம் அல்லது வடிவமாதல். பிறப்பு எடுத்தல்.

**எடுத்துக்காட்டு:**

'தாவி னன்பொன்'. வலிமையற்ற பொன்.

'கருங்கட் டாக்கலை'. கருங்கண் வருந்தும் கலைமான்.

### தெவ்வு என்பது

***340.*** **தெவ்வுப் பகை ஆகும்.**

***பொருள்:*** ‘தெவ்வு’ எனும் சொல், பகையைக் குறிக்கும்.

***விளக்கம்:*** த் + எ + வ் + உ. தேகம் உயர்ந்து புறம் அகத்தை வெளிப்படுத்துவது. பறிப்பது. கொள்ளையடிப்பது.

***எடுத்துக்காட்டு:***

‘தெவ்வர் தேயத்து’. பகைவர் தேயத்து.

### விறப்பு முதலியவை

***341. விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே.***

***பொருள்:*** ‘விறப்பு’, ‘உறப்பு’, ‘வெறுப்பு’ ஆகிய சொற்கள், செறிவைக் குறிக்கும்.

***விளக்கம்:*** விறப்பு = வ் + இறப்பு. புறம் அகம் இல்லாமை. தன்னுள் இறுகும் தன்மை. அடர்த்தி. செறிவு.

உறப்பு = உறு + அப்பு. சேரும் மிகை. நெருக்கம். செறிவு.

வெறுப்பு = வ் + எ + ற் + உ + ப் + உ. புறமும் அகமும் உயர்ந்து பிரிந்து புறத்தே செயலாய் சொல்லாய் வெளிப்படுவது.

***எடுத்துக்காட்டு:***

‘விறந்த காப்பொடு’. செறிந்த காப்பொடு.
‘உறந்த விஞ்சி யுயர்நிலை மாடம்’. செறிந்த இஞ்சி.
‘வெறுத்தார்’. செறிந்தார்.

### விறப்பு என்பது அச்சமும் உணர்த்தல்

***342. அவற்றுள்,***
***விறப்பே வெரூஉப் பொருட்டும் ஆகும்.***

***பொருள்:*** ‘விறப்பு’ எனும் சொல், அச்சத்தையும் குறிக்கும்.

***எடுத்துக்காட்டு:***

‘கோடுமுற்றி யளந்த காரொடு விறந்தே’.

### கம்பலை முதலியவை

***343. கம்பலை சும்மை கலியே அழுங்கல்***

**என்றிவை நான்கும் அரவப் பொருள.**

**பொருள்:** 'கம்பலை', 'சும்மை', 'கலி', 'அழுங்கல்' எனும் நான்கு சொற்களும், சத்தத்தைக் குறிக்கும். இசையால் வந்தன.

**விளக்கம்:** கம்பலை = கன் + ப் + அலை = கல் + ப் + அலை. நிலையான எண்ணமுடன் அதிர்வு.

சும்மை = சு + ம் + மை. தூய்மையான மகர ஒலிப்பு.
கலி = கல் + இ. அசையாமை இல்லாமை. இயக்கம். சத்தம்.
அழுங்கல் = அழும் + கல். நடுகல் அருகில் அழுதல்.

எடுத்துக்காட்டு:

'ஊர் கம்பலை யுடைத்து'.
'ஊர் சும்மை யுடைத்து'.
'கலிகெழு மூதூர்'.
'அழுங்கன் மூதூர்'.

**அழுங்கல், இரக்கமும் கேடும் உணர்த்தும்**

**344. அவற்றுள்,**
**அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும்.**

**பொருள்:** அவற்றுள், 'அழுங்கல்' எனும் சொல், இரக்கத்தையும், அழிவையும் குறிக்கும்.

**எடுத்துக்காட்டு:**

'மகனையிழந் தழுங்கினார்'.
'செலவழுங்கினார்'.

**கழும் என்பது**

**345. கழுமென் கிளவி மயக்கம் செய்யும்.**

**பொருள்:** 'கழும்' எனும் சொல், மயக்கத்தைக் குறிக்கும்.

**விளக்கம்:** க் + அழ் + உம். மெய் ஆழ்ந்து உட்படும் / வெளிப்படும்.

**எடுத்துக்காட்டு:**

'கழுமிய ஞாட்பினுள் மைந்திழந்தார் இட்ட'.

செழுமை என்பது

***346.* செழுமை வளனும் கொழுப்பும் ஆகும்.**

***பொருள்:*** 'செழுமை' எனும் சொல், வளத்தையும், கொழுப்பையும் குறிக்கும்.

***எடுத்துக்காட்டு:***

'செழுஞ் செந்நெல்'.
'செழுந்தடி தின்ற செந்நா யேற்றை'.

விழுமம் என்பது

***347.* விழுமம் சீர்மையும் இடும்பையும் செய்யும்.**

***பொருள்:***'விழுமம்' எனும் சொல், சீர்மையையும், இடும்பையையும் குறிக்கும்.

***விளக்கம்:***

விழுமம் = விழும் + அம். விழுகின்ற தன்மை. அகந்தை விழுவதால் சீர்மை எனும் ஒழுங்கு ஏற்படும்.

ஒழுக்கத்தில் இருந்து தவறி விழுந்தால், இடும்பை எனும் பிறவி ஏற்படும்.

***எடுத்துக்காட்டு:***

'விழுமியர்'. சீரியர்.
'விழுமமுற் றிருந்தார்'.

குறிப்பால் வந்தன.

கருவி என்பது

*348.* கருவி தொகுதி.

***பொருள்:*** கருவி எனும் சொல், தொகுதியைக் குறிக்கும்.

***விளக்கம்:*** கருவி = கரு + வி. கரு = உயிர். வி = அப்பால். உயிருக்கு அப்பால் உள்ளது, உடல். உடல், உயிரைச் சுற்றிதொகுக்கின்றது.

**எடுத்துக்காட்டு:**

'கருவி வானம் கதழுறை சிதறி'.

### கமம் என்பது

**349. கம நிறைந்து இயலும்.**

**பொருள்:** கம எனும் உரிச்சொல், நிறைவைக் குறிக்கும் இயல்புடையது.

**விளக்கம்:** கமம் எனும் சொல்லில் இருந்து, 'கம' எனும் உரிச்சொல் வந்திருக்கலாம். கமம் = க் + அம் + அம். மெய்யின் தன்மையாதல். மெய்யுணர்வாதல். முழுமை அல்லது நிறைவைக் குறிக்கும்.

**எடுத்துக்காட்டு:**

'கமஞ்சூன் மாமழை'.

### அரி என்பது

**350. அரியே ஐம்மை.**

**பொருள்:** அரி எனும் சொல், ஐம்மையைக் குறிக்கும்.

**விளக்கம்:** அரி = பிரி. உடலுணர்வை, புலன்கள் மற்றும் மனத்தால் உருவாகும் உணர்வைப் பிரிந்து இருந்தால், இறைமையுடன் நெருக்கமும் ஐக்கியமும் ஏற்படும்.

ஐ = அ + இ. உயிரும் இருப்பும் ஒன்றியது.

**எடுத்துக்காட்டு:**

'அரிமயிர்த் திரண்முன்கை'.

### கவவு என்பது

**351. கவவகத் திடுமே.**

**பொருள்:** கவவு எனும் சொல், உள்எடுப்பதைக் குறிக்கும்.

**விளக்கம்:** கவவு = க + அ + உ. மெய்யை / பொருண்மையை உள் எடுத்தல் புறமிருந்து. உயிரோடு மெய் ஒன்றுதல்.

*எடுத்துக்காட்டு:*

*'கொடும்பூண் கவைஇய கோல மார்பு'.*

### துவைத்தல் முதலியவை

***352.*** **துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்**
**இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர்.**

*பொருள்:* துவைத்தல், சிலைத்தல், இயம்பல், இரங்கல் ஆகியவை இசையைக் குறிக்கும் சொற்கள் எனும் கருத்துடையவர்கள், அறிஞர்.

**விளக்கம்:** துவைக்கும்போதும், சிலை செதுக்கும்போதும், பேசும்போதும், அழும்போதும் ஒலிகள் ஒரு ஒழுங்கில் எழுந்து ஒலிக்கின்றன. அது இசையாகின்றது. இவ்விசைச்சொற்களின் திரிபுகள் உரிச்சொற்களாக வரும்.

*எடுத்துக்காட்டு:*

*'வரிவளை துவைப்ப'.*

*'கலையி னிரலை சிலைப்ப'.*

*'இயமர மியம்பும்'. (இயமரம் = இயம் + மரம். இயம் = இ + அம். நிலையான, உறுதியான தன்மை).*

*'முரசிரங்கு முற்றம்'.*

### இரங்கல் கழிவுப் பொருளுமுணர்த்தல்

***353.*** **அவற்றுள்,**
**இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும்.**

*பொருள்:* இரங்கல், உடல், உயிர், பொருள் அழிவைப் பற்றியும் வரும்.

*எடுத்துக்காட்டு:*

*'உடையதிழந் துயிரிரங்கி யிருந்தார்'.*

### இலம்பாடு ஒற்கம் என்பவை

***354.*** **இலம்பா டொற்கம் ஆயிரண்டும் வறுமை.**

**பொருள்:** இலம்பாடு, ஒற்கம் ஆகிய இரண்டு சொற்களும் வறுமையைக் குறிக்கும்.

**விளக்கம்:** இலம்பாடு = இலம் + பாடு. இலம் = இல்லாத தன்மை.

ஒற்கம் = ஒல் + க் + அம். முழுமையாக அதிரும் மெய்யின் தன்மை. பசியால், உடல் முழுவதும் அதிர்ந்து இயங்கும்.

வறுமை = வ் + அறு + மை. புறமும் அகமும் அறுந்த தன்மை.

### ஞெமிர்தல், பாய்தல் என்பவை

**355. ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள.**

**பொருள்:** ஞெமிர்தல், பாய்தல் எனும் சொற்கள் பரத்தல் பொருளைக் குறிக்கும்.

**விளக்கம்:** ஞெமிர்தல். இறுகத் தழுவுவதால், அழுத்தத்தால், மேனி விரியும்.

பாய்தல் = ப் + ஆய் + த் + அல். கொண்டது ஆன வடிவ அதிர்வு. நிலத்தில் நீர் பரவும்.

**எடுத்துக்காட்டு:**

'தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரிய'.
'புண்ணுமிழ் குருதிப் புனல் பாய்ந்து'.

### கவர்வு என்பது

**356. கவர்வுவிருப் பாகும்.**

**பொருள்:** கவர்வு எனும் சொல், விருப்பைக் குறிக்கும்.

**எடுத்துக்காட்டு:**

'கொள்ளை மாந்தரி னானாது கவரும்'.

### சேர் என்பது

**357. சேரே திரட்சி.**

**பொருள்:** சேர் எனும் உரிச்சொல், திரட்சியைக் குறிக்கும்.

***விளக்கம்:*** சேரல் எனும் சொல்லில் இருந்து, 'சேர்' எனும் உரிச்சொல் வந்திருக்கலாம்.

'சேர்ந்து செறி குறங்கு'. (குறங்கு = குறு + அங்கு. பெண்குறி.)

### வியல் என்பது

***358. வியலென் கிளவி அகலப் பொருட்டே.***

***பொருள்:*** வியல் எனும் சொல் அகலத்தைக் குறிக்கும்.

***விளக்கம்:*** வியல் = வி + அல். அப்பால் அதிர்வு. முழுமையான அதிர்வு. தனக்கு அப்பால் உள்ள மெல்லதிர்வை உணர்தல். மெய்யுணர்வின் விரிவாக்கம். அகலமாதல்.

***எடுத்துக்காட்டு:***

'வியலிரு வானம்'.

### பேம், நாம், உரும் என்பவற்றின் பொருள்

***359. பேநாம் உரும்என வரூஉங் கிளவி***
***ஆமுறை மூன்றும் அச்சப் பொருள.***

***பொருள்:*** பேம், நாம், உரும் என வரும் சொற்கள் மூன்றும் அச்சத்தைக் குறிக்கும்.

***விளக்கம்:***

பேம் = ப் + ஏம். மனம் மிக உயர்ந்து இருக்கும் தன்மை. பயந்து மிகு கவனமுடன் இருக்கும் தன்மை.

நாம் = ன் + ஆம். நெருக்கமாதல். பயத்தால் நெருங்குதல். அச்சத்தால், மனிதர் குழுமமாதல்.

உரும் = உரு + ம். அமைதியானதின் உருவம். வானத்தின் புறவெளிப்பாடு. உரு = உர் + உ. இடிச்சத்தம்.

***எடுத்துக்காட்டு:***

'மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்'.
'நாமவருந் துறைபோந்து'.
'உருமில் சுற்றமோ டிருந்தோற் குறுகி'.

### வய என்பது

***360. வயவலி ஆகும்.***

**பொருள்:** வய எனும் உரிச்சொல் வலிமையைக் குறிக்கும். குறிப்பால் வந்தது.

**விளக்கம்:** வயம் எனும் சொல்லில் இருந்து, 'வய' எனும் உரிச்சொல் வந்திருக்கலாம்.

வயம் = வ் + அய் + அம். புறமும் அகமும் ஐக்கியமான தன்மை. முழுமை. வலிமை.

**எடுத்துக்காட்டு:**

'வாள்வரி வேங்கை வயப்புலி'.

### வாள் என்பது

***361. வாள் என்பது ஒளி ஆகும்.***

**பொருள்:** வாள் எனும் சொல், ஒளியைக் குறிக்கும்.

**விளக்கம்:** வாள் = வ் + ஆள். புறமும் அகமும் ஆளுதல். மெய்யுனர்ந்த ஞானியர், முழுமையானவர், ஒளியை உணர்வர்.

**எடுத்துக்காட்டு:**

'கண்ணே,<br>நோக்கி நோக்கி வாளிழந் தனவே'.

### துயவு என்பது

***362. துயஎன் கிளவி அறிவின் திரிவே.***

**பொருள்:** துய எனும் உரிச்சொல், அறியாமையைக் குறிக்கும்.

துயம் எனும் சொல்லில் இருந்து, 'துய' எனும் உரிச்சொல் வந்திருக்கலாம்.

துயம் = த் + உய் + அம் / த் + உஇ + அம். தேகம் புறம் இருக்கும் தன்மை. அகம் புறம் என இரண்டு. அது அறியாமை. எல்லாம் ஒன்றே. இது அறிவு.

*எடுத்துக்காட்டு:*

'அறிவு துயவுறுத்தார்'.

### உயா என்பது

**363. உயாவே உயங்கல்.**

**பொருள்:** உயா எனும் சொல், உயங்கலைக் குறிக்கும்.

**விளக்கம்:** உயா = உ + இ + ஆ. புறம் இருந்து ஆதல்.

உயங்கல் = உ + இ + அம் + கல். புறம் இருக்கும் தன்மை கல்லாதல். புறமாய் நிலைத்தல். அசையாமை.

அசையாமையை, மூன்று வழிகளில் அடையலாம். ஒன்று, அகத்துள் ஆழ்ந்து. இரண்டு, புறத்தில் நிலைத்து. மூன்று, அகத்திற்கும் புறத்திற்கும் இடைப்பட்ட நடுநிலையில் இருந்து.

*எடுத்துக்காட்டு:*

'பருந்திருந் துயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை'.

### உசா என்பது

**364. உசாவே சூழ்ச்சி.**

**பொருள்:** உசா எனும் உரிச்சொல், சூழ்ச்சியைக் குறிக்கும்.

**விளக்கம்:** உசா = உ + சா. புறம் அழிதல். பகை அழிதல். தன்னைச் சூழ்வதன் மூலமே, புறம் அழியும். பகையை, சூழ்வதன் மூலமே அழிக்க இயலும்.

*எடுத்துக்காட்டு:*

'நாமுசாக் கொள்ளாமோ'. நாம் சூழ்ந்து கொள்ளமாட்டோமா?

### வயா என்பது

**365. வயாஎன் கிளவி வேட்கைப் பெருக்கம்.**

**பொருள்:** வயா எனும் உரிச்சொல், மிகுதியான வேட்கையைக் குறிக்கும்.

**விளக்கம்:** வயாவு எனும் சொல்லில் இருந்து, 'வயா' எனும் உரிச்சொல் வந்திருக்கலாம்.

வயாவு = வ் + அய் + ஆ + உ. புறமும் அகமும் ஐக்கியமாகி புறமாதல். முழுமையான ஆழ்ந்த ஆசை.

**எடுத்துக்காட்டு:**

'கூழ்கண்டு வயாவினார்'.

### கறுப்பு, சிவப்பு என்பவை

***366. கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள.***

**பொருள்:** கறுப்பு, சிவப்பு எனும் சொற்கள் வெகுளியைக் குறிக்கும்.

**விளக்கம்:** முகம் கறுத்தலும், கண் சிவத்தலும், கோபத்தைக் குறிக்கும்.

திரிபுகள்: கறுக்க, கறுப்ப, கறுத்த, சிவக்க, சிவத்த, சிவந்த.

**எடுத்துக்காட்டு:**

'கறுத்து வந்தார்'.
'சிவந்து நோக்கினார்'.

பண்பால் வந்தன.

### கறுப்பும் சிவப்பும் நிறப்பண்பும் உனர்த்தல்

***367. நிறத்துரு வுணர்த்தற்கும் உரிய என்ப.***

**பொருள்:** நிறத்தின் உருவை, காட்சியை உணர்த்துவதற்கும், அச்சொற்கள் உரியன, என்பர் அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

'இருள் கறுப்பு'.
'அந்தி சிவப்பு'.

### நொசிவு முதலியவற்றின் பொருள்

***368. நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை.***

*பொருள்:* நொசிவு, நுழைவு, நுணங்கு ஆகிய சொற்கள், நுண்மையைக் குறிக்கும்.

*எடுத்துக்காட்டு:*

'நொசி மருங்குல்'. 'சோறு நொசிந்தது'.
'நுழை மருங்குல்'.
'நுணங்கு மருங்குல்'.

**புனிறு என்பது**

***369. புனிறென் கிளவிஈன் றணிமைப் பொருட்டே.***

*பொருள்:* புனிறு எனும் சொல், ஈன்ற அழகைக் குறிக்கும்.

*விளக்கம்:* புனிறு = புல் + இறு. புல் = ப் + உல். கொண்டதன் உள்ளே / புறத்தே அதிர்வு. படைப்பு. இறு = பற்று. புனிறு = மெய்யுணர்வை தொடர்ந்துப் பற்றுதல்.

ஈன்றணிமை = ஈன்ற + அணி + மை. ஈன்ற அழகு தன்மை. மெய்யுணர்வில் நிலைப்போர், குழந்தையைப் பெற்ற தாயைப் போல், புதியதாய்ப் பிறந்த குழந்தையைப் போல், அழகுடன் விளங்குவர்.

**நனவு என்பது**

***370. நனவே களனும் அகலமும் செய்யும்.***

*பொருள்:* நன எனும் உரிச்சொல், களன் என்பதையும், அகலம் என்பதையும் குறிக்கும்.

*விளக்கம்:* நனம் என்ற சொல்லில் இருந்து, 'நன' எனும் உரிச்சொல் வந்தது போலும்.

நனம் = நன் + அம் = நல் + அம். நல் = னல். நெருக்கமான அதிர்வு. நெருக்கமான அதிர்வு தன்மை. இறைமையுடன் ஒன்றியமை.

களன் / களம் = கள் + அம். மெய்யின் மிகைத் தன்மை.

அகலம் = அகல் + அம். விரியும் தன்மை.

*எடுத்துக்காட்டு:*

'நனவுப்புகு விறலியிற் றோன்று நாடன்'.

*'நனந்தலை யுலகு'.*

### மத என்பது

***371. மதவே மடனும் வலியும் ஆகும்.***

**பொருள்:** 'மத' எனும் உரிச்சொல், மடம் என்பதையும் வலிமையையும் குறிக்கும்.

**விளக்கம்:** மதம் எனும் சொல்லில் இருந்து, 'மத' எனும் உரிச்சொல் வந்திருக்கலாம்.

மதம் = ம் + அத் + அம். மனம் / ஆன்மாவுடன் சேர்ந்த உயிர்ப்புள்ள தேகத்தன்மை. அல்லது, தேக உணர்வற்ற மனம் / ஆன்மா.

மடம் = ம் + அட் + அம். மனம் உயிர்ப்புடன் ஒட்டித்தொடரும் தன்மை. அந்நிலைமைகள், முழுமையை, வலிமையைத் தரும்.

**எடுத்துக்காட்டு:**

*'மாதர்வாண்முக மதைஇய நோக்கே'.*

*'மதகளிறு'.*

### மத என்பதன் வேறுபொருள்கள்

***372. மிகுதியும் வனப்பும் ஆகலு முரித்தே.***

**பொருள்:** மத எனும் உரிச்சொல், மிகுதியையும், வனப்பையும் குறிக்கும். மெய்யுணர்வில், மிகுதி உணரப்படும். மெய்யுணர்வாளர் அழகு நிறைந்தவர்.

**விளக்கம்:** வன் + அப்பு = வல் + அப்பு. வல் = புறமும் அகமுமான, முழுமையான அதிர்வு. அதுவே அழகு.

**எடுத்துக்காட்டு:**

*'மதகளிறு'.*
*'இளம்பாண்டில்,*
*தேரூரச் செம்மாந்ததுபோல் மதைஇனள்'.*

*யாணர் என்பது*

***373.*** **புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி.**

**பொருள்:** யாணர் எனும் சொல், புதிதுபடலைக் குறிக்கும்.

**விளக்கம்:** யாணர் = ய் + ஆண் + அர் = ய் + ஆள் + அர். இருந்து உயிர்ப்புடன் மிகையானவர். ஞானியர். ஞானியர் புதுமை படைப்பர்.

**எடுத்துக்காட்டு:**

'அறாஅ யாண ரகன்றலை நன்னாடு'.

*அமர்தல் என்பது*

***374.*** **அமர்தல் மேவல்.**

**பொருள்:** அமர்தல் எனும் சொல், மேவலைக் குறிக்கும்.

**விளக்கம்:** மேவல் = ம் + ஏ + வ் + அல். மனம் மிக உயர்ந்து புறமும் அகமும், முழுமையாய், அதிர்வது. மெய்யுணர்வு.

அமர்தல் = அமர் + த் + அல். அமர்ந்த தேகத்தின் அதிர்வு. தியான அமைதியின் உணர்வு. அடங்குதல்.

**எடுத்துக்காட்டு:**

'கூழமர்ந் துண்டாள்'.

*யாண் என்பது*

***375.*** **யாணுக் கவினாம்.**

**பொருள்:** யாணு எனும் சொல், கவினைக் குறிக்கும்.

**விளக்கம்:** யாண் = ய் + ஆண். இருந்து உயிர்ப்புடன் மிகையாதல். இறைமையுடன் ஒன்றுவதால் அழகாகலாம்.

**எடுத்துக்காட்டு:**

'யாணது பசலை என்றனன்'.

*பரவு, பழிச்சு என்பவை*

***376. பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள.***

**பொருள்:** பரவு எனும் சொல்லும், பழிச்சு எனும் சொல்லும், வழுத்தைக் குறிக்கும்.

வழுத்து = வ் + அழுத்து. முழுமையாய் அழுத்து. அழுந்து. மனத்தை உயிருடன் ஒன்று.

பரவு = ப் + அர் + அ + உ. மனம் பிரிந்து புறமாதல்.

பழிச்சு = ப் + அழி + ச் + உ. மனம் அழிய மெல்லியக்கம் வெளிப்படும்.

**எடுத்துக்காட்டு:**

'கடவுட் பரவினார்'.
'கைதொழூஉப் பழிச்சி'.

*கடி என்பது*

***377. கடிஎன் கிளவி***
***வரைவே கூர்மை காப்பே புதுமை***
***விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே***
***அச்ச முன்தேற் றாயீ ரைந்தும்***
***மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே.***

**பொருள்:** கடி எனும் உரிச்சொல், வரைவு, கூர்மை, காப்பு, புதுமை, விரைவு, விளக்கம், மிகுதி, சிறப்பு, அச்சம், சூளுரைத்தல் ஆகிய பத்துச் சொற்களுடன், அவற்றின் தன்மையை உணர்த்தும் வகையில் வரும்.

**எடுத்துக்காட்டு:**

வரைவு: 'ஊர் கடிந்தார்'.
கூர்மை: 'வாள்வாய் கடிது'.
காப்பு: 'கடி கா'.
புதுமை: 'கடித் தளிர்'.
விரைவு: 'கடிது வந்தார்'.
விளக்கம்: 'கடும் பகல்'.
மிகுதி, சிறப்பு: 'கடும் புனல்'.
அச்சம்: 'கடுங்கண் யானை'.

சூளுரைத்தல்: 'கடுஞ்சூ டருகுவன்'.

### கடி என்பது வேறு பொருளும் உணர்த்தல்

**378. ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே.**

**பொருள்:** கடி எனும் உரிச்சொல், ஐயத்தையும், கரிப்பையும் குறிப்பதும் உண்டு.

**விளக்கம்:** ஐயம் = ஐ + அம். வியப்புத் தன்மை. புதியது. சந்தேகம். சந்தேகம் = சம் + தேகம். சேர்ந்த தேகங்கள். எது என அறிய முடியாமை.

கரிப்பு: க் + அரிப்பு. உப்பு. உவர்ப்பு.

**எடுத்துக்காட்டு:**

'கடுத்தன எல்லலளோ வன்னை'.
'கடிமிளகு தின்ற கல்லா மந்தி'.

### ஐ என்பது

**379. ஐவியப் பாகும்.**

**பொருள்:** ஐ எனும் சொல், வியப்பைக் குறிக்கும்.

**விளக்கம்:** ஐ = அ + இ. உயிர் நிலைத்தல். அசையாமை. வியப்புக்குரிய நிலவையோ, அந்திச் சூரியனையோ கண்டால், ஒரு நொடி, மனம் நின்றுவிடும். உயிர் நிலைக்கும்.

**எடுத்துக்காட்டு:**

'ஐதே காமம் யானே'.

### முனைவு என்பது

**380. முனைவு முனிவு ஆகும்.**

**பொருள்:** முனைவு எனும் சொல், முனிவைக் குறிக்கும்.

**விளக்கம்:** முனைவு = முனை + உ. முகத்தின் முன்பகுதி, மூக்கு. கோபத்தின் வெளிப்பாடு, மூக்கின் விரிந்த இயக்கம் மூலம் நிகழ்கின்றது. விலங்குகளில் பெரும்பாலானவை மூக்கைக்

கொண்டே வெறுப்பையும் கோபத்தையும் வெளிப்படுத்துகின்றன.

முனிவு = முன் + இ + உ. முன் இருந்து / நிலைத்து வெளிப்படுவது. அடர்த்தியான வெளிப்பாடு. மிகுதியான கோபம்.

**எடுத்துக்காட்டு:**

'சேற்றுநிலை முனைஇய'.

### வை என்பது

***381. வையே கூர்மை.***

**பொருள்:** வை எனும் சொல், கூர்மையைக் குறிக்கும்.

**விளக்கம்:** வை = வ் + ஐ. புறமும் அகமும் உயிர்ப்புடன் நிலைத்தல். உடலும் மனமும் உயிர்ப்புடன் நிலைத்தல். (வைதேகி). அம்முழுமையில், காட்சி தெளிவாகும்.

**எடுத்துக்காட்டு:**

'வையிலை நெடுவேல்'.

### எறுழ் என்பது

***382. எறுழ்வலி ஆகும்.***

**பொருள்:** எறுழ் எனும் சொல், வலிமையைக் குறிக்கும்.

**விளக்கம்:** எறுழ் = எ + ற் + உ + ழ். உயர்ந்து பிரிந்து வெளிப்பட்டும் ஆழ்ந்தும். புறநிலை தியானத்தின் ஒரு நிலையாகலாம். அது முழுமையையும் வலிமையும் தரும்.

**எடுத்துக்காட்டு:**

'வாளுடை யெறுழ்த்தோள்'.

### உரிச்சொற்களுக்கு புறனடை

***383. மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்***
***முன்னும் பின்னும் வருபவை நாடி***
***ஒத்த மொழியால் புணர்த்தனர் உணர்த்தல்***
***தத்த மரபின் தோன்றுமன் பொருளே.***

***பொருள்:*** *அமைப்பு வடிவத்தை அறிய, இங்கு கூறிய எல்லா உரிச்சொற்களும், அவற்றிற்கு முன்பும், பின்பும் வருகின்ற எழுத்துகளை ஆராய்ந்து, பொருந்துகின்ற எழுத்துகளுடன், அறிஞர்களால் சேர்க்கப்பட்டுள்ளன.*

*இந்த உரிச்சொற்களின் பொருளை, அவரவர் வாழ்வியல், கலாச்சாரம், பண்பாடு ஆகியவற்றைப் பொறுத்து, மனத்தில் உருவாகும் பொருளைக் கூறிக் கொள்ளலாம். சொற்களின் பொருள், மரபுகளுக்கு ஏற்றவாறு, வேறுபாடுகளுடனேயே புரிந்து கொள்ளப்படுகின்றன.*

***விளக்கம்:*** *உதாரணமாக, கருப்பு எனும் சொல், கோபத்தையும், நிறத்தின் உருவையும் மட்டுமல்லாமல், கருப்பின மக்களை, பேயை, இருட்டை, அறியாமையை குறிக்கலாம்.*

*அதைப் போலவே, சிவப்பு எனும் சொல், கோபத்தையும், நிறத்தின் உருவையும் அல்லாமல், வளமை, சிவப்பின மக்கள், இரத்தம், உயிர்ப்பு, புரட்சி போன்றவற்றையும் குறிக்கலாம்.*

***எடுத்துக்காட்டு:***

*அதிர்வு எனும் சொல் நடுக்கத்தைக் குறிக்கும். அச்சொல்லே, அதிர, அதிரா, அதிரும், அதிர்ந்த, அதிர்ந்து என பல உரிச்சொற்களாய் திரியும்.*

*பாய் எனும் சொல், பரத்தலை மட்டும் குறிக்கும் என்பதில்லை. வேறு ஒரு தத்துவ மரபில், நிலைத்தலையும் குறிக்கலாம். சொல் பிரிக்கப்பட்டு, பொருள் வழங்கும் முறையால், முழுச்சொல்லின் பொருண்மை மாறும்.*

### ***பிறபொருளும் உணர்த்தல்***

***384. கூறிய கிளவிப் பொருள்நிலை அல்லது***
***வேறுபிற தோன்றினும் அவற்றொடு கொளலே.***

***பொருள்:*** *கூறிய உரிச்சொற்களின் பொருள் நிலையானது அல்ல. அவைகளுக்கு பிற பொருட்கள் வந்தாலும், அவற்றுடனும் அறிதல் வேண்டும்.*

***எடுத்துக்காட்டு:***

*'சிவப்பைக் கொடு'. குங்குமத்தைக் கொடு எனப் பொருண்மை வரலாம். இடம், பொருளைப் பொறுத்து, பொருண்மை மாறும்.*

சந்தையில், கோழிகளில் ஒன்று, சிவப்பு வண்ணத்தில் இருந்தால், அங்கே, 'சிவப்பைக் கொடு' என்றால், 'கோழியைக் கொடு' எனப் பொருள்.

### பொருட்குப் பொருள்

***385.* பொருட்குப் பொருள் தெரியின் அதுவரம் பின்றே.**

**பொருள்:** பொருளுக்கு எது பொருள், அப்பொருளுக்கு எது பொருள் என வினவினால், அதற்கு முடிவே இல்லை.

**எடுத்துக்காட்டு:**

பரவு என்றால் என்ன? பரத்தல். பரத்தல் என்றால் என்ன? பாய்தல். பாய்தல் என்றால் என்ன? விரிவாதல். விரிவாதல் என்றால் என்ன? நீட்சி. நீட்சி என்றால் என்ன? வளர்ச்சி. வளர்ச்சி என்றால் என்ன? பெருக்கம். பெருக்கம் என்றால் என்ன? செழுமை. செழுமை என்றால் என்ன?... இவ்வாறு முடிவின்றி தொடரும்.

### பிற சொற் கொணர்ந்து பொருள் உணர்த்தல் வேண்டா என்றல்

***386.* பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின்.**

**பொருள்:** ஆசிரியனுக்கு வல்லமை இருப்பின், சொல்லின் பொருளை, மாணவர்கள் தவறாகப் புரிந்து கொள்ள மாட்டார்கள்.

### உணர்வோர்க்கு விளங்குமாற்றால் பொருளுணர்த்துக என்றல்

***387.* உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே.**

**பொருள்:** புலன்கள் மூலம் உணர்வது, மனத்தின் மூலம் உணர்வதைக் காட்டிலும் வலிமையானது.

**விளக்கம்:** புலன்கள் மூலம் அறிவது நேரடியான அனுபவமாகும். அதில் குழப்பம் நேராது. ஏற்கனவே கிடைத்த அனுபவங்களைக் கொண்டு, புதிய ஒன்றை அனுமானம் மூலமாக உணர்வது, மனத்தால் உணர்வதாகும். அதில் குழப்பம் நேரலாம்.

**எடுத்துக்காட்டு:**

தேன், வெல்லம் போன்று இனிமையானது என்று சொல்லி

உணர்த்துவதைவிட, தேனை ஒரு சில துளிகள் தந்து, சுவைத்துப்பார்க்கச் சொன்னால், அதன் இனிமை புரிந்து விடும். தேனின் பிற பண்புகளும் தெரிந்து விடும். மன உணர்வைக் காட்டிலும், புலன் உணர்ச்சி வலிமையானது.

### சொல்லப்பட்ட பொருள் அப்பொருட்கே என்றல்

***388.*** **மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா.**

***பொருள்:*** சொல்லுக்குப் பொருள் வந்த காரணம், வெளிப் படையாகத் தெரியாது. உரிச்சொற்கள், திரிந்து வந்த காரணத்தால், பொருண்மை வெளிப்படையாய்த் தெரியாது. அவற்றின் மூலத்தை ஆழ்ந்து ஆராய்ந்தால் தெரியும்.

***விளக்கம்:*** பொருண்மை தெரிதல் சொல்லினாகும். சொல்லின் தோற்றத்தை அறிவதன் மூலம் அதன் பொருளை அறியலாம். சொல்லின் தோற்றத்தை, சொல்லைப் பகுத்து ஆய்வதன் மூலம் அறியலாம். சொல்லை அசைகளாகவும், எழுத்துகளாகவும் பிரிப் பதன் மூலம், அதன் பொருண்மையை அறியலாம்.

உதாரணமாக, வயம் எனும் சொல்லை, வயம் = வ் + அய் + அம் என பிரிக்கலாம். வ = உ + அ, என்பதால், ‘வ்’ என்பது ‘உ’ எனும் புறமும், ‘அ’ எனும் அகமும் சேர்ந்த முழுமை எனலாம். அய் = உயிர்ப்புடன் நிலைத்தல் எனும் பொருள் பெறும். அம் என்பது தன்மையைக் குறிக்கும். எனவே, வயம் என்றால், முழுமையாக உயிர்ப்புடன் நிலைக்கும் தன்மை எனலாம். முழுமையாக நிலைத்தல், வலிமையைக் குறிக்கும்.

இவ்வாறு, சொல் ஒவ்வொன்றையும் ஆழ்ந்து ஆராய்ந்தால், அதற்குள்ளேயே பொருள் பொதிந்திருப்பதைக் காணலாம்.

### உரிச்சொற்கு எழுத்து பிரிந்து இசையாமை

***389.*** **எழுத்துப்பிரிந் திசைத்தல் இவணியல்பின்றே.**

***பொருள்:*** எழுத்துகள் பிரிந்து ஒலித்தல், உரிச்சொற்களின் இயல்பல்ல.

***விளக்கம்:*** உரிச்சொற்களைப் பிரித்து ஒலிக்கக் கூடாது. ஏனெனில், உரிச்சொற்கள் பிற சொற்களில் இருந்து திரிந்து வந்தன என்பதால், எழுத்துகளைப் பிரித்து ஒலித்தால், கருதிய பொருண்மையைப்

பெற முடியாமல் போகலாம். எனவே, உரிச்சொற்களின் எழுத்துகள் சேர்ந்தே ஒலிக்கப்பட வேண்டும்.

உதாரணமாக, ‘கடிவய குதிரை’ என்பதை, ‘கடிவ யகுதிரை’ என்றால், பொருள் குழப்பம் ஏற்படும். பொருண்மையைப் பெற முடியாது.

புறனடை

***390.*** ***அன்ன பிறவும் கிளந்த அல்ல***
***பன்முறை யானும் பரந்தன வரூஉம்***
***உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட***
***இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்***
***வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்து***
***ஓம்படை ஆணையின் கிளந்தவற் றியலான்***
***பாங்குற உணர்தல் என்மனார் புலவர்.***

**பொருள்:** கூறியவை இல்லாமல், அவை போன்ற பிற பல உரிச்சொற்களும், பலவகைகளில் குறிப்புகளாக விரிந்து பரவி வரும். அவற்றின் பொருளைக் குறைக்கவோ, கூட்டவோ, புதிய எழுத்துகளைச் சேர்க்கையில், இச்சொல்லில் இருந்துதான் இது வந்தது என அறியும் வழி இல்லாததால், மிகவும் கவனமுடன் சொற்களைப் புணர்த்தி உருவாக்க வேண்டும். கற்றுப் பயிலும் இடத்திற்கேற்ப, உரிச்சொற்களின் பொருளை இணக்கமாக அறிதல் வேன்டும் என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.

**விளக்கம்:** ஒரு சொல்லே, பல மரபுகளில், பல்வேறு பொருளைக் குறிக்கலாம். ஒரு மரபின் பொருளை, வேறொரு மரபில் பொருத்திப் பார்த்தால், ஒட்டு மொத்தப் புரிதலில் குழப்பம் ஏற்பட்டு விடும். அடிப்படையான சொற்களைத் தவறாக புரிந்து கொண்டு விட்டால், அவற்றின் அடிப்படையில் தோன்றும் பல்வேறு கருத்துருவங்களும், எண்ணங்களும் திசைமாறிப் போகும்.

உதாரணமாக, பாய் எனும் சொல், ஒரு மரபில், பரத்தல் எனும் பொருள் கொள்ளலாம். வேறொரு மரபில், நிலைத்தல் எனும் பொருள் கொள்ளலாம். மரபில் தோன்றி வந்து, திரியும் உரிச்சொற்களை, அம்மரபின் பொருண்மையைக் கொண்டே அறிதல் வேண்டும்.

# 9. எச்சவியல்

*எச்சவியல் = எச்சம் + இயல். எச்சம் = எச் + அம். உயரும் இயக்கத் தன்மை.*

*மிகுந்த வழக்கில் உள்ளவை, பெயரியல், வினையியல், உரியியல் போன்று பிற இயல்களில் கூறப்பட்டன. அவ்வியல்களுள் தெளிவாக அடங்காதவை, குறைந்த இடங்களில் வரக்கூடிய எஞ்சிய சொற்கள் இவ்வியலில் கூறப்படுகின்றன.*

### செய்யுட்குரிய சொற்கள்

***391.*** **இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்று**
**அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.**

*செய்யுள் = செய் + உள். படை + மனதுள். படைத்தல். உருவாக்கம்.*

***பொருள்:*** *இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் ஆகிய நான்கு வகைச் சொற்களையே, மனம் உருவாக்குகின்றது / செய்யுள் சேர்த்துக் கொள்கின்றது.*

### இயற்சொல்லினது இலக்கணம்

***392.*** *அவற்றுள்,*
**இயற்சொல் தாமே**
**செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்**
**தம்பொருள் வழாஅமை இசைக்குஞ் சொல்லே.**

*பொருள்:* அவைகளுள், இயற்சொற்கள் என்பன, செம்மையான தமிழ்நிலத்து மக்களின் வாழ்க்கை முறையுடன் சேர்ந்து, தம்பொருள் மாறாமல், ஒலிக்கப்படும் சொற்களாகும்.

***விளக்கம்:*** நெடுங்காலமாகத் தொடர்ந்து வழக்கத்தில் இருக்கும் சொற்கள், இயற்சொற்களாகும்.

***எடுத்துக்காட்டு:*** அலை, ஆல், இலை, ஈ, உரல், ஊசி, எலி, ஏணி, ஒலி, ஓசை, ஔவை, அகம், அடம், அரம், அறம், கல், கால், போன்றவை.

### திரிசொல்லினது இலக்கணம்

***393.*** **ஒருபொருள் குறித்த வேறுசொல் ஆகியும்**
**வேறுபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்**
**இருபாற் றென்ப திரிசொற் கிளவி.**

***பொருள்:*** ஒரு பொருளைக் குறிக்க பல்வேறு சொற்கள் திரிந்து வருவது, பல பொருட்களைக் குறிக்க, ஒரு சொல் திரிந்து வருவது எனத் திரிச்சொல் இரண்டு வகைப்படும்.

***எடுத்துக்காட்டு:***

மலை எனும் ஒரு பொருளைக் குறிக்க, அடுக்கல், ஓங்கல், பிறங்கல், விண்டு, வரை எனப் பல்வேறு சொற்கள் குறிப்பால் திரிந்து வரும். இசையாலும், பண்பாலும் சொற்கள் திரியும்.

கொப்பூழ், தேர்த்தட்டு, யாழ் உறுப்பு போன்று பல பொருட்களைக் குறிக்கும், உந்தி எனும் ஒரு சொல் குறிப்பால்திரிந்து வரும்.

இசையாலும், பண்பாலும் சொற்கள் திரியும்.

### திசைச்சொல்லினது இலக்கணம்

***394.*** **செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினும்**
**தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி.**

***பொருள்:*** செந்தமிழ் நாட்டின் எல்லைகளில் இருக்கும் பன்னிரண்டு நாடுகளின் தொடர்புகளால் உருவான, வழக்கான சொற்கள், திசைசொல் எனப்படும்.

***விளக்கம்:*** செந்தமிழ் நாடு என்பது வடவேங்கடம், தென்குமரி,

குணக்கடல், குடக்கடல் ஆகியவற்றை எல்லைகளாகக் கொண்ட நிலப்பகுதி.

பன்னிரண்டு நாடுகள் என்பவை, செந்தமிழ் நாட்டின் எல்லைகளில், அதாவது, இன்றைய கேரளத்தின் வடக்கிலும், கருநாடகத்தின் தெற்கிலும், ஆந்திராவின் தெற்கிலும் இருந்த சில பகுதிகள் போலும்.

*எடுத்துக்காட்டு:* நைனா, அச்சன், சேட்டன், போன்றவை.

### வடசொல்லினது இலக்கணம்

***395.*** **வடசொற் கிளவி வடஎழுத் தொரீஇ**
**எழுத்தொடு புணர்ந்த சொல்ஆ கும்மே.**

**பொருள்:** வடசொல் என்பது, மாறுபட்ட வடஎழுத்துக்கு, ஒத்தி ருக்கும் தமிழ்எழுத்தோடு சேர்த்து, உருவாக்கப்பட்ட சொல்லாகும்.

***விளக்கம்:*** நிமிஷா எனும் வடசொல், தமிழில், நிமிடம் என்றாகின்றது. விஷா என்பது, விடம் என்றாகின்றது. ரோஜா என்பது ரோசா என்றும், ராஜா என்பது ராசா என்றும், தேஹா என்பது தேகம் என்றும், ஸர்ப்ப என்பது சர்ப்பம் என்றும், ஶ்ரீ என்பது இலங்கையில் சிறீ என்றும், சாக்ஷி என்பது சாட்சி என்றும் ஆனது.

### புறனடை

***396. சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்.***

**பொருள்:** அவ்வாறு, வடஎழுத்துக்கு ஒத்த தமிழ் எழுத்தோடு புணர்ந்தச்சொல், உருமாறி, எழுத்து மாறி, சிதைந்து வந்தாலும், சொல்லமைதி கொண்டால், தடை சொல்லார், அறிஞர்.

***விளக்கம்:*** நிமிஷா என்பது, நிமிசம் ஆகும். நிமிடம் என்று வந்தாலும் தடையில்லை. விஷா என்பது விசம் ஆகும். விடம் என்று வந்தாலும் தடையில்லை. சாக்ஷி என்பது சாச்சி ஆகும். சாட்சி என்று வந்தாலும் தடையில்லை. ஸர்ப்ப என்பது சர்ப்பம் ஆகும். சருப்பம் என்று சிதைந்து வந்தாலும் தடையில்லை.

***397.*** ***அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை***
***வலிக்கும்வழி வலித்தலும், மெலிக்கும்வழி மெலித்தலும்***
***விரிக்கும்வழி விரித்தலுந் தொகுக்கும்வழி தொகுத்தலும்***
***நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்***
***நாட்டல் வலிய என்மனார் புலவர்.***

**பொருள்:** *அந்த நான்கு வகையான சொற்களைக் கொண்டு, கூட்டுச் சொல்லை, சொற்றொடரை அல்லது செய்யுளை உருவாக்கும்போது, அவை இயைந்தும் அமைதியாகவும் வருவதற்காக, தேவைக் கேற்றவாறு, மெல்லெழுத்தை வல்லெழுத் தாக்கியும், வல்லெ ழுத்தை மெல்லெழுத்தாக்கியும், சொல் லிடையே எழுத்தைக் கூட்டியும், சொல்லின் எழுத்துகளில் ஒன்றைக் கழித்தும், ஒரு எழுத்தொலியின் மாத்திரை அளவை அதிகமாக்கியும், ஒரு எழுத்தொலியின் மாத்திரை அளவைக் குறைத்தும், உறுதியாக பொருத்தல் வேண்டும் என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்.*

**எடுத்துக்காட்டு:**

*மெல்லெழுத்தை வல்லெழுத்தாக்கல்:*
*குறுந்தாட் கோழி –> குறுத்தாட் கோழி.*

*வல்லெழுத்தை மெல்லெழுத்தாக்கல்:*
*தட்டை –> தண்டை.*

*சொல்லிடையே எழுத்தைக் கூட்டல்:*
*தண்டுறைவன் –> தண்ணந் துறைவன்.*

*சொல்லின் எழுத்துகளில் ஒன்றைக் கழித்தல்:*
*மழவரை யோட்டிய –> மழவரோட்டிய.*

*ஒரு எழுத்தொலியின் மாத்திரை அளவை அதிகமாக்கல்:*
*பச்சிலை –> பாசிலை.*

*ஒரு எழுத்தொலியின் மாத்திரை அளவைக் குறைத்தல்:*
*உண்டார்ந்து –> உண்டருந்து.*

## சொல்சேர் வகை

*398. நிரல்நிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவைநான் கென்ப மொழிபுணர் இயல்பே.*

*பொருள்:* நிரல்நிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று ஆகிய நான்கும், சொற்கள் இணையும் இயல்பான வழிகள், என்னும் எண்ணம் உடையவர்கள், அறிஞர்.

**விளக்கம்:**

நிரல்நிறை = நிரல் + நிறை. வரிசையின் முழுமை. சொல் வரிசையின் பொருண்மை. சொற்கள், தனித்தனியே வந்து வெவ்வேறு பொருண்மைகளையும், சொற்கள் வரிசையாய்ச் சேர்ந்து வந்து ஒரு புதிய கூட்டுப் பொருண்மையையும் அளிக்கும்.

சுண்ணம் = சுள் + அம். சிறியத் தன்மை. சிறியதாக்கும் தன்மை.

அடிமறி = அடி + மறி. சொல்லின் அடியைக் குறைப்பது.

மொழிமற்று = மொழி + மாற்று. சொல்லின் இடங்களை மாற்றுதல்.

**எடுத்துக்காட்டு:**

கடல் + புறா = கடற்புறா (வலித்தல்)
சுள் + அம் = சுண்ணம் (மெலித்தல்)
பூ + கொடி = பூக்கொடி –> பூங்கொடி (மெலித்தல்)
நிலா + சோறு = நிலாஅச்சோறு (விரித்தல்)
நிலவு (நிலா) + ஒளி = நிலவொளி. (தொகுத்தல்)
நிரல்நிறை: சொல் + மாறி –> சொன்மாறி –> சொம்மாறி. சோமாறி. (நீட்டல்)
ஆன் + பீ = ஆன்பீ –> ஆப்பி. (குறுக்கல்)
சுண்ணம்: சுபம் + மனம் –> சுமன்.
அடிமறி: புட்பம் + கரம் –> புட்கரம். (புஷ்கரம்). நன்மை + செய்தி –> நற்செய்தி.
மொழிமாற்று: மொழி + மாற்று, மாற்று + மொழி. பூ + கொடி, கொடி + பூ.

## நிரனிறைப் பொருள்கொள்ளல்

*399. அவற்றுள்*

*நிரல்நிறை தானே*
**வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்**
**சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.**

**பொருள்:** மேற்கூறிய நான்கினுள், நிரல்நிறை என்பது, வினைச்சொல்லுக்கும், பெயர்ச்சொல்லுக்கும் அடைமொழியாய் முதலில் வரும் சொல்லின் பொருண்மை, நினைவில் நின்று, அடுத்து வரும் (வினைச்சொல் / பெயர்ச்சொல்) சொல்லின் பொருண்மையுடன் இணைந்து கொள்ளும். சொல் ஒரு இடத்தில் தோன்றி, பொருண்மை வேறிடத்தில் நிலைக்கின்றது.

**விளக்கம்:**

1. சொம்மாறி எனும் சொல், சொல் + மாறி என்பனவற்றின் கூட்டுச்சொல்லாகும். 'சொல்' என்பது இங்கே அடைமொழி / உரிச்சொல். 'மாறி' என்பது பெயர்ச்சொல். இரண்டையும் ஒருசேர தொடர்ச்சியாய் ஒலிப்பதால், 'சொல்'லின் பொருண்மை நினைவில் நிற்க, அடுத்து வரும் 'மாறி' யின் பொருண்மையுடன் நெருக்கமாக இணைந்து, புதிய கூட்டுப் பொருண்மையை வெளிப்படுத்துகின்றது. 'சொல்', பின்புலத்தில் நிற்க, 'மாறி' மட்டும் முன்புலத்தில் வருகின்றது.

'சொல்' எனும் சொல்லின் பொருண்மை, வெளிப்பட்ட இடத்திலேயே தோன்றாமல், 'மாறி' எனும் சொல்லின் பொருண் மையுடன் இணைந்து, வேறொரு இடத்தில் கூட்டுப் பொருண் மையாய் வெளிப்படுகின்றது.

2. பூங்கொடி எனும் சொல், பூ + கொடி எனும் சொல்வரிசையால் உருவான கூட்டுச்சொல்லாகும். 'பூ' எனும் சொல், இங்கே அடைமொழி / உரிச்சொல். 'கொடி' என்பது பெயர்ச்சொல். இரண்டையும் ஒருசேர தொடர்ச்சியாய் ஒலிப்பதால், 'பூ'வின் பொருண்மை நினைவில் நிற்க, அடுத்து வரும் 'கொடி' யின் பொருண்மையுடன் நெருக்கமாக இணைந்து, புதிய கூட்டுப் பொருண்மையை வெளிப்படுத்துகின்றது. 'பூ', பின்புலத்தில் நிற்க, 'கொடி' மட்டும் முன்புலத்தில் வருகின்றது. பூப்போன்ற மென்மையான கொடி.

**சுண்ணப் பொருள்கொள்ளல்**

*400. சுண்ணம் தானே*

*பட்டாங் கமைந்த ஈரடி எண்சீர்*
*ஒட்டுவழி அறிந்து துணித்தனர் இயற்றல்.*

*பொருள்:* சுண்ணம் என்பது, இரண்டு அடி எட்டு சீர்களைக் கொன்ட செய்யுளை / சொற்றொடரை இயற்றும்போது, சொற் களின் சேர்கின்ற விதி / வழிமுறைகளை அறிந்து சொற்களைச் சுருக்க வேண்டும்.

*எடுத்துக்காட்டு:*

சுபம் + மன் = சுமன்.

நன்மை + செய்தி = நற்செய்தி. ‘நன்மைச்செய்தி’, ‘நல்லச்செய்தி’ என்றும், இரண்டு சொற்களைச் சேர்க்கலாம். ஆனால், ‘நற்செய்தி’ என்பது மிகவும் இறுக்கமாகின்றது.

### அடிமறிப் பொருள்கொள்ளல்

*401. அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து*
*சீர்நிலை திரியாது தடுமா றும்மே.*

*பொருள்:* அடிமறி வழியில் சேர்ந்த அடிச்சொல்லின் வடிவம் மாறினாலும், சொல்லின் அமைப்பு ஒழுங்குநிலை மாறாது.

*விளக்கம்:* ‘புஷ்கரா’ எனும் சொல், புஷ்பம் + கரம் எனும் சொற்களின் கூட்டுச்சொல். இதில், ‘பம்‘ என்பது தடுக்கப்பட்டு / மறிக்கப்பட்டு, ‘புஷ்கரா’ என்றாகின்றது. ‘புஷ்கரா’ எனும் வடசொல், தமிழில், ‘புட்கரம்‘ என திரியும் / மாறும். ‘புட்’ , ‘கரம்‘ எனும் சீர்களின் நிலை மாறாது.

*எடுத்துக்காட்டு:*

செம்புட்கரம் = ‘செம்புட் கரம்‘ என வரலாம். ‘செம்பு ட்கரம்‘ என வராது.

### புறனடை

*402. பொருள்தெரி மருங்கின்*
*ஈற்றடி இறுசீர் எருத்துவயின் திரியுந்*
*தோற்றமும் வரையார் அடிமறியான.*

*பொருள்:* பொருளைத் தெளிவாக்கும் வகையில், இரண்டு

அடியின் கடைசிச் சீர், அதற்கு முந்தைய சீரின் இடத்தில், வடிவம் மாறி வருவதையும் தடைசெய்யார், அறிஞர்.

**விளக்கம்:**

அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி

பகவன் முதற்றே உலகு.

முதற்றே = முதல் + தே. முதல் தெய்வம். தேவு உலகு = தெய்வமே உலகு. 'முதல் தேவுலகு' என்பது 'முதல்தே உலகு' –> 'முதற்றே உலகு' என ஆனது.

## மொழிமாற்றுப் பொருள்கொள்ளல்

**403. மொழிமாற் றியற்கை**
**சொல்நிலை மாற்றிப் பொருளெதி ரியைய**
**முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்.**

**பொருள்:** சொல்மாற்றல் முறையில், பொருள் மாறுபட்டு வருமாறு, பொருந்தும் வகையில் சொற்களை முன்னும் பின்னும் இடம் மாற்றி வைத்து, பொருள் கொள்ளப்படும்.

**எடுத்துக்காட்டு:**

பூ + கொடி = பூங்கொடி.
கொடி + பூ = கொடிப்பூ.
மலை + பூ = மலைப்பூ.
பூ + மலை = பூமலை.

## மொழிமாறாக் கிளை நுதற் பெயர்கள்

**404. தநநு எஎனும் அவைமுதல் ஆகிய**
**கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா.**

**பொருள்:** த, ந, நு, எ எனும் எழுத்துகளை முதலாகக் கொண்டு உருவாகிய முன்னிலைப் பெயர்களை, முன்னும் பின்னும் இடம் மாற்றி வைத்து, பொருள் கொள்ள முடியாது.

**விளக்கம்:** தாம், தான், நாம், நீர், நின், நும், எல்லார்

தாம் + மனிதர் = தாம்மனிதர். மனிதர் + தாம் = மனிதர்தாம். இதில், 'தாம்' என்பதன் தனித்த பொருளே மாறிவிடுகின்றது.

பொருள் குழப்பம் ஏற்படும். 'மனிதர்கள் தாங்கள்' என்பதற்குப் பதில், 'மனிதர்கள்தாம், விலங்கில்லை' என்கின்றவாறு பொருள் மாறுபடும்.

தான் + மகன் = தான்மகன். மகன் + தான் = மகன்தான். இதிலும், தான் என்பதன் தனித்த பொருள் மாறுகின்றது.

நாம் + மனிதர் = நாம்மனிதர். மனிதர் + நாம் = மனிதர்நாம். இன்று நம் வழக்கில் உள்ளது.

நின் + வழி = நின்வழி. வழி + நின் = வழிநின் என வராது.

நும் + வழி = நும்வழி. வழிநும் என வராது.

எல்லார் + வழி = எல்லார்வழி. வழி + எல்லார் = வழிஎல்லார் என வராது.

### ஒருசொல் அடுக்கு

**405. இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தலென்று**
**அவைமூன் றென்ப ஒருசொல் அடுக்கே.**

**பொருள்:** இசைநிறைவாகவும், அசைநிலையாகவும், பொருளொடு புணர்ந்தும், என மூன்று காரணங்களுக்காகத்தான், ஒரு சொல்லே அடுத்தடுத்து வரும்.

**எடுத்துக்காட்டு:**

இசைநிறை:
'ஏஎ எஎ வம்பன் மொழிந்தனன்'.

அசைநிலை:
'வரும் வரும் பேருந்து'.

பொருளோடு புணர்தல்:
'பாம்பு பாம்பு'.

### சொல்சுருக்கங்கள் இவையெனல்

**406. வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே**
**வினையின் தொகையே பண்பின் தொகையே**
**உம்மைத் தொகையே அன்மொழித் தொகையென்று**
**அவ்வா றென்ப தொகைமொழி நிலையே.**

*தொகை = சுருக்கம்.*

**பொருள்:** வேற்றுமைத்தொகை, உவமத்தொகை, வினைத் தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என ஆறு இடங்களில், சொற்கள் சுருங்கும்.

**எடுத்துக்காட்டு:**

*வேற்றுமைத்தொகை:*

*நிலங்கடந்தான். 'நிலத்தைக் கடந்தான்' என பொருள் வரும். 'நிலத்தை' என்பதில் உள்ள 'அத்து' எனும் சாரியை / இடைச் சொல்லும், 'ஐ' எனும் வேற்றுமை உருபும் இன்றி, 'நிலம்' என்று சுருங்கி வருகின்றது.*

*உவமத்தொகை:*

*'முத்து போன்றப் பற்கள்' என வரும் உவமத் தொடர், 'போன்ற' எனும் சொல் குறைந்து, 'முத்துப்பற்கள்' எனச் சுருங்கி வரும்.*

*வினைத்தொகை:*

*'கொல்யானை' எனும் சொற்தொடர், 'கொன்ற யானை', 'கொல்லுகின்ற யானை', 'கொல்லப்போகும் யானை' என, இறந்த, நிகழ், எதிர்கால வினைகளென, முக்காலத்தையும் குறிக்கும்.*

*பண்புத்தொகை:*

*கருமை + குழல் = 'கருமைக்குழல்' என வராமல், 'கருமை' எனும் பண்பைக் குறிக்கும் சொல், 'கரு' எனச் சுருங்கி, கருங்குழல் என வருகின்றது.*

*உம்மைத்தொகை:*

*'தாயும் சேயும் நலமா?' என்பது, 'தாய் சேய் நலமா?' என 'உம்' சுருங்கி வரும்.*

*அன்மொழித்தொகை:*

*'தேன்மொழி'. மொழி, தேனை வடிப்பதில்லை. 'மொழி'க்கு இயற்கையில் பொருத்தம் இல்லாத 'தேன்' எனும் சொல், இங்குத் 'தேனைப்போன்ற இனிமையான மொழி' என உவமத் தொடரின் பொருளைக் குறிக்க வருகின்றது. வரும்போது, உவமத் தொகையைப் போல், 'போன்ற' எனும் சொல்லின்றி, 'தேன்' எனச் சுருங்கி வருகின்றது.*

## வேற்றுமைத்தொகை

*407. அவற்றுள்,*
**வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல.**

**பொருள்:** மேற்கூறியவற்றுள், வேற்றுமைத்தொகை என்பது, வேற்றுமை உருபுகளின் இயல்புடையது.

**எடுத்துக்காட்டு:**

'காட்டைக்காத்தான்' என்பதில் உள்ள 'ஐ' எனும் வேற்றுமை உருபு இன்றி, 'காடுகாத்தான்' எனச் சுருங்கி வருகின்றது.

'தாயொடு மூவர்' என்பதில் உள்ள, 'ஒடு' எனும் வேற்றுமை உருபு இன்றி, 'தாய் மூவர்' எனச் சுருங்கி வருகின்றது.

'கரும்புக்கு வேலி' என்பதில் உள்ள, 'கு' எனும் வேற்றுமை உருபு இன்றி, 'கரும்புவேலி' எனச் சுருங்கி வருகின்றது.

'வரையின் வீழருவி' என்பதில் உள்ள, 'இன்' எனும் வேற்றுமை உருபு இன்றி, 'வரைவீழருவி' எனச் சுருங்கி வருகின்றது.

'யானையதுகோடு' என்பதில் உள்ள, 'அது' எனும் வேற்றுமை உருபு இன்றி, 'யானைக்கோடு' எனச் சுருங்கி வருகின்றது.

'குன்றத்துக்கண் கூகை' என்பதில் உள்ள, 'அத்து' எனும் சாரியையும், 'கண்' எனும் வேற்றுமை உருபும் இன்றி, 'குன்றக்கூகை' எனச் சுருங்கி வருகின்றது.

## உவமத்தொகை

**408. உவமத் தொகையே உவம இயல.**

**பொருள்:** உவமத்தொகை என்பது, உவம இயல்புடையது.

**எடுத்துக்காட்டு:**

'கார்குழல்'. கருமேகம் போன்ற கூந்தல்.

'பிறைநுதல்'. பிறையைப் போன்ற நுதல்.

'கயல்விழி'. கயலைப் போன்ற விழி.

'பூங்கன்னம்'. பூ போன்ற கன்னம்.

'கிளிமூக்கு'. கிளியின் அலகுபோன்ற மூக்கு.

‘தேனதரம்‘. தேன் போன்ற சுவையான இதழ்கள்.

## வினைத்தொகை

**409. வினையின் தொகுதி காலத் தியலும்.**

**பொருள்:** வினைச்சொல்லின் சுருக்கம், காலத்தின் இயல் புடையது.

**எடுத்துக்காட்டு:**

‘பிளிறானை’ என்பது, பிளிறிய யானை, பிளிறிக்கொண்டிருக்கும் யானை, பிளிறப்போகும் யானை என, இறந்த, நிகழ், எதிர்கால வினைகளென, முக்காலத்தையும் குறிக்கும்.

## பண்புத்தொகை

**410. வண்ணத்தின் வடிவின் அளவிற் சுவையினென்**
**றன்ன பிறவும் அதன்குணம் நுதலி**
**இன்ன திதுவென வரூஉம் இயற்கை**
**என்ன கிளவியும் பண்பின் தொகையே.**

**பொருள்:** வண்ணம், வடிவம், அளவு, சுவை மற்றும் அவை போன்ற பண்புகளை அடைமொழி / உரிச்சொற்களாய் முதலில் கூறி, இது இத்தகையது எனும் இயல்புடைய எல்லாச் சொற்களும், பண்புத்தொகைகளே, பண்புச்சொற்களின் சுருக்கமே.

**எடுத்துக்காட்டு:**

கருமை + கூந்தல் = கருங்கூந்தல்.
வெண்மை + பல் = வெண்பல்.
செம்மை + தமிழ் = செந்தமிழ்.
பசுமை + புல் = பசும்புல்.
வட்டம் + மேசை = வட்டமேசை.
சதுரம் + வயல் = சதுரவயல்.
சிறுமை + வயல் = சிறுவயல்.
பெருமை + கிணறு = பெருங்கிணறு.
இனிமை + மொழி = இன்மொழி.

உம்மைத்தொகை

*411.* **இருபெயர் பலபெயர் அளவின் பெயரே**
**எண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி**
**எண்ணின் பெயரோ டவ்வறு கிளவியும்**
**கண்ணிய நிலைத்தே யும்மைத் தொகையே.**

*பொருள்:* இரண்டு பெயர்கள், பலபெயர்கள், அளவுப்பெயர்கள், எண்களைக் கொண்ட இயற்பெயர்கள், நிறைப்பெயர்கள், எண்களின் பெயர்கள் ஆகிய அந்த ஆறு வகையான சொற்களும், இணைந்த நிலையை உடையது, உம்மைத்தொகை.

*எடுத்துக்காட்டு:*

*இருபெயர்:*

'கோவலனும் கண்ணகியும் மதுரை வந்தனர்' என்பது,
'கோவலன் கண்ணகி மதுரை வந்தனர்' என வரும்.

*பலபெயர்கள்:*

'இராமனும் சீதையும் இலக்குவனும் காடு சென்றனர்' என்பது, 'இராமன் சீதை இலக்குவன் காடு சென்றனர்' என வரும்.

*அளவின் பெயர்:*

'மரக்காலும் படியும் தந்தான்' என்பது, 'மரக்கால் படி தந்தான்' என வரும்.

*எண்இயற்பெயர்:*

'ஒரு வீடும் இரண்டு மரமும் விழுந்தன' என்பது' 'ஒரு வீடு இரண்டு மரம் விழுந்தன' என வரும்.

*நிறைப்பெயர்:*

'தொடியும் கஃசாவும் விற்றான்' என்பது, 'தொடி கஃசா விற்றான்' என வரும்.

'வீசமும் பலமும் வாங்கினான்' என்பது, 'வீசம் பலம் வாங்கினான்' என வரும்.

'ஒரு கிலோவும் ஐந்நூறு கிராமும் வாங்கினான்' என்பது, 'ஒரு கிலோ ஐந்நூறு கிராம் வாங்கினான்' என வரும்.

*எண்ணின் பெயர்:*

‘இரண்டும் இரண்டும் நான்கு’ என்பது, ‘இரண்டு இரண்டு நான்கு’ என வரும்.

## அன்மொழித்தொகை

*412.* **பண்புத்தொக வரூஉங் கிளவி யானும்**
**உம்மை தொக்க பெயர்வயி னானும்**
**வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்**
**ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே.**

**பொருள்:** பண்புச்சொல் சுருங்க வரும் சொல்லின் இடத்திலும், உம்மை சுருங்க வரும் பெயரின் இடத்திலும், வேற்றுமை உருபு சுருங்க வரும் பெயரின் இடத்திலும், அன்மொழிச்சொல்லின் சுருக்கம் சொற்றொடரின் இறுதியில் நிகழும்.

**எடுத்துக்காட்டு:**

பண்புத்தொகை:
கருங்கூந்தல் பசுமை. (கருமை + கூந்தல் + பசுமை)

உம்மைத்தொகை:
கந்தன் சிவன் மாந்தர். (கந்தனும் சிவனும் மாந்தர்)

வேற்றுமைத்தொகை:
‘பூமியைக் கடல் விழுங்கியது’ என வேற்றுமை உருபுடன் இயல்பாய் வருவது, தொகையில், ‘கடல் விழுங்கியது பூமி’ என வரும். ‘பூமி கடல் விழுங்கியது’ என்றோ, ‘கடல் பூமி விழுங்கியது’ என்றோ வராது.

கடல் வண்ணம் மஞ்சள். (கடலின் வண்ணம் மஞ்சள்)

## சொற்களின் சேர்க்கையில் பொருள் சிறத்தல்

*413.* அவைதாம்,
**முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்**
**இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்**
**அம்மொழி நிலையா தன்மொழி நிலையலும்**
**அந்நான் கென்ப பொருள்நிலை மரபே.**

**பொருள்:** அவை யாவை என்றால், முன் சொல்லின் பொருள் நிலைத்தலும், பின் சொல்லின் பொருள் நிலைத்தலும்,

இரண்டு சொற்களின் பொருள்களும் சேர்ந்து நிலைத்தலும், அந்த இரண்டு சொற்களின் பொருளன்றி, வேறொரு இல்லாத பொருள் நிலைத்தலும், என நான்கு வகையில், பொருண்மை நிலைப்பெறுவது வழக்கம்.

**எடுத்துக்காட்டு:**

*முன்சொல்லின் பொருள்:*

பூ + கொடி = பூக்கொடி. பூக்களால் ஆன கொடி. 'பூ' எனும் முன் சொல்லின் பொருள், முதன்மையாகி நிலைபெறுகின்றது.

*பின்சொல்லின் பொருள்:*

பூ + கொடி = பூங்கொடி. பூ போன்ற மென்மையான கொடி. 'கொடி' எனும் பின் சொல்லின் பொருள், முதன்மையாகி நிலைபெறுகின்றது.

*இரண்டு சொற்களின் பொருள்:*

பூ + கொடி மென்மை. பூவும் கொடியும் மென்மையானவை. 'பூ' எனும் முன் சொல்லின் பொருளும், 'கொடி' எனும் பின் சொல்லின் பொருளும், ஒருங்கே முதன்மையாகி நிலைபெறுகின்றது.

*இரண்டு சொற்களின் பொருளன்றி, இல்லாத பொருள் நிலைத்தல்:*

பகல் + கனவு = பகற்கனவு. 'பகல்' இன் பொருளோ, 'கனவி'ன் பொருளோ இன்றி, 'வீணாகும் கற்பனை' எனும், இல்லாத பொருள் வந்து நிலைபெறுகின்றது.

## அறுவகைத் தொகைச்சொற்களும் ஒருசொல் தன்மைய

***414. எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய.***

**பொருள்:** மேற்கூறிய எல்லாத் தொகைகளும் (வேற்றுமைத் தொகை, உவமத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை) ஒற்றைச் சொல்லின் தன்மையுடையது.

**விளக்கம்:** தொகைகளில், இரண்டு சொற்கள் இணைந்து வருகின்றன. ஆனால், பொருண்மை என வரும்போது, ஒருமை யாகவே நிலைபெறுகின்றது.

பூக்கொடி எனும் சொற்தொடர், 'பூ', 'கொடி' என இரண்டு சொற்களைக் கொண்டுள்ளன. ஆனால், 'பூக்கொடி' எனச் சொற்கள்

இணைந்து வரும்போது, 'பூ' வின் பொருண்மையே முதன்மையாகி, அந்த ஒற்றைச் சொல்லின் பொருண்மையாய் நிலைபெறுகின்றது.

பூக்கொடி படர்ந்தது.

நிலங்கடந்தான் வந்தான் (வேற்றுமைத்தொகை)

முத்துப்பறகள் மின்னியது (உவமத்தொகை)

கொல்யானை போனது. (வினைத்தொகை)

கருங்கூந்தல் அலைந்தது (பண்புத்தொகை)

மொட்டு பூ உதிர்ந்தது. (உம்மைத்தொகை – அஃறிணை– மொட்டும், பூவும் உதிர்ந்தது)

பகற்கனவு வந்தது. (அன்மொழித்தொகை)

## உம்மைத் தொகையுள் படுவதொரு வேறுபாடு

**415. உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே**
**பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர்.**

**பொருள்:** ஆனால், உயர்திணை இடத்தில், உம்மைத்தொகை, பலர் பெயர்ச்சொற்களின் தன்மையுடையது, என்னும் கருத்துடையவர்கள் அறிஞர்.

எடுத்துக்காட்டு:

சேர சோழ பாண்டியன் வந்தனர். (சேர சோழ பாண்டியன் வந்தான் என வராது)

## குறிப்பு மொழியினது இலக்கணம்

**416. வாரா மரபின வரக்கூ றுதலும்**
**என்னா மரபின எனக்கூ றுதலும்**
**அன்னவை எல்லாம் அவற்றவற் றியலான்**
**இன்ன என்னுங் குறிப்புரை ஆகும்.**

**பொருள்:** வராத வழக்கங்களை வருவதாய்க் கூறுவதும், எத்தகைய வழக்கமுடையன எனக் கூறுவதும், அத்தகையவை எல்லாம் அவ்வவற்றின் இயல்பால் இத்தகையன என்பதெல்லாம், குறிப்புரை எனப்படும்.

***விளக்கம்:*** *'நிலம் ஓடுகின்றது'. இரயில் வண்டியில் போகும் போது, நிலத்தைத் தூரத்தில் உற்று நோக்கும்போது, இரயில் வண்டிக்குப் பதிலாக, நிலம் பின்னோக்கி ஓடுவது போன்ற மாயத்தோற்றம் தோன்றும். நிலம் ஓடுவதில்லை. ஆனாலும், அம்மாயத் தோற்றத்தைச் சொல்லில் வடிக்கையில், நிகழாதவற்றை நிகழ்ந்ததுபோல் கூறவேண்டியதாய் உள்ளது. குறிப்பால், வேறொன்றை உணர்த்துவது.*

*'மழை மணந்தது'. மழை மணக்காது. மழைநீரால் மண் மணக்கும்.*

*அதனால், மழை மணந்ததுபோல் உருவகப்படுத்தப் படுகின்றது.*

*'மலை மணந்தது'. மலை மணப்பதில்லை. மலைச்செடிகளின் இலையும், பூவும் மணந்தது. அதனால், மலையே மணந்ததுபோல் உணரப்படுகின்றது, உணர்த்தப்படுகின்றது.*

## ***இசைநிறை அடுக்கு***

***417. இசைப்படு பொருளே நான்குவரம் பாகும்.***

***பொருள்:*** *இசையில், ஒரே சொல், நான்கு முறை வரை, அடுத்தடுத்து வரலாம்.*

***விளக்கம்:*** *இசையில், இரண்டு முறையிலிருந்து, நான்கு முறை மட்டுமே, ஒரே சொல் அடுத்தடுத்து வரும்.*

*வா வா வசந்தமே. (இரண்டு அடுக்கு)*
*வா வா வா கண்ணா வா (மூன்று அடுக்கு)*
*ஆலயம் ஆலயம் ஆலயம் ஆலயம் (நான்கு அடுக்கு)*
*கோயில் என்பதும் ஆலயமே.*

## ***விரைவு அடுக்கு***

***418. விரைசொல் அடுக்கே மூன்றுவரம் பாகும்.***

***பொருள்:*** *விரைவுச்சொல், மூன்று முறை மட்டுமே அடுத்தடுத்து வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*'வா வா வா'. 'சீக்கிரம், சீக்கிரம், சீக்கிரம்'.*

*விளக்கம்:* ஒரே விரைவுச்சொல்லை நான்காவது முறை சொன்ன வுடன், மனத்தில் எரிச்சல் ஏற்படுகின்றது, கோபம் வருகின்றது. ஏன்? மூளையில் ஏற்படும் விளைவு என்ன? ஆராய முடியும்.

## அசைநிலை அடுக்கு

**419. கண்டீர் என்றா கொண்டீர் என்றா**
**சென்ற தென்றா போயிற் றென்றா**
**அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி**
**நின்றவழி அசைக்குங் கிளவி என்ப.**

*பொருள்:* 'கண்டீர்', 'கொண்டீர்', 'சென்றது', 'போயிற்று' மட்டும் அல்லாமல், அத்தகைய எல்லாச் சொற்களும், தம்மை அடுத்து, கேள்வியுடன் சேர்ந்து மீண்டும் வருவதை, அசைக்கும் சொல் என்பர், அறிஞர்.

*எடுத்துக்காட்டு:*

கண்டீர், கண்டீரா?
கொண்டீர், கொண்டீரா?
இந்தப் பக்கம் மாடு எதுவும் போச்சு, போச்சா?
அந்தப்பக்கம் ஆடு எதுவும் போயிற்று, போயிற்றா?
பணம் கொடுத்தாய், கொடுத்தாயா?

## இதுவும் அது

**420. கேட்டை என்றா நின்றை என்றா**
**காத்தை என்றா கண்டை என்றா**
**அன்றி அனைத்தும் முன்னிலை யல்வழி**
**முன்னுறக் கிளந்த இயல்பா கும்மே.**

*பொருள்:* 'கேட்டை', 'நின்றை', 'காத்தை', 'கண்டை' மட்டும் அல்லாமல், அத்தகைய எல்லாச் சொற்களும், முன்னிலையில் அடுத்தடுத்து வரும். ஆனால், மேலே கூறியது போல், கேள்வியுடன் சேர்ந்து வராது. இருப்பினும், மேலே கூறியது போன்ற இயல்புடன், அசைச்சொல்லாக வரும்.

*எடுத்துக்காட்டு:*

செய்தி கேட்டை, கேட்டை.

*அங்கு நின்றை, நின்றை.*
*வயலைக் காத்தை, காத்தை.*
*அதைக் கண்டை, கண்டை.*
*ஆற்றில் வெள்ளம் பார்த்தை, பார்த்தை.*

***விளக்கம்:*** *வினாவுக்குறிய எழுத்துகளான ஆ, ஏ, ஓ, இச்சொற் களோடு சேராமல் இருப்பினும், கேள்விக்குரிய தொனியையே, இச்சொற்தொடர்கள் குறிக்கின்றன.*

***வினைமுற்றுக் குறியீடு***

***421. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்***
***சிறப்புடை மரபின் அம்முக் காலமும்***
***தன்மை முன்னிலை படர்க்கை என்னும்***
***அம்மூ விடத்தான் வினையினுங் குறிப்பினும்***
***மெய்மை யானும் இவ்விரண் டாகும்***
***அவ்வா றென்ப முற்றியல் மொழியே.***

***பொருள்:*** *இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று பாகுபடுத்தப்பட்ட வழக்கில், அந்த முக்காலங்களும் தன்னிலை, முன்னிலை படர்க்கை என்னும் அந்த மூன்று இடங்களில், வினைச்சொல்லாகவும், வினைக்குறிப்பாகவும், சொல்லின் இரண்டு அடுக்காகும். இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூன்று காலத்தும் (3), தன்மை ஒருமை, தன்மை பன்மை, முன்னிலை ஒருமை, முன்னிலை பன்மை, படர்க்கை ஒருமை, படர்க்கை பன்மை ஆகிய ஆறும் (6), வினைச்சொல், வினைக்குறிப்பு என இரண்டாகி (2), மொத்தம் 36 (3x6x2) முற்றியல் சொற்கள் என்பர், அறிஞர்.*

***எடுத்துக்காட்டு:***

*இறந்தகாலம்: (சாப்பிட்டாயா?)*

*சாப்பிட்டேன் சாப்பிட்டேன். (தன்னிலை – ஒருமை – இறந்தகாலம் – வினைச்சொல்)*
*சாப்பிடாமல் இருப்பேனா இருப்பேனா? (தன்னிலை – ஒருமை – இறந்தகாலம் – வினைக்குறிப்பு)*
*சாப்பிட்டோம் சாப்பிட்டோம். (தன்னிலை – பன்மை – இறந்தகாலம் – வினைச்சொல்)*
*சாப்பிடாமல் இருப்போமா இருப்போமா? (தன்னிலை –*

*பன்மை – இறந்தகாலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிட்டாய் சாப்பிட்டாய். (முன்னிலை – ஒருமை – இறந்தகாலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் இருப்பாயா இருப்பாயா? (முன்னிலை – ஒருமை –இறந்தகாலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிட்டீர்கள் சாப்பிட்டீர்கள். (முன்னிலை – பன்மை – இறந்தகாலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் இருப்பீர்களா இருப்பீர்களா? (முன்னிலை – பன்மை – இறந்தகாலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிட்டார் சாப்பிட்டார். (படர்க்கை – ஒருமை – இறந்தகாலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் இருப்பாரா இருப்பாரா? (படர்க்கை – ஒருமை – இறந்தகாலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிட்டார்கள் சாப்பிட்டார்கள். (படர்க்கை – பன்மை – இறந்தகாலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் இருப்பார்களா இருப்பார்களா? (படர்க்கை – பன்மை –இறந்தகாலம் – வினைக்குறிப்பு)*

*நிகழ்காலம்: (சாப்பிடுகிறாயா?)*

*சாப்பிடுகிறேன் சாப்பிடுகிறேன். (தன்னிலை – ஒருமை – நிகழ்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் இருக்கிறேனா இருக்கிறேனா? (தன்னிலை– ஒருமை – நிகழ்காலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிடுகிறோம் சாப்பிடுகிறோம். (தன்னிலை – பன்மை – நிகழ்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் இருக்கிறோமா இருக்கிறோமா? (தன்னிலை – பன்மை –நிகழ்காலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிடுகிறாய் சாப்பிடுகிறாய். (முன்னிலை – ஒருமை – நிகழ்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் இருக்கிறாயா இருக்கிறாயா? (முன்னிலை – ஒருமை – நிகழ்காலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிடுகிறீர்கள் சாப்பிடுகிறீர்கள். (முன்னிலை – பன்மை – நிகழ்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் இருப்பீர்களா இருப்பீர்களா? (முன்னிலை – பன்மை – நிகழ்காலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிடுகிறார் சாப்பிடுகிறார் (படர்க்கை – ஒருமை – நிகழ்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் இருக்கிறாரா இருக்கிறாரா? (படர்க்கை – ஒருமை*

*– நிகழ்காலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிடுகிறார்கள் சாப்பிடுகிறார்கள். (படர்க்கை – பன்மை – நிகழ்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் இருக்கிறார்களா இருக்கிறார்களா? (படர்க்கை – பன்மை – நிகழ்காலம் – வினைக்குறிப்பு)*

*எதிர்காலம்: (சாப்பிடுவாயா?)*

*சாப்பிடுவேன் சாப்பிடுவேன். (தன்னிலை – ஒருமை – எதிர்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் போவேனா போவேனா? (தன்னிலை – ஒருமை – எதிர்காலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிடுவோம் சாப்பிடுவோம். (தன்னிலை – பன்மை – எதிர்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் போவோமா போவோமா? (தன்னிலை – பன்மை – எதிர்காலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிடுவாய்ச் சாப்பிடுவாய். (முன்னிலை – ஒருமை – எதிர்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் போவாயா போவாயா? (முன்னிலை – ஒருமை – எதிர்காலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிடுவீர்கள் சாப்பிடுவீர்கள். (முன்னிலை – பன்மை – எதிர்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் போவீர்களா போவீர்களா? (முன்னிலை – பன்மை – எதிர்காலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிடுவார் சாப்பிடுவார். (படர்க்கை – ஒருமை – எதிர்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் போவாரா போவாரா? (படர்க்கை – ஒருமை – எதிர்காலம் – வினைக்குறிப்பு)*

*சாப்பிடுவார்கள் சாப்பிடுவார்கள். (படர்க்கை – பன்மை – எதிர்காலம் – வினைச்சொல்)*

*சாப்பிடாமல் போவார்களா போவார்களா? (படர்க்கை – பன்மை – எதிர்காலம் – வினைக்குறிப்பு)*

***புறனடை***

***422. எவ்வயின் வினையும் அவ்விய னிலையும்.***

***பொருள்:*** *தன்மை முன்னிலை படர்க்கை ஆகிய இடங்களின் வினைச்சொற்கள், அவ்வியல்புகளுடன் வரும்.*

**விளக்கம்:** சாப்பிட்டேன், சாப்பிட்டாய், சாப்பிட்டார் போன்ற வினைச்சொற்கள், அவ்வியல்புகளுடன், மேற்கூறிய இடங்களில், பொருந்தி வரும். அதாவது, 'அவர் சாப்பிட்டார் சாப்பிட்டார்' என்றும், 'அவர்கள் சாப்பிட்டார்கள் சாப்பிட்டார்கள்' என்றும், தன்மை முன்னிலை படர்க்கை ஆகிய மூன்று இடங்களிலும், ஒருமை பன்மைக்கேற்றவாறும் காலங்களுக்கு ஏற்றவாறும், வினைச்சொற்கள் மாறி வரும்.

### அடுக்கி வரினும் பெயர் முடிபினவே

**423.** **அவைதாம்,**
**தத்தம் கிளவி அடுக்கிந வரினும்**
**எத்திறத் தானும் பெயர்முடி பினவே.**

**பொருள்:** பல வினைச்சொற்கள் அடுத்தடுத்து வந்தாலும், எல்லா வகையிலும், பெயர்ச்சொல்லைக் கொண்டு முடிகின்ற தன்மையுடையனவே.

**எடுத்துக்காட்டு:**

'வந்தான், தின்றான், ஓடினான், ஆடினான், பாடினான், பாண்டியன்' என எத்தனை வினைச்சொற்கள் அடுக்கி வந்தாலும், பெயர்ச்சொல்லைக் கொண்டு முடிந்து, பொருண்மையில் முற்றுப்பெறும்.

### எச்சச் சொற்களின் பாகுபாடு

**424.** **பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை**
**எதிர்மறை உம்மை எனவே சொல்லே**
**குறிப்பே இசையே ஆயீ ரைந்தும்**
**நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவி.**

**பொருள்:** பிரிநிலை, வினை, பெயர், ஒழியிசை, எதிர்மறை, உம்மை, என, சொல், குறிப்பு, இசை ஆகிய இரண்டு ஐந்தான பத்தும், ஒழுங்கு முறையில் தோன்றும் பொருள் எச்சச் சொற்களாம்.

### பிரிநிலை எச்சத்திற்கு முடிபு உணர்த்துதல்

**425.** **அவற்றுள்,**

*பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின.*

***பொருள்:*** *அவற்றுள், பிரிநிலை எச்சம் என்பது, பிரிநிலைப் பெயரைக் கொண்டு முடியும்.*

***எடுத்துக்காட்டு:***

*'அவனே வந்தான்'. இதில், 'அவனே' என்பது பிரிநிலை. பிரி–நிலையில், பொருள் முழுமையாகாமல் எஞ்சுகின்றது. இங்கு, 'வந்தான்' என்று ஆண்பாலில் ஒழுங்கு முறையில் முடிந்து, பொருள் முழுமை பெறுகின்றது. தன்னிலை, முன்னிலை படர்க்கை ஆகிய இடங்கள், ஒருமை, பன்மை மற்றும் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகியவற்றிற்கேற்ப, வினைச்சொற்கள் மாறி வந்து, பொருள் முழுமை பெறும்.*

### வினையெச்சத்திற்கு முடிபு

***426. வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்***
***நினையத் தோன்றிய முடிபா கும்மே***
***ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே.***

***பொருள்:*** *வினையெச்சச் சொல்லுக்கு, வினைச்சொல்லும், வினைக்குறிப்பும், பொருள் நிறைவு செய்ய வரும் முடிவுகளாகும். வினைக்குறிப்பு, தான் வரும் இடங்களில், வினையுடன் வரும்.*

*'வந்து...' எனும் வினையெச்சச் சொல்லை, 'விட்டான்' எனும் வினைச்சொல்லோ, 'விடாமலா போகிறான்?' எனும் வினைக்குறிப்போ, பொருள் நிறைவைச் செய்ய வரும்.*

*'வந்து... விடாமலா போகிறான்? (வினைக்குறிப்பு) வருவான்' (வினையாக்கம்).*

### பெயரெச்சத்திற்கு முடிபு

***427. பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே.***

***பொருள்:*** *பெயரெச்சச் சொல், பெயர்ச்சொல்லுடன் முடியும்.*

***விளக்கம்:*** *'உண்கிறான்...' என்றதும், 'கந்தனா', 'சாந்தனா' எனும் ஐயம் தோன்றும். 'யார்?' என வினவியதும், 'கந்தன்' என்றோ 'சாந்தன்' என்றோ பெயர்ச்சொல்லுடன் முடியும்.*

*உண்கிறான்... – பெயரெச்சம்.*

*கந்தன் / சாந்தன் ... – பெயர்.*

**ஒழியிசை எச்சம்**

***428. ஒழியிசை எச்ச மொழியிசை முடிபின.***

**பொருள்:** *ஒழியிசை எச்சச்சொல், ஒழியிசையைக் கொண்டு முடியும்.*

**விளக்கம்:** *'மன்' என்பது ஒழியிசை. மன் என்றால், (ம் + அன்) 'கொண்டு மூடியதை / அமைதியை / ஆன்மாவை/ உயிரை நெருங்கி உணர்' எனப் பொருள்படும்.*

**எடுத்துக்காட்டு:**

*'கூரியது வாண்' (அளவு இறந்தது வெளி) என்பது ஒழி–யிசை எச்சமாக, 'மன்' எனும் ஒழியிசை வந்து முடிந்து, 'அளவு இறந்தது வெளி, அதை மனத்தால் உணர்' என, பொருண்மை முழுமையாகும்.*

*'ஓ' என்பதும் ஒழியிசை. 'உண்க வந்தானோ?'. (உண்கவோ வந்தான்)*

**எதிர்மறை எச்சம்**

***429. எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின.***

**பொருள்:** *எதிர்மறை எச்சம், எதிர்மறைப் பொருள் கொண்டு முடியும்.*

**எடுத்துக்காட்டு:**

*'யானோ அரசன்' என்பது எதிர்மறை எச்சம். 'யானே கள்வன்' என எதிர்மறையில் முடியும்.*

**உம்மை எச்சத்திற்கு முடிபு கூறுதல்**

***430. உம்மை எச்சம் இருவீற் றானும்***
***தன்வினை ஒன்றிய முடிபா கும்மே.***

*பொருள்:* உம்மை எச்சம் இரண்டு பெயர்ச்சொற்களின் முடிவிலும், ஒத்த வினைச்சொல்லைக் கொண்டு முடியும்.

*எடுத்துக்காட்டு:*

'கந்தனும் சாத்தனும் வந்தார்கள்', எனும் இயல்பான கூற்று, 'கந்தன் சாத்தன் வந்தார்கள்' எனும் உம்மைத் தொகையாகும்.

அதுவே, உம்மை எச்சமாக, 'கந்தன் வந்தான், சாத்தன் வந்தான்' என, இரண்டு பெயர்ச்சொற்களின் முடிவிலும், ஒத்த வினைச்சொல்லைக் கொண்டு முடியும்.

'கந்தனும் வந்தான், சாத்தனும் போனான்' என வேறுபட்ட வினைச்சொற்களைக் கொண்ட கூற்றுகள், 'கந்தன் வந்தான், சாத்தன் போனான்' என வருவது, உம்மை எச்சம் ஆகாது.

### எச்ச உம்மைகளின் கால மயக்கம்

**431.** **தன்மேல் செஞ்சொல் வரூஉங் காலை**
**நிகழூங் காலமொடு வாராக் காலமும்**
**இறந்த காலமொடு வாராக் காலமும்**
**மயங்குதல் வரையார் முறைநிலை யான.**

*பொருள்:* (ஆனால்,) உம்மை எச்சம் செஞ்சொல்லாக வருகின்றபோது, நிகழ்கால வினைச்சொல்லுடன், எதிர்கால வினைச்சொல்லும்; இறந்தகால வினைச்சொல்லுடன், எதிர்கால வினைச்சொல்லும், நிகழும் முறையை வைத்து, வந்து முடிவதைத் தடுக்கமாட்டார்கள், அறிஞர்.

*எடுத்துக்காட்டு:*

கூழ் உண்கிறான், சோறும் உண்பான். (நிகழ்காலம், எதிர்காலம்)
கூழ் உண்டான், சோறும் உண்பான். (இறந்தகாலம், எதிர்காலம்)

அல்லது

*பொருள்:* உம்மை எச்சத்தை அடுத்து, செஞ்சொல் ('உம்' இல்லாத, முழுமையான, திரியாத சொல்) வரும்போது, நிகழ்கால வினைச்சொல்லுடன், எதிர்கால வினைச்சொல்லும்; இறந்தகால வினைச்சொல்லுடன், எதிர்கால வினைச்சொல்லும், நிகழும் முறையை வைத்து, வந்து முடிவதைத் தடுக்கமாட்டார்கள், அறிஞர்.

எடுத்துக்காட்டு:

கூழ், சோறு உண்பான் – உம்மை எச்சக் கூற்று. ('கூழும் சோறும் உண்பான்' என்பது இயல்பான கூற்று)

கூழ் உண்கிறான், சோறு உண்பான்.
கூழ் உண்டான், சோறு உண்பான்.

### வினையொடு முடியும் எனஎன் எச்சம்

**432. எனஎன் எச்சம் வினையொடு முடிமே.**

**பொருள்:** 'என' எனும் எச்சம், வினைச்சொல்லுடன் முடியும்.

**எடுத்துக்காட்டு:**

'கொல்லெனச் சிரித்தாள்'.
'வல்லெனக் குரைத்தது'.

### மற்ற எச்சங்களுக்கு முடிபு கூறுதல்

**433. எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சுபொருட் கிளவி இலவென மொழிப.**

**பொருள்:** பத்து எச்சங்களுள், மீதமுள்ள மூன்றான, 'சொல்', 'குறிப்பு', 'இசை' ஆகியவற்றை அடுத்து வந்து முடியும், எச்சப் பொருளைக் குறிக்கும் சொல் இல்லை, என்று கூறுவர் அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

'சொல்...'. (நடந்ததை)

'குறிப்பாக..' ('பகைவன் சேனைகளைத் திரட்டுகிறான்'. ''குறிப்பாக..''. 'நம்மேல் போர் தொடுக்கலாம்'.)

'இசை...' (பண்ணை)

### சொல்லெச்சமும் குறிப்பெச்சமும் இசையெச்சமும்

**434. அவைதாம்,
தத்தம் குறிப்பின் எச்சம் செப்பும்.**

**பொருள்:** சொல்லும், குறிப்பும் இசையும், தங்களது சொல்லைக்

*கொண்டே, எஞ்சிய பொருளை உரைக்கும்.*

***எடுத்துக்காட்டு:***

*உரக்கக் கூறினான். (சொல்)*
*துண்ணெனத் துடித்தது. (குறிப்பு)*
*ஒல்லென ஒலித்தது. (இசை)*

### சொல் எச்சம்

***435. சொல்என் எச்ச முன்னும் பின்னும்***
***சொல்அள வல்லது எஞ்சுதல் இலவே.***

***பொருள்:*** *சொல் எனும் எச்சத்தின் முன்னும் பின்னும், சொல்லின் மாத்திரை அளவன்றி, எஞ்சி நிற்பது ஏதும் இல்லை.*

***எடுத்துக்காட்டு:***

*(நடந்ததை) சொல்..*
*சொல்... (நடந்ததை).*

### இடக்கர் அடக்கல்

***436. அவைஅல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.***

***பொருள்:*** *அவைக்குப் பொருந்தாத, அருவருப்பூட்டும் சொல்லை மறைத்து, அதன் பொருளை, வேறு சொற்களைக் கொண்டு கூறுதல்.*

*இது, ஒரு வகையில், சொல் எச்சம்.*

***எடுத்துக்காட்டு:***

*ஆற்றுக்குப் போய்விட்டு வருகிறேன். (மலம் கழிக்கப் போகிறேன்)*

### புறனடை

***437. மறைக்குங் காலை மரீஇய தொராஅல்.***

***பொருள்:*** *அவ்வாறு, மறைக்க வேண்டிய சூழலில், மருவி வந்த மென்மையான சொற்களை விலக்க, மறைக்க வேண்டியதில்லை.*

சொல்ல வேண்டியதைத் தெளிவாக்குதல் அவசியம்.

*எடுத்துக்காட்டு:*

*ஆட்டுப்பிழுக்கை. (ஆட்டுப்புட்டை) ஆப்பி. (மாட்டுச்சாணி)*

### இரப்பை உணர்த்தும் சொற்கள்

**438. ஈதா கொடுஎனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைத்தே.**

**பொருள்:** *'ஈ', 'தா', 'கொடு'* என வரும் மூன்று சொற்களும், இரக்கும் சொல் ஆகும் நிலையை உடையது.

### ஈ என்பது

**439. அவற்றுள்,
ஈஎன் கிளவி இழிந்தோன் கூற்றே.**

**பொருள்:** அவற்றுள், 'ஈ' எனும் சொல்லைக் கொண்டு, வசதி குறைந்தவன், வசதி மிகுந்தவனிடம், தனக்கு தருமாறு கேட்பான்.

*எடுத்துக்காட்டு:*

*'சோறு ஈயம்மா'. 'உடை ஈயய்யா'. 'காசு ஈயய்யா'.*

### தா என்பது

**440. தாவென் கிளவி யொப்போன் கூற்றே.**

**பொருள்:** 'தா' எனும் சொல்லைக் கொண்டு, ஒருவன், வசதியில் தனக்கு இணையானவனிடம், தனக்கு தருமாறு கேட்பான்.

*எடுத்துக்காட்டு:*

*'சோறு தா'. 'உடை தா'. 'காசு தா'.*

### கொடு என்பது

**441. கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே.**

**பொருள்:** 'கொடு' எனும் சொல்லைக் கொண்டு, வசதியில்

உயர்ந்தோன், வசதியில் தாழ்ந்தவனிடம், தனக்கு தருமாறு கேட்பான்.

**எடுத்துக்காட்டு:**

'சோறு கொடு'. 'உடை கொடு'. 'காசு கொடு'.

### கொடு என்பது குறிப்பாய் வருதல்

***442.*** **கொடுஎன் கிளவி படர்க்கை யாயினும்**
**தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பின்**
**தன்னிடத் தியலும் என்மனார் புலவர்.**

*பொருள்:* 'கொடு' எனும் சொல், படர்க்கைக்கு உரியது என்றாலும், தன்னையே, மூன்றாமவன் போல் கூறும் குறிப்புச் சொல்லால், தன்னிலையில் அது பயன்படுத்தப்படும், என்னும் கருத்துடையவர்கள் அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

(ஒருவனின் இயற்பெயர் கந்தன். 'நான் தருவேன்', என்பதற்குப்பதில், அவனே) 'கந்தன் கொடுப்பான்', என்பது.

இது குறிப்பு எச்சம்.

### இசை எச்சம்

***443.*** **பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்**
**சினைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்**
**தொன்னெறி மொழிவயின் ஆஅ குநவும்**
**மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்**
**மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்**
**அன்றி அனைத்தும் கடப்பா டிலவே.**

*பொருள்:* நிலையான பெயர்ச்சொல்லின் ஆகார ஒலி அகரமாக குறுகுதலும், நிலையான உடல் உறுப்புச்சொல்லின் ஆகார ஒலி அகரமாக குறுகுதலும், பழமையான ஒழுங்குடைய சொல்லின் இடத்தில் ஆகார ஒலி அகரமாக குறுகுதலும், சொல்லின் எழுத்து அமைப்பு மாறிவரும்போது ஆகார ஒலி அகரமாகக் குறுகுதலும், மந்திரப் பொருள் இடத்தில் ஆகார ஒலி அகரமாகக் குறுகுதலும் மட்டுமின்றி, அத்தகைய பிற அனைத்திலும், ஆகார ஒலி அகரமாகக்

குறுகுதலுக்குத் தடையில்லை.

**எடுத்துக்காட்டு:**

நிலையான பெயர்ச்சொல்:
கந்தா –> கந்த.

நிலையான உடல் உறுப்புச்சொல்:
தலா –> தல.

பழமையான ஒழுங்குடைய சொல்:
மா –> ம.

எழுத்தமைப்பு மாறிய சொல்:
கனா –> கன.

மந்திரப்பொருள் இடம்:
சிவா சிவா –> சிவ சிவ.

### செய்யாய் என்பது செய் என நிற்றல்

**444. செய்யாய் என்னு முன்னிலை வினைச்சொல்**
**செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே.**

**பொருள்:** 'செய்யாய்' என்னும் முன்னிலை வினைச்சொல், 'செய்' என்னும் பொருள் கொள்ளும் இடமும், உள்ளது.

**எடுத்துக்காட்டு:**

'நல்ல நாள் இன்றைக்கு, எங்கள் வீட்டில் சாப்பிடாதீர்கள்'. (செய்யாய்). 'சாப்பிடுங்கள்' எனப் பொருள் கொள்ளப்படும்.

'தம்பி, அதைச் செய்யாதே'. (செய்யாய்). 'செய்' என்னும் பொருள் கொள்ளப்படும்.

**விளக்கம்:** சொல்லுகின்ற தொனிகள், வேறுபட்ட பொருளை, எஞ்சிய பொருளை வெளிப்படுத்துகின்றது.

### ஈகார ஏகார இடைச்சொற்கள் முன்னிலைக்குப் பொருந்தி வருதல்

**445. முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்**
**அந்நிலை மரபின் மெய்ஊர்ந்து வருமே.**

**பொருள்:** முன்னிலைச் சொல்லை அடுத்து, முன்னிலைக்குரிய

வழக்கத்திற்கு ஏற்ப, 'ஈ' யும், 'ஏ'வும், மெய்யுடன் சேர்ந்து வரும்.

**எடுத்துக்காட்டு:**

*நீ செய்தீ. நீ செய்வீ.*

*நீர் சென்றே. நீர் போவே.*

இதுவும் இசை எச்சம்.

புறனடை

***446. கடிசொல் இல்லைக் காலத்துப் படினே.***

**பொருள்:** நூற்பா 444–ல் கூறிய, முன்னிலைச் சொற்களை அடுத்து வரும் வினைச்சொற்கள், நிகழ்காலத்தில் இருந்தால், சொல் குறைந்து வராது.

**எடுத்துக்காட்டு:**

*'நீ செய்யா (செய்யாய்)', என வராது.*

அல்லது

**பொருள்:** நூற்பா 444–ல் கூறிய, முன்னிலைச் சொற்களை அடுத்து வரும் வினைச்சொற்கள், நிகழ்காலத்தில் இருந்தால், விரைவுச்சொல் வராது.

**எடுத்துக்காட்டு:**

*'நீ விரைவாய்ச் செய்யாதே (செய்யாய்)', என வராது.*

குறைச்சொல்லின் நிறைப்பெயர் இயல்பு

***447. குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி அறிதல்***
***குறைத்தன வாயினும் நிறைப்பெயர் இயல.***

**பொருள்:** நூற்பா 445–ல் கூறியவாறு, முழுச்சொற்களைக் குறைத்து, குறைச்சொற்களாக்கும் வழி அறிதல் வேண்டும். அச்சொற்கள், குறைந்த வடிவமுடையதாயினும், முழுச்சொல்லின் பொருள் இயல்பை உடையன.

**விளக்கம்:** சொற்களை, தலை, இடை, கடை என மூன்று வகையில் குறைக்கலாம்.

*தலை:*
***தாமரை -> மரை.***

*இடை:*
*வருவான் -> வருவன்.*
*குன்றியக்கால் -> குன்றிக்கால்.*

*கடை:*

*நீலம் -> நீல்.*
*செய்தீர் -> செய்தீ.*
*செய்வீர் -> செய்வீ.*

### இடைச்சொற்களும் வேற்றுமைச்சொற்களாதல்

***448. இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே.***

***பொருள்:*** *ஆறு வேற்றுமை உருபுகளான, ஐ, ஒடு, கு, இன், அது, கண் மட்டுமின்றி, அ, ஏ, ஓ, ஔ, அன், ஆன், அம், ஆம், ஆர், உம், எல், மன், தில், கொல், கொன், என, அம்ம, ஆங்க, என்று, என்றா, எற்று, மற்று, மற்றை போன்ற இடைச்சொற்கள் அனைத்தும், பெயரையும் வினையையும் வேற்றுமைப்படுத்தும் சொல்லே.*

### உரிச்சொற்களும் வேற்றுமைச்சொற்களாதல்

***449. உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய.***

***பொருள்:*** *உரிச்சொற்களிலும், வேற்றுமைச் சொற்களாகுபவை, உள்ளன.*

***விளக்கம்:*** *பல உரிச்சொற்களும், வேற்றுமை உருபுகளைப் போலவும், இடைச்சொற்களைப் போலவும், பெயரையும் வினை யையும் வேற்றுமைப்படுத்துகின்றன.*

***எடுத்துக்காட்டு:***

*நல்ல பையன்.*
*நன்கு செய்தான்.*

### செயவென் னெச்சம் செய்தென் னெச்சமாதல்

***450. வினைஎஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.***

*பொருள்:* வினையெச்சச் சொல்லும், வேறு பலவற்றைக் குறிக்கும்.

*எடுத்துக்காட்டு:*

'கோழி கூவ, பொழுது புலர்ந்தது'.

1.'கோழி கூவியது, பொழுது புலர்ந்தது' என்பதாகப் பொருள் தந்து, 'கூவ' எனும் நிகழ்கால வினையெச்சம், 'கூவியது' எனும் இறந்தகால வினையெச்சமாகின்றது.

2. 'கூவிய கோழி' எனப் பொருள் வந்து, வேற்றுமைப்பொருளைத் தருகின்றது.

3. கோழியின் கூவல், விடியலை குறிப்பால் உணர்த்துகின்றது.

4. கோழியின் கூவலால், பிற உயிர்கள் விழிப்பது புலனாகின்றது.

5. கோழியின் கூவல், நாமும் எழவேண்டும் என அறிவுறுத்து கின்றது.

## மொழிப்பொருள் வேறுபாடு

**451. உரையிடத் தியலும் உடனிலை அறிதல்.**

*பொருள்:* செய்யுளில் அல்லாமல், பேச்சின் வெவ்வேறு தொனி களால், உணர்த்தப்படும் வெவ்வேறு பொருட்கள், உடனடியாய்த் தோன்றும்.

## வினைக்குறிப்புச் சொல், பொருள்தரும் வேறுபாடு

**452. முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே**
**இன்ன என்னும் சொல்முறை யான.**

முன்னம் = முன் + அம். முன் தன்மை. முன்னால் வருதல். அடுத்து வருவது. முன்னத்தின் = முன்னால் / அடுத்து வருவதன்.

*பொருள்:* எத்தகைய தொனியில் சொல்லுகின்றோம் என்பதைப் பொறுத்து, பொருளை முன்பே உணரக்கூடிய சொற்களும் உள்ளன.

*எடுத்துக்காட்டு:*

1. 'கோழி கூவிற்று' என்றதும், அடுத்து, 'எழுந்திரு' எனச் சொல்வதற்கு முன்பே, 'எழவேண்டும்' எனும் பொருள்

உணரப்படும்.

2. 'கோழி கூவிற்று' என்றதும், அடுத்து, 'நேரமாயிற்று' எனச் சொல்வதற்கு முன்பே, 'விரைந்து எழவேண்டும்' எனும் பொருள் உணரப்படும்.

## ஒருபொருள் இருசொல்

**453. ஒருபொருள் இருசொற் பிரிவில வரையார்.**

**பொருள்:** ஒரு பொருளையே குறிக்கும் இரண்டு சொற்கள் அடுத்தடுத்து வருவதற்கும் தடைசொல்லார், அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

' சேவல் கோழி கூவிற்று'. (பெயர்)
'கூவிற்று கூவிற்று'. (வினை)

## பால் வழுவமைதி

**454. ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகும் இடனுமா ருண்டே.**

**பொருள்:** ஒருமையைக் குறிக்கும் பெயர்ச்சொல், பன்மைக்கு வரும் இடமும் இங்கு உண்டு.

**எடுத்துக்காட்டு:**

'யான் எம் ஊர் புகுவம்'. 'யான்' என்பது ஒருமையைக் குறிக்கும். 'எம்' எனும் உரிச்சொல்லும், 'புகுவம்' எனும் எதிர்கால வினைச்சொல்லும், பன்மையைக் குறிக்கும். ஆனாலும், இவ்வழு அமைதியாக ஏற்கப்படும்.

**விளக்கம்:** சொற்தொடரைத் துவங்கும்போது, தன்னிலை ஒருமையாக துவங்கி, இடையில் தன் ஊரைப்பற்றியும், தன்னைப் பற்றியும் மனத்தில் உயர்ந்த பெருமிதத்தால், உரிச்சொல்லும், வினைச்சொல்லும் பன்மை வடிவைப் பெறுகின்றன.

## முன்னிலையொருமை பன்மையில் முடிதல்

**455. முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை இன்றே**

ஆற்றுப்படை மருங்கில் போற்றல் வேண்டும்.

**பொருள்:** முன்னிலையைக் குறிக்கின்ற ஒருமைச்சொல், பன்மை வினைச்சொல்லைக் கொண்டு முடிந்தாலும் தடையில்லை. பிறரை வழிப்படுத்தும்போது, இதை, பயன்படுத்திக் கொள்ளலாம். ஆற்றுப்படை எனும் செய்யுள் வகையில், இதைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

**1. எடுத்துக்காட்டு:**

'கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ (மலைபடுகடாம். 50)

ஒருவி ரொருவி ரோம்பினிர் கழிமின்'. (மலைபடுகடாம். 218)

**விளக்கம்:** 'தலைவ' என்பது, முன்னிலையைக் குறிக்கும் ஒருமைச்சொல், 'கழிமின்' எனப் பன்மையைக் குறிக்கும் வினைச்சொல்லுடன் முடிகின்றது.

**2. எடுத்துக்காட்டு:**

'தம்பி, அதைச் செய்யாதீர்கள்'. இதில், 'தம்பி' என்பது முன்னிலையைக் குறிக்கும் ஒருமைச்சொல். 'செய்யாதீர்கள்' என்பது பன்மையைக் குறிக்கும் வினைச்சொல். இச்சொற்தொடருக்குத் தடையில்லை.

**விளக்கம்:** இது உளவியல் வழியாக, எளிமையாக வழிப்படுத்துதலாகும். 'தம்பி அதைச் செய்யாதே' என்றால், குழந்தை கேட்க மாட்டான். 'தம்பி, அதைச் செய்யாதீர்கள்' எனப் பன்மை வினையில் கூறும்போது, பெரியவர்களுக்குத் தரும் மரியாதை தனக்கும் தரப்படுவதை எண்ணி, தான் சிறுபிள்ளைத்தனமாக இல்லாமல், வளர்ந்த மனிதரைப் போல் நடக்க வேண்டும் என்னும் எண்ணம் தோன்றி, அச்செயலைச் செய்யாமல் விடுவான்.

இதையே, எல்லாச் சமயமும் பயன்படுத்தினால், விளைவு நிகழுமா?

புறனடை

***456.*** **செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்**
**மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்**
**பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது**

*சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்.*

**பொருள்:** செய்யுள் இடத்திலும், பேச்சு இடத்திலும், பொருண்மை பெறவும், வடிவம் பெறவும் தோன்றிய சொற்கள் எல்லாம், பல்வேறு வகையாக மாறியமைவதை, எழுத்துநெறி தவறாமல், சொற்களைப் பலவாறு உருவாக்கி, பொருண்மைகள் மாறுவதை, சொல்லைப் பகுக்கும் அறிஞர்கள் காட்ட வேண்டும்.